# அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வரலாறு

## (1776 - 2000)



முனைவர் குரு. ஜெகந்நாதன்

தமிழ்நாடு மாநில உயர்கல்வி மன்றம்
சென்னை- 600 005.

# அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வரலாறு (1776-2000)

முனைவர் குரு. ஜெகந்நாதன்

தமிழ்நாடு மாநில உயர்கல்வி மன்றம்
காமராசர் சாலை/ சென்னை-600 005.

முதற்பதிப்பு : 2014

பதிப்புரிமை : தமிழ்நாடு மாநில உயர்கல்வி மன்றம்
சென்னை – 600 005.

நூலின் பெயர் : அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வரலாறு
1776–2010



நூலாசிரியர் பெயர் : முனைவர் குரு. ஜெகந்நாதன்
வரலாற்றுத் துறை தலைவர் (ஓய்வு)
அரசு கலைக்கல்லூரி
திருச்சிராப்பள்ளி – 22.

மறு ஆய்வு செய்தவர் : முனைவர் அ. சுப்பையன்,
பேராசிரியர் (ஓய்வு)
வரலாற்றுத் துறை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர் – 608 002.

தமிழ் திருத்தம் செய்தவர் : முனைவர் ஜே.வி.கே. மீனாட்சி,
இணைப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அரசினர் ஆடவர் கலைக்கல்லூரி (தன்னாட்சி
நந்தனம், சென்னை – 600 035.



விலை : ரூ. 112/–

அச்சிட்டோர் : மீரா ஆப்செட் பிரிண்டர்ஸ்
104/184, வெங்கட்ரங்கம் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை 600 005.

# பொருளடக்கம்

**அலகு 3**



**அலகு 4**



**அலகு 5**

**அலகு 6**

# முகவுரை

அமெரிக்கக் கண்டத்தின் (Continent) வரலாறு கி.பி. பத்தாம் நூற்றாண்டிலிருந்து அறிய முடிகிறது. அப்போது வைகிங்குகளும் (Vikings) நார்மன்களும் (Normans) அமெரிக்கக் கண்டத்தின் வடகிழக்குப் பகுதிகளுக்குச் சென்று வந்துள்ளனர். இந்தப் புதிய உலகினை ஐரோப்பியர்களுக்கு அறிமுகப்படுத்தியவர்கள் கொலம்பஸும் (Colombus), அமெரிக்கோ வெஸ்புச்சி (Amerigo Vespucci), வால்டர்ராலே போன்ற மாலுமிகள்தான். கி.பி. 1492இல் கிறிஸ்டோபர் கொலம்பஸ், ஜெனோவா நகர கடல்மாலுமி, ஸ்பெயின் அரசருக்காக மேற்கொண்ட கடற்பயணத்தினால் புதிய உலகில் பஹாமா தீவுக்கூட்டங்களை கண்டறிந்தார். அன்றிலிருந்து அமெரிக்க நாட்டு வரலாறு தொடங்குவதாக பேராசிரியர் C.P.ஹில் கூறுவார். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வரலாறு என்பது வட அமெரிக்கக் கண்டத்தில் ஐரோப்பிய நாடுகள் - இங்கிலாந்து, பிரான்ஸ், நெதர்லாந்து நாடுகள் - அப்பரந்த நிலப்பரப்பில் குடியேறி புதிய நாடுகளை உருவாக்கி அரசுகளை அமைத்துக் கொண்ட வரலாறுதான் என்று கூறுவது சரியானதுதான். 'ஒரு பெரும் நிலக் கண்டத்தை மனித வாழ்க்கைக்கு ஏற்றதாக எப்படி பக்குவப்படுத்தி உரிமையாக்கிக் கொள்வதென்பதை விளக்குவதுதான் ஐக்கிய அமெரிக்காவின் வரலாறு ஆகும்' என்று பொருளாதாரப் பேராசிரியர் H.A.ஃபால்கனர் கூறுகின்றார்.

தென் மற்றும் மத்திய அமெரிக்கக் கண்ட பகுதிகளில் ஸ்பெயின் தனது ஆதிக்கத்தை நிலைநாட்டி தனக்குச் சொந்தமான குடியேற்ற நாடுகளை உருவாக்கிக் கொண்டன. இங்கிலாந்தும், நெதர்லாந்தும் வடஅமெரிக்கக் கண்டத்தில் கிழக்கே அட்லாண்டிக் கடற்கரையோரம் வடக்கே மெயினிலிருந்து தெற்கே புளோரிடா வரை தங்களது குடியேற்றங்களை ஏற்படுத்திக் கொண்டன. பிரெஞ்சுக்காரர்கள் வடக்கே கனடா பகுதியிலும், அப்பலாச்சியன் மலைத்தொடருக்கு மேற்குப் பகுதியிலும் குடியேற்றங்களை நிறுவின. குடியேற்ற நாடுகளை நிறுவும் ஆதிக்கப் போட்டியில் வட அமெரிக்கக் கண்டத்தில் வெற்றி பெற்றவர்கள் ஆங்கிலேயர்களே. பிரெஞ்சுக்காரர்களும், நெதர்லாந்து நாட்டவரும் தங்கள் முயற்சிகளை முடிவில் விட்டுவிட்டனர். ஆங்கிலேயர்களே நிலையான குடியேற்றங்களை நிறுவி, இங்கிலாந்தின் காலணி ஆதிக்கத்தில் ஆளப்பட்டு பின்னர் தங்கள் தாய்நாட்டிற்கு எதிராக சுதந்திர வேட்கையுடன் கிளர்ந்தெழுந்து, போரிட்டு சுதந்திரமான நாடுகள் பதின்மூன்றை உருவாக்கி, சுதந்திரப் போரின்போது ஏற்பட்ட ஐக்கியத்தை சிதையாமல் காப்பாற்றி ஒரு கூட்டாட்சி அரசியலமைப்பை (Federal Constitution) உருவாக்கி 'அமெரிக்க ஐக்கிய நாடுகள்' என்ற புதிய அரசுமுறையை உலகிற்கு முதலில் அறிமுகப்படுத்தியவர்கள் அமெரிக்கர்களே. மன்னராட்சி முறைக்கு மாற்றாக மக்களாட்சி முறையை அறிமுகப்படுத்தியவர்கள் அமெரிக்கர்களே. இம்மக்களாட்சிமுறை எப்படி இயங்க வேண்டும் என்பதை அமெரிக்க சுதந்திரப் போரில் ஈடுபட்ட பெரியோர்கள் ஒன்றுகூடி, திட்டமிட்டு, ஒரு எழுதப்பட்ட அரசியலமைப்பின் மூலம் செயல்படுத்திக் காட்டினார்கள். இந்த வரலாறு கி.பி.1776 முதல் தொடங்குகின்றது.

பதினைந்து, பதினாறாம் நூற்றாண்டில் ஐரோப்பிய நாகரிகத்தின் விரிவாக்கம் குறிப்பாக உலகெங்கும் பரவியது. உலகின் மேற்குப் பகுதிகளில் குறிப்பாக வடஅமெரிக்கக் கண்டத்தில் பரவி நிலைபெற்றது. எனவே 'ஐரோப்பிய ஆங்கில நாகரிகத்தின் தொடர்ச்சியான வரலாறுதான் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வரலாறு', என்பார் பேராசிரியர் H.P.பார்க்ஸ்.

'வனங்கள் சூழ்ந்த சுற்றுச்சூழலில் ஒரு பழைய கலாச்சாரம் ஊடுருவியதின் பின்விளைவுகள் எப்படியிருந்தன என்பதை விளக்கும் வரலாறுதான் அமெரிக்க வரலாறு', என அல்லன் நெவின்ஸ் மற்றும் H.S.கொம்மகெர் (The story of America is the story of the impact of an old culture upon a wilderness environment) கூறுகின்றார். மேலும், "ஆங்கில குடியேற்றங்கள் 1607ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தின் ஒரு காலைப் பொழுதிலிருந்து தொடங்குகிறது" என்பார். இலண்டன் கம்பெனி என்ற நிறுவனம் புதிய உலகிற்கு 120 மனிதர்களை அனுப்பியதில் 104 பேர்தான் கரை சேர்ந்தனர். வர்ஜீனியா பகுதியில் அவர்கள் உருவாக்கியதுதான் ஜேம்ஸ்டவுண் என்ற குடியேற்றமாகும். இதன் பின்னர் அடுத்தடுத்து, அட்லாண்டிக் கரையோரம் வரிசையாக 13 குடியேற்றங்கள் நிறுவப்பட்டன. இந்தக் குடியேற்றங்களில் வாழ்ந்தவர்கள் மேலும் மேலும் மேற்கே நகர்ந்து, காடுகளை அழித்து புதிய குடியேற்றங்களை நிறுவிய வரலாறுதான் 'மேற்கு நோக்கி நகர்தல்' என்பதாகும். இந்த நகர்தல் 1890இல் முடிவுற்றது. கிழக்கே அட்லாண்டிக் கடற்கரையிலிருந்து மேற்கே பசிபிக் கடற்கரை வரையுள்ள நிலப்பகுதி முழுவதும் வெற்றி கொள்ளப்பட்டது.

ஒருபுறம் நிலப்பகுதி முழுவதும் மக்கள் பரவி வேளாண்மையையும், தொழிலையும் அபிவிருத்தி செய்து வரும்போது, அடிமை பிரச்சனை சம்பந்தமாக நாடு வடக்கு தெற்கு எனப் பிரிந்து ஒரு பெரும் போர் புரிய வேண்டிய சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டனர். இறுதியில் அடிமைமுறை ஒழிக்கப்பட்டு அனைவருக்கும் சமஉரிமை என்ற ஜனநாயகக் கோட்பாடு நடைமுறைப்படுத்தப்பட்டது. ஆனால் இதற்காக பாடுபட்ட தலைவர் ஆப்ரஹாம் லிங்கனை பலிகொடுக்க வேண்டியிருந்தது.

போரினால் அடிபட்டவர்கள், நாசமடைந்த தங்கள் நாட்டை மீண்டும் நல்ல நிலைக்குக் கொண்டுவர புனரமைப்புப் பணிகளில் ஈடுபட்டனர். மேற்குப் பகுதியில் குடியேறியவர்கள் அங்குள்ள கனிமப்பொருட்களை வெளிக்கொணர்ந்து ஒரு மாபெரும் தொழிற்புரட்சியை உருவாக்கினார்கள். புதிய நிலங்களில் வேளாண்மை ஒரு பக்கம் விரிவடைந்தது. இன்னொரு பக்கம் அனைத்து கனரக தொழில்களும் பெருகின. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் பெரும் வாணிப வளர்ச்சியின் விளைவாக அமெரிக்கா ஒரு செல்வச்செழிப்பு மிக்க நாடாக மாற முடிந்தது.

திரட்டிய செல்வத்தை பக்கத்தில் உள்ள இலத்தீன் அமெரிக்க நாடுகளில் முதலீடு செய்து அந்த நாடுகளை வளமாக்கியதுடன் தங்களுடைய செல்வத்தை பன்மடங்காகப் பெருக்கிக் கொண்டனர் அமெரிக்க தொழிற்துறை முதலாளிகள். இந்த முதலீட்டாளர்களின் நலன்களையும், அமெரிக்க முதலீடுகளையும் காப்பாற்ற வேண்டிய கட்டாயச் சூழ்நிலையினால் அமெரிக்கா பிற நாட்டு அரசியல்

விவகாரங்களில் தலையிட வேண்டியதாயிற்று. ஜார்ஜ் வாஷிங்டனின் தனித்திருக்கும் கொள்கையும், ஜேம்ஸ்மன்றோவின் தலையிடாக் கொள்கையும் இறுதியில் கைவிடப்பட்டு அமெரிக்கா உலக விவகாரங்களில் தலையிட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அமெரிக்காவும் உலக வல்லரசாக மாறியது. ஐரோப்பாவில் ஏற்பட்ட போர் சூழ்நிலை முதல் உலகப்போராக வடிவெடுத்தது. உலகப்போரில் நேரடியாகத் தலையிடத் தயங்கிய அமெரிக்கா, போரில் நேச நாடுகளையும், ஜனநாயகத்தையும் காப்பதற்காக வேண்டி தலையிட வேண்டியிருந்தது. அமெரிக்காவின் மத்தியஸ்தத்தை ஐரோப்பிய நாடுகள் ஏற்க வேண்டியிருந்தது. உலகில் அமெரிக்காவின் செல்வாக்கு உயர்ந்தது. தொழிலிலும், படைபலத்திலும் முதன்மை நாடாக மாறியது. நிலத்தை வெற்றி கண்ட அமெரிக்கர்கள் இப்போது கடல் கடந்த நாடுகளிலும் தங்கள் செல்வாக்கை நிலைநிறுத்த முடிந்தது. அமெரிக்காவின் உதவி அனைத்து நாடுகளுக்கும் தேவைப்பட்டது.

இந்நிலையில் ஐரோப்பாவில் நாசிசமும், பாசிசமும் முறையே ஜெர்மனி, இத்தாலியில் கொடுங்கோல் ஆட்சியை அமைத்தன. ரஷ்யாவில் கம்யூனிசம் மேலோங்கியது. மீண்டும் இங்கிலாந்து ஜெர்மனிக்கிடையே உருவான மோதல் இரண்டாம் உலகப்போராக மாறியது. ஜெர்மனி, இத்தாலியுடன் பசிபிக் பிராந்தியத்தில் செல்வாக்கு பெற நினைத்த ஜப்பானும் சேர்ந்து கொள்ள உலகின் ஜனநாயக நாடுகள் அச்சுறுத்தப்பட்டபோது மீண்டும் அமெரிக்கா ஜனநாயகத்தைக் காப்பாற்ற போரில் கலந்து கொள்ள வேண்டியதாயிற்று. போரின் சீரழிவுகள் உலகமெங்கும் இருந்தன. மீண்டும் புனரமைப்புகளை மேற்கொள்ள

வேண்டியதாயிருந்தது. இச்சமயத்தில் அமெரிக்காவிற்கும் ரஷ்யாவிற்கும் இடையே பனிப்போர் தொடங்கியது. இதனால் உலகில் உள்ள நாடுகள் இரண்டாகப் பிரிந்தன. உலக நாடுகள் யாவும் ஒன்று அமெரிக்க ஆதரவு நாடாகவும் அல்லது கம்யூனிச ஆதரவு நாடாகவும் மாறியது. இதன் விளைவாக, எகிப்து-இஸ்ரேல், வடகொரியா-தென்கொரியா, வட, தென் வியட்நாம் மோதல்களில் அமெரிக்காவும், ரஷ்யாவும் மோதிக்கொண்டன. கம்யூனிசத்தின் ஆதிக்கத்தை தடுத்து நிறுத்த உலக நாடுகள் அனைத்திற்கும் அமெரிக்காவின் தாராள நிதியுதவி கிட்டியது. வறுமையையும், ஏழ்மையையும் வெற்றி கொள்ள முடியாத கம்யூனிசம் ரஷ்யாவில் ஐக்கியத்தை நிலைநாட்ட முடியாமல் சிதைந்தது. சோவியத் யூனியன் உடைந்துவிட்ட பின்னர் அமெரிக்கா எதிர்ப்பதற்கு யாருமில்லா ஏகபோக நாடாக இன்று இருந்து வருகின்றது. உலகில் அமைதியையும், ஜனநாயகத்தையும் காக்க அமெரிக்கா மேற்கொள்ளும் முயற்சிகளுக்கு இடையூறாக இன்று ஈரான், ஆப்கானிஸ்தான், பாகிஸ்தான் போன்ற நாடுகளில் இஸ்லாமிய தீவிரவாதம் வலுவடைந்து வருகின்றது. இன்று இருபத்தியோராம் நூற்றாண்டில் தீவிரவாதத்திற்கு எதிரான போரில் அமெரிக்கா ஈடுபட்டு வருகின்றது. இதுவே அமெரிக்க அரசியல் வரலாற்றின் சுருக்கம்.

அமெரிக்காவின் மறுபக்கத்தைப் பற்றி பல ஆராய்ச்சி நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன.

"அமெரிக்கா மற்ற பிரதேசங்களைப் போல் யுத்தங்களால் பாதிக்கப்பட்டதில்லை. அவர்கள் முன்னின்று நடத்தும் சூத்திரதாரிகளாகவே இருந்திருக்கிறார்கள்.

யுத்தங்களை வருமானம் தரும் ஒரு தொழிலாக அவர்கள் வைத்துக்கொண்டு இருக்கிறார்கள். தமது யுத்தங்களுக்கு அமெரிக்கா சொல்லுகிற காரணங்கள் மிக முக்கியமானவை. அமெரிக்காவின் இன்றைய பிரம்மாண்டமான வெற்றிகளுக்கும், வல்லரசுப்பட்டத்திற்கும் அந்தக் காரணங்கள்தாம் ஆதாரம்".

ஒரு காலத்தில் உலக வரலாற்றை அறிய வேண்டுமெனில் இங்கிலாந்தின் வரலாற்றை முழுமையாகப் படித்தால் போதுமானதாக இருந்தது. ஆனால் இன்று இருபதாம் நூற்றாண்டு தொடக்கம் முதல் உலக வரலாற்றில் அமெரிக்காவின் பங்கு மிக முக்கியமாக உள்ளது. எனவே அமெரிக்க வரலாற்றைப் படித்தால் உலக வரலாற்றை அறிந்து கொள்வது எளிதாகும்.

"தனக்கு லாபமில்லாத எந்த ஒரு தேசத்துடனும் அமெரிக்கா உறவு வைத்துக்கொண்டதில்லை. உள்நாட்டு விவகாரங்களில் பங்கு கொண்டதில்லை. யுத்தங்கள் தொடுத்ததில்லை என்பது அதன் சரித்திரம் முழுவதும் காணக் கிடைக்கும் உண்மை".

"இரண்டாம் உலகப்போர் முடிவடைந்தபின் தொடங்கி இன்றுவரை உலக நாடுகள் அனைத்தையும் தன் கட்டளைக்குக் கீழ்படியச் செய்யும் வல்லமை கொண்ட தேசமாக, ஓர் அச்சுறுத்தும் சக்தியாக இருந்து வருகிறது அமெரிக்கா. நேற்றைய ஆப்கானிஸ்தான், ஈராக் சம்பவங்கள் வரை எத்தனையோ பல தேசங்களின் உள் விவகாரங்களில் தலையிட்டு கோர யுத்தங்கள் நிகழ்த்தி, அமைதியைச் சீர்குலைத்து மறுபடியும் அமைதிப் பயிர் விதைக்கிறேன் என்று விடாமல் ஒரே காரியத்தைத்தான் அவர்கள் மீண்டும் மீண்டும் செய்து கொண்டிருக்கிறார்கள்" என்ற கருத்து

அமெரிக்காவின் மறுபக்கத்தை ஆராய்ந்தவர்கள் கூறும் கூற்றாகும்.

மற்றொரு ஆய்வாளர் "இன்று அமெரிக்காவைப் பகைத்துக் கொள்ள பல நாடுகள் பயப்படுகின்றன. ஏனெனில் உலக வர்த்தகம் முழுவதும் கிட்டத்தட்ட அமெரிக்காவைச் சார்ந்தே இருக்கிறது. மேலும் இன்றைய அமெரிக்காவின் பொருளாதாரச் சரிவு அமெரிக்காவை மட்டுமல்ல உலகையே பாதித்திருக்கிறது" என்று கூறுகின்றார்.

ஐரோப்பா மற்றும் பிற உலக நாடுகளில் இனம், மொழியின் அடிப்படையில் தேசங்கள் (Nations) உருவாக்கப்பட்டன. ஆனால் அமெரிக்கா என்ற நாடு அப்படி உருவானதில்லை. இனம், மொழிக்கு இங்கு முக்கியத்துவம் இல்லாமல் உலகில் உள்ள அனைத்து இன மக்களும், மொழி பேசுவோரும், பல்வேறு கலாச்சாரம் பண்பாடு கொண்டவர்களும் இங்கு குடியேறி தங்களை 'அமெரிக்கர்கள்' என்று அழைத்துக் கொண்டனர். இங்கு பல்வேறு மக்களின் கலாச்சார சங்கமம் நிகழ்ந்துள்ளது (Melting Pot). உலக மாந்தர்கள் அமெரிக்க மண்ணில் குடியேறியவுடன் 'அமெரிக்கர்கள்' ஆகிவிடுகின்றனர் என்பதே உண்மை. அங்கு செல்கின்றவர்கள் தங்கள் தாய்நாட்டை மறந்து விடுகின்றனர். இதற்குக் காரணம் அந்நாட்டின் செல்வச்செழிப்பு, வேலைவாய்ப்பு, வசதியான வாழ்க்கை, தனிமனித சுதந்திரம், மற்றவர்களை மதித்தல், சுத்தம், தரமான கல்வி, திறமைக்கு ஏற்ற பதவிகள் போன்றவை அங்கு கிடைக்கின்றன. இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் அந்த நாடு ஒரு வளமையான நாடு. அந்த வளமையை மக்கள் சமுதாயத்தின் நலனுக்கு நன்கு பயன்படுத்திக் கொள்கிறார்கள் என்பதே உண்மை.

## அலகு 1.1

# நிலவியல் கூறுபாடுகள்

"மனிதன் இயற்கையை மாற்றுவதும், இயற்கை மனிதனைத் திருத்துவதும் கண்கூடு. ஒன்றையொன்று திருத்திச் செம்மைப்படுத்திக் கொள்வதன் விளைவாகவே எல்லா நிகழ்ச்சிகளும் தவிர்க்க முடியாத நிலையில் உருவாகின்றன"!

ஹென்றி.டி.பக்கிள்.

ஐக்கிய அமெரிக்க நாட்டின் பரப்பளவு சுமார் 90 இலட்சம் சதுர கிலோமீட்டர்கள் ஆகும். ஐரோப்பாவை விட மூன்றில் இரண்டு பங்கு பகுதியான பரப்பளவு உள்ளது ஆகும். இன்று உலகின் உணவு உற்பத்தியிலும், தொழிற்துறையிலும் முதலாவதாக இருப்பதற்குக் காரணம் அதனுடைய மண்வளம்தான். பொன் விளையும் பூமி. ஒரு நாட்டின் நிலத்தின் தன்மைதான் அந்த நாட்டின் பொருளாதார வளத்தை நிர்ணயிக்கின்றன. அங்கு வாழும் மக்களின் சமூக, அரசியல் கருத்துக்களையும், பழக்க வழக்கங்களையும், உடலமைப்பையும் உருவாக்குகின்றது. இந்த அடிப்படையில் அமெரிக்க நாகரிகமும் வரலாறும் அதனுடைய நில அமைப்பினால் பெரிதும் கவரப்பட்டுள்ளது. கிழக்கே அட்லாண்டிக் கடற்கரையோரம் குடியேறிய மக்கள் அங்கு நிலவிய நிலவியல் கூறுபாடுகளினால், வாழ்க்கைமுறையிலும், தொழிலிலும், கலாச்சாரத்திலும், எண்ணங்களிலும், அரசியலிலும் வேறுபட்டு இருப்பதைக் காணமுடிகின்றது. ஆரம்ப காலத்தில் குடியேறியவர்கள் தாங்கள் தேர்ந்தெடுத்த

நிலப்பகுதியின் தன்மைக்கு ஏற்ப இரண்டு வேறுபட்ட கலாச்சாரத்தை, பொருளாதாரமுறைகளைக் கடைப்பிடித்தார்கள். இதுவே ஆரம்பகால வடக்கு, தெற்கு குடியேற்ற நாடுகள் கொண்டிருந்த வாழ்க்கைமுறை. இறுதியில், ஒரு உள்நாட்டுப் போர் புரிய வேண்டியது காரணமாக அமைந்தது. இதற்கு முக்கியக்காரணம் நிலவியல் அமைப்பையே கூறலாம்.

வடக்கு, தெற்கு மாநில மக்கள் மேலும் மேற்கு நோக்கி நகர்ந்த போது அங்கு மேற்குப்புற அல்லது எல்லைப்புற கலாச்சாரம் என்று ஒன்று உருவானது. அது மேற்குப்புற நில அமைப்பு உருவாக்கிய கலாச்சாரமாகும். கிழக்கே அட்லாண்டிக் கடற்கரையிலிருந்து மேற்கே பசிபிக் கடற்கரைவரை சுமார் 4800 கிலோமீட்டர்கள் பயணிக்கும்போது அம்மக்கள் பல்வேறுப்பட்ட வாழ்கைமுறைகளை அனுபவிக்க வேண்டியிருந்ததற்குக் காரணம் அமெரிக்காவின் நிலவியல் கூறுபாடுகள்தான். மற்ற நாட்டு வரலாறுகளைவிட அமெரிக்க நாட்டு வரலாறு அதனுடைய நிலவியல், சீதோஷ்ண நிலைக்கு உட்பட்டதாக அமைந்துள்ளது.

## *நிலப்பிரிவுகள்*

### *1. அட்லாண்டிக் கடற்கரைச் சமவெளி*

வடக்கே நியுபௌண்ட்லாந்திலிருந்து தெற்கே புளோரிடா வரை பரவியுள்ள அட்லாண்டிக் கடற்கரையில்தான் ஆரம்பகால பதின்மூன்று குடியேற்றங்கள் ஏற்பட்டன. சுமார் இரண்டாயிரத்து நானூறு கிலோமீட்டர்கள் நீளம் உடையது. இயற்கைத் துறைமுகங்கள் உடையது. செசாபீக் வளைகுடா பகுதியில் முதன்முதலாக வர்ஜீனியா குடியேற்றம் ஏற்பட்டது. அட்லாண்டிக் கடற்கரையிலிருந்து

மேற்கே நானூறு கிலோமீட்டர் தொலைவில் அப்பலாச்சியன் மலைத்தொடர் தென்பகுதியில் கடற்கரையை விட்டு விலகியும் வடபகுதியில் கடற்கரையை ஒட்டியும் இருந்தது. இந்த மலைத்தொடருக்கும் கடற்கரைக்கும் இடைப்பட்ட பகுதிகளில் குடியேற்றங்கள் ஏற்பட்டன.

ஹட்சன் நதி தீரத்தில்தான் நியுயார்க் உருவானது. செசாபீக் வளைகுடா பகுதியில் சுஸ்குவாஹன்னா நதியின் முகத்துவாரத்தின்தான் மேரிலாந்த் மற்றும் விர்ஜீனியா உருவானது. டிலேவர் வளைகுடா வழியாகத்தான் சென்று பெல்சில்வேனியா குடியேற்றம் உருவானது. கிழக்குக் கடற்கரையில் இயற்கையாக ஏற்பட்டுள்ள நிலப்பிளவுகள் இயற்கை துறைமுகங்களை பெற்றுள்ளது. பால்டிமோர், சார்லஸ்டன், சாவன்னா, ஜாக்சன்வில்லி ஆகியனவாகும். தென்பகுதி கடற்கரையில் இயற்கையான பிளவுகள் இல்லாததால் வடபகுதியில் இருப்பது போன்ற துறைமுகங்கள் இல்லாமல் போய்விட்டது.

இந்தக் கடற்கரை சமவெளியின் தென்பகுதியும், அப்பலாச்சியன் மலைத்தொடரின் தெற்கேயும் உள்ள சமவெளிப் பிரதேசத்தின் மண்வளம் அமெரிக்க வரலாற்றில் முக்கியப் பங்கு வகிக்கின்றது. இயற்கை வளம் நிரம்பிய இந்த தென்பகுதியில்தான் பருத்தி பிரதானப் பயிராக பயிரிடப்பட்டது. புகையிலையும் விளைந்தது. இவை இரண்டும் இங்கிலாந்திற்கும் பிற ஐரோப்பிய நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன. இங்குதான் நீக்ரோ இன மக்கள் பண்ணைகளில் அடிமைகளாக பணியாற்றி வந்தனர். இதற்குக் காரணம் இங்கு நிலவிய தட்பவெப்பம். வெள்ளைப் பண்ணையார்கள் உழைக்க முடியாது. அதற்காகவே ஆப்பிரிக்காவிலிருந்து அடிமைகளை இறக்குமதி செய்தனர். இந்த அடிமைகளை விடுவிக்கத்தான் பிற்காலத்தில் உள்நாட்டுப்போர் ஏற்பட்டது என்பதை கவனிக்க வேண்டும்.

## 2. அப்பலாச்சியன் மலைப்பகுதி

அப்பலாச்சியன் மலைத்தொடருக்கும் கிழக்கே அட்லாண்டிக் கடற்கரை வரை பரவியுள்ள நிலப்பகுதியில்தான் குடியேற்றங்கள் நிறுவப்பட்டன. இம்மலைத்தொடர் மக்கள் மேற்கு நோக்கி நகருவதற்கு ஒரு தடையாக இருந்தது. இம்மலைத்தொடரின் மேற்குப்பகுதியில்தான் பிரெஞ்சுக் குடியேற்றங்கள் நிறுவப்பட்டன. செயிண்ட் லாரன்ஸ் நதி முகத்துவாரம் வழியாக பிரெஞ்சுக்காரர்கள் உள்ளே நுழைந்தனர். புளூரிட்ஜ், அங்கன்ஸ் போன்ற இணையான மலைத்தொடர்களை உள்ளடக்கியது அப்பலாச்சியன் மலைத்தொடர் ஆகும். வடக்கே நியுபௌண்ட்லாண்டிலிருந்து தெற்கே அலபாமா வரை பரவியிருக்கிறது. நியுஜெர்ஸியிலிருந்து ஜார்ஜியா வரை வடக்கு தெற்காக 960 கிலோமீட்டர் நீளமுள்ள பகுதியில் வளம் நிறைந்த பள்ளத்தாக்குகள் உள்ளன. மலை அமைப்புகளின் இருபுறங்களிலும் குறிப்பாக மேற்குப்புறத்தில் அகன்ற சமவெளிகள் உள்ளன. அவை மேற்கே உள்ள நீண்ட சமவெளியுடன் இணைந்து வருகின்றன. இப்பகுதி மூன்று இலட்சம் சதுர மைல்கள் பரப்பு கொண்டதாகும். இதில் 12000 சதுரமைல்கள் உழுவதற்கு லாயக்கற்றதாகும். மீதியுள்ள இடங்களில் அமெரிக்காவின் வளம் கொழிக்கும் பள்ளத்தாக்குகள் உள்ளன. மிகச்சிறந்த விவசாயப் பண்ணைகளைக் கொண்ட ஷினான்டோவா, கம்பர்லாண்டு, டென்னசி முதலியன இப்பகுதியில்தான் உள்ளது.

இம்மலைத்தொடரின் வடபகுதியில் மலைகள் கடற்கரையை நெருங்கியுள்ளன. நீர்வீழ்ச்சிகள் உள்ளதனால் நீராற்றல் பயன்படுத்தப்பட்டு தொழில்கள் வளரலாயிற்று. தென்பகுதியில் பென்சில்வேனியா பகுதியில் நிலக்கரி, இருப்பு கனிகள் கிடைக்கின்றன. பிட்ஸ்பர்க், பர்மிங்ஹாம்

போன்ற இரும்பு எஃகு நகரங்களும், சிகாகோ, காரி, கிளீவ்லாந்த் போன்ற தொழில் நகரங்களும் உள்ளன.

### *3. தென்பகுதி வளைகுடா தாழ்நிலங்கள்*

மூன்றாவது பகுதி தென்பகுதியில் உள்ள வளைகுடா மாநிலங்களின் தாழ்நிலங்கள் ஆகும். இது கிழக்குக் கடற்கரை மாநிலமான புளோரிடா, தென்ஜார்ஜியா, அலபாமா, மிசிசிபி, லூசியானா, கிழக்கு டெக்ஸாஸ் போன்ற மாநிலங்களை உள்ளடக்கியதாகும். இப்பகுதியின் முக்கிய விளைபொருள் பருத்தியாகும். லூசியானாவிலும், கிழக்கு டெக்ஸாஸிலும் இயற்கை வாயு, எண்ணெய் வகைகள் இரசாயனப் பொருட்கள் கிடைக்கின்றன.

### *4. பெருஞ்சமவெளி*

நான்காவது பிரிவு மிசிசிபி நதி பள்ளத்தாக்கில் அமைந்துள்ள பெருஞ்சமவெளியாகும். முப்பதாயிரம் சதுரமைல் பரப்பளவு கொண்டது. வண்டல்மண் நிறைந்தது. மேற்கே போகப்போக நில மட்டம் உயர்ந்து ராக்கி மலைத்தொடர் அடிவாரத்தை அடைகின்றது. மிசிசிபி சமவெளி வடக்கு தெற்காக நீண்டு, கிழக்கு மேற்காக அகன்று இருக்கின்றது. மேற்கு, கிழக்குப் பகுதிகளில் புல்வெளிகள் உள்ளன. இந்த மிசிசிபி சமவெளிதான் தானியக் களஞ்சியமாகும். கோதுமையும், பிற தானியங்களும் அபரிதமாக விளைகின்றன. மிசிசிபி ஆற்று கழிமுகத்தில் பருத்தி அபரிதமாக விளைகின்றது. உலகிலேயே நீளமான நதி இதுதான். நீர்வழி போக்குவரத்து நியுஆர்லியன்ஸ் துறைமுகத்தை இணைக்கின்றது. வட, தென் டகோடா மாநிலங்கள் கான்ஸாஸ், நெப்ராஸ்கா, அயோவா, மின்னசோட்டா, மிசௌரி, அர்கான்ஸாஸ் போன்ற மாநிலங்கள் அடங்கியுள்ளன.

### 5. கார்டில்லரா பகுதி

மேற்குப்பகுதியில் அமைந்துள்ள கார்டில்லரா பகுதி செழிப்புள்ள பள்ளத்தாக்குகள் இருந்தபோதிலும், இருபதில் பத்தொன்பது பங்கு விவசாயத்திற்கு ஏற்றதன்று. ஆனால் செம்பு, வெள்ளி, இரும்பு, தங்கம் போன்ற தாதுப்பொருட்கள் கிடைக்கின்றன. உலர்பண்ணைமுறை இப்பகுதிகளில் கடைப்பிடிக்கப்படுகின்றன. நிவேடா, உடாக், கொலரடோ, அரிஸோனா போன்ற மாநிலங்கள் இதில் அடங்கும். ராக்கி மலைத்தொடர் கூட்டம் இப்பகுதியில் உள்ளது.

### 6. பசிபிக் கடற்கரை

ராக்கி மலைத்தொடருக்கு மேற்கே பசிபிக் கடற்கரை வரை பரவியுள்ளது பசிபிக் கடற்கரை சமவெளி. இது வடக்குத் தெற்காக நீண்டு குறுகிய அளவுடன் விளங்குகின்றது. மித தட்பவெப்பம் நிலவுவதால் பழங்கள், காய்கறிகள் உற்பத்தியில் தலைசிறந்து விளங்குகின்றது. தென்பகுதியில் உள்ள கலிபோர்னியாவில் தங்கம் அதிக அளவில் கிடைக்கின்றது. எண்ணெய்யும் கிடைக்கின்றது. தென்பகுதியில் கலிபோர்னியா, வடபகுதியில் ஓரிகன், வாஷிங்டன் மாநிலங்கள் உள்ளன.

### 7. அலாஸ்கா, ஹவாய்

இவையிரண்டும் அமெரிக்க ஐக்கிய நாட்டின் தொடர்ச்சியான நிலப்பகுதியிலிருந்து விலகியிருக்கின்றன. அலாஸ்கா குளிர்நிறைந்த பகுதி. ரஸ்யாவிடமிருந்து விலைக்கு வாங்கப்பட்டது. 50 மாநிலங்களில் அலாஸ்காதான் நிலப்பரப்பில் மிகவும் பெரியதாகும். காடுகளும், மீன் பண்ணைகளும், தாதுப்பொருட்களும், இயற்கை வாயுக்களும் அபரிதமாக கிடைக்கின்றன. ஹவாய், நிலப்பகுதியிலிருந்து

1600 கிலோமீட்டருக்கு அப்பால் பசிபிக் கடலில் உள்ள தீவுக்கூட்டமாகும். ஐந்து எரிமலைகள் உள்ளன. கரும்பு, அன்னாசி பழ சாகுபடி அதிகம்.

ஐரோப்பிய குடியேற்றங்கள் அட்லாண்டிக் கடற்கரை பகுதிகளில் ஆரம்பிக்கப்பட்டன. இங்கு நிலவிய பூகோள அமைப்பு வசதியாக இருந்தது. ஆனால் ஆரம்ப காலங்களில் பழங்குடி மக்கள் ஆசியாவிலிருந்து அமெரிக்காவின் மேல்பகுதி வழியாக உள்ளே நுழைந்தனர். நுழைந்ததுமே கரடுமுரடான கார்டில்லாரஸ் மலைத்தொடர்கள் அவர்களுக்கு அனுகூலமாக இல்லாததால் அவர்களால் நிலையான குடியேற்றங்களை ஏற்படுத்த முடியவில்லை. கிழக்குப்புறம் உள்ள நதிகளின் வழியாக குடியேறியவர்கள் எளிதாக உள்நாட்டிற்கு வர முடிந்தது. மிசிசிபி நதி நாட்டின் மையத்தில் ஓடுவதால் உள்நாட்டுப் பகுதிகளில் குடியேற வாய்ப்பு ஏற்பட்டது. போக்குவரத்திற்கு பயன்பட்ட நதிகளின் நீளம் 4160 கிலோமீட்டர்களாகும். இரு சமுத்திரங்களைச் சுற்றியுள்ள கடற்கரை ஓரங்கள் 102400 கிலோமீட்டர்கள் ஆகும்.

அமெரிக்காவின் தட்பவெப்ப நிலையும் குடியேற்றங்கள் அமைய ஏதுவாக இருந்தது. சராசரி ஆண்டு தட்பவெப்ப நிலை 40 முதல் 70 டிகிரிக்குள்ளாகவே இருந்தது. நல்ல ஆற்றல் உடைய நாகரிக இனங்களைப் படைத்த ஐரோப்பிய பகுதியிலும் இதே தட்பவெப்பநிலை தான். உடல் உழைப்பிற்கும், மூளை உழைப்பிற்கும் தட்பவெப்பநிலைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. நீண்ட கோடைகாலமும், நல்ல குளிர்காலமும் கொண்ட தட்பவெப்பநிலை அமைந்தால் மனித சமூக வளர்ச்சி துரிதப்படும் என்பதற்கு அமெரிக்க ஐக்கிய நாடுகள் சான்றாகும். அதேபோல் ஓர் ஆண்டில் 10 அங்குலத்திற்கு குறைவாகவோ அல்லது 45 அங்குலத்திற்கு கூடுதலாகவோ மழை பெய்தால் மனிதனுக்குத் தேவையான

உணவுப் பண்டங்களாகிய கோதுமையை உற்பத்தி செய்ய இயலாது. இங்கு சராசரி ஆண்டு மழை 26.6 அங்குலங்கள் ஆகும். குறைந்த அளவு மழை தென்யுட்டாவில் ஐந்து அங்குலம் பெய்கின்றது. அதிக அளவு 60 அங்குல மழை வடகரோலினா, வாஷிங்டன், ஓரிகன், வளைகுடா கடற்கரைப் பகுதிகளில் பெய்கின்றது. அப்பலாச்சியன் மலைத்தொடருக்கு கிழக்கே ஆண்டொன்றுக்குச் சராசரியாக 30 முதல் 50 அங்குல மழை தேவையாகும். மண்ணில் ஈரக்கசிவு ஏற்படுவதற்கு 30 முதல் 50 அங்குல மழை வேண்டும். இந்த வாய்ப்பு அப்பலாச்சியன் மலைத்தொடருக்கு கிழக்குப் பகுதியில் உள்ளதால் விவசாயத்திற்கு ஏற்ற பகுதியாகும்.

பொதுவாக அமெரிக்காவை இரண்டு பகுதிகளாகப் பிரிப்பது நூறாவது தீர்க்கரேகையாகும். இந்தத் தீர்க்கரேகைக்கு கிழக்கே 20 அங்குலம் மழை பெய்கின்றது. மேற்கே உள்ள பகுதிகளில் 20 அங்குலத்திற்கு குறைவாகப் பெய்கின்றது. இப்பகுதியில் வறட்சி ஏற்படுவது உண்டு. மக்காளச்சோளத்திற்கும் கோதுமைக்கும் தேவையான மழையும் பொழிவது உண்டு. வறட்சி ஏற்பட்டு தானியங்கள் அழிவதும், காற்று உலர்ந்து பொடியான மண்ணை வாரி இறைப்பதும், நிலத்தை அழிப்பதும், மக்களை ஓடச்செய்வதும் இங்கு நடப்பதுண்டு.

### *பயிர் வகைகள்*

அமெரிக்கா உலகிற்கு வழங்கிய பயிர்கள் இரண்டு. ஒன்று மக்காச்சோளம், மற்றொன்று புகையிலை. ஒரு ஏக்கரில் மற்ற தானியங்களைவிட மக்காச்சோளம் இரண்டு மடங்கு கூடுதலாக விளைகின்றன. பருவகாலங்களை எதிர்நோக்கி சோளத்தை பயிரிட வேண்டிய கட்டாயம் இல்லை. நிலத்தை உழாமலேயே சோளத்தை பயிரிடலாம். இதன் காம்புகள்

கால்நடைகளுக்குத் தீவனமாகப் பயன்படுகின்றன. தொடக்க கால குடியேற்றங்கள் நிகழ்வதற்கு இச்சோளப்பயிர் ஒரு காரணமாகும். புகையிலை செல்வத்திற்கு அடிப்படையாக அமைந்தன. ஐரோப்பாவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. வர்ஜீனியா பகுதியில் இது இயற்கையாகவே விளைந்து இருந்தது.

இந்த இரண்டையும் தவிர தென்பகுதியில் பருத்தி பிரதானப் பயிராக விளங்கியது. பருத்தி பண்ணைகளில் பணிபுரிய அடிமைகள் கொண்டுவரப்பட்டனர். அடிமைமுறையின் காரணமாக உள்நாட்டுப்போர் ஏற்பட்டது. அரிசி உற்பத்தி மையம் டெக்ஸாஸ் ஆகும். லூசிரியானா, அர்கான்சாஸ், கலிபோர்னியா பகுதியிலும் அரிசி விளைந்தது. கரும்பு முழுவதும் லூசியானாவில் உற்பத்தியாகிறது. வெள்ளை உருளைக்கிழங்கு ஒவ்வொரு மாநிலத்திலும் பயிரிடப்படுகின்றன. பார்லி, ரை, ஓட்ஸ் கிழக்கு வடபகுதி மாநிலங்களில் பயிரிடப்படுகின்றன.

மிதமான தட்பவெப்பநிலையும், விசாலமான மேய்ச்சல்வெளியும் அமெரிக்காவில் இருப்பதனால் கால்நடை வளமும் செழித்து விளங்குகின்றது. பால் மாடுகள், இறைச்சிக்கு கால்நடைகள், பன்றிகள், செம்மறியாடுகள் பெருமளவில் வளர்க்கப்படுகின்றன. விஸ்கான்சின், நியுயார்க், கலிபோர்னியா, பென்சில்வேனியா மாநிலங்களில் கால்நடைபண்ணைகள் உள்ளன. பால் பண்ணைகளும் உள்ளன. பன்றி வளர்ப்பு தானியம் விளையும் அனைத்து மாநிலங்களிலும் உள்ளன. மேற்கே உள்ள மாநிலங்களில் கம்பளி உற்பத்தி நடைபெறுகின்றன. வடதிசை மத்திய மாநிலங்களில் கோழி வளர்ப்பு பண்ணைகள் உள்ளன. குதிரைகளுக்கும், கோவேறு கழுதைகளுக்கும் கான்சாஸ் சிறந்த சந்தையாக விளங்குகின்றன. அட்லாண்டிக் கடற்கரையின் வடபகுதியில் அமெரிக்காவின் மீன் உற்பத்தி

முழுவதும் அடங்குகின்றது. உலகப்புகழ் பெற்ற காட் மீன் இங்கு கிடைக்கின்றது.

பெட்ரோலியப் பொருட்கள் அபரிதமாக கிடைக்கின்றது. நிலக்கரி கிடைக்கும் பரப்பளவு ஐந்து இலட்சம் சதுரமைல்கள் ஆகும். இது நாட்டின் பரப்பளவில் ஏறக்குறைய 13 சதவீதமாகும். இருப்பு கனிகளின் பெரும்பகுதி சுப்பீரியர் ஏரி மாவட்டத்திலும், மின்னசோட்டா, மிக்சிகன், விஸ்கான்சின் பகுதிகளில் தோண்டியெடுக்கப்படுகின்றன. நாட்டின் பத்தில் ஒன்பது பங்கு இரும்புக் கனி சுப்பீரியர் ஏரி பகுதியில் கிடைக்கின்றது. செம்பு உலக உற்பத்தியில் மூன்றில் ஒரு பங்கு அமெரிக்காவிடமிருந்து கிடைக்கின்றன. இதில் பெரும்பகுதி அரிசோனா மாநிலத்தில் உற்பத்தியாகின்றது. துத்தநாகம் 19 மாநிலங்களில் வெட்டியெடுக்கப்படுகின்றன. ஈயம் 22 மாநிலங்களில் உற்பத்தி செய்யப்படுகின்றது. அலுமினியம், அர்கான்சாஸ், ஜார்ஜியா, அலபாமா, டென்னசி ஆகிய மாநிலங்களில் கிடைக்கின்றது. வெள்ளி ரிவேடாவில் அதிகம் கிடைக்கின்றது மற்றும் ஏழு மாநிலங்களில் கிடைக்கின்றது.

உலகில் அமெரிக்காவைப்போல் இயற்கை வளங்களைப் பெற்ற நாடுகள் கிடையாது எனலாம். தொழில்மயமாகும் ஒரு நாட்டிற்குத் தேவையான சகல விதமான தாதுப்பொருட்களும் அமெரிக்காவில் கிடைக்கின்றது. உலக மக்கள் அனைவருக்கும் உணவு அளிக்கும் தகுதி அமெரிக்காவிற்கு இருக்கின்றது. பெட்ரோலியம் மூலம் கிடைக்கும் ஆற்றல்வளங்களுடன், நீராற்றல் வளமும் பெருகிக் கிடக்கிறது. கடந்த மூன்று நூற்றாண்டுகளாக தனித்தியங்கும் பொருளாதாரமாக அமெரிக்கா திகழ்ந்து வருகின்றது. இன்றும் உலகிலேயே மிகவும் செல்வமும் செழிப்பும் கொழிக்கும் நாடாக அமெரிக்கா விளங்கி வருகின்றது. இது ஒரு பொன் விளையும் பூமி என்பதில் ஐயமில்லை.

## நிலப்பிரிவுகள்




1. அட்லாண்டிக் கடற்கரைச் சமவெளி
2. அப்பலாச்சியன் மலைப்பகுதி
3. தென்பகுதி வளைகுடா தாழ்நிலங்கள்
4. பெருஞ்சமவெளி
5. கார்டில்லரா பகுதி, ராக்கி மலைத்தொடர்
6. பசிபிக் கடற்கரை
7. அலாஸ்கா, ஹவாய்

### பிரதேச பிரிவுகள்




1. வடகிழக்குப் பகுதி,
2. மத்திய வடிமுனைப்பகுதி,
3. தென்கிழக்குதாழ்நிலங்கள்
4. பெரிய சமவெளி,
5. மலைகளும், பாலைவனப்பகுதியும்,
6. மேற்குமலைத்தொடர்பகுதி,
7. ஹவாய், அலாஸ்கா

## நதிகள்




1. மிசிசிபி
2. மிசௌரி
3. ஓஹையோ
4. கொலம்பியா
5. கொலராடோ
6. ரியோ கிராண்டி

## அலகு 1.2

# அமெரிக்க குடியேற்றங்களின் தோற்றமும் வளர்ச்சியும்

1. முன்னுரை
2. ஸ்பானிஸ் குடியேற்றங்கள்
3. பிரெஞ்சுக் குடியேற்றங்கள்
4. ஆங்கிலேயக் குடியேற்றங்கள் அமைக்கப்பட்டதற்கான காரணங்கள்
   (a) பொருளாதாரம்
   (b) சமயம்
   (c) அரசியல்
   (d) சமூகம்
5. குடியேற்றங்கள் அமைக்கப்படுதல்
   (a) செசாபிக் குடியேற்றங்கள்
   (b) புதிய இங்கிலாந்து குடியேற்றங்கள்
   (c) பிற்காலக் குடியேற்றங்கள்
6. குடியேற்ற மக்களின் பிரச்சனைகள்
7. குடியேற்ற மக்களின் அரசியல், சமூகம், பொருளாதார சமய வாழ்க்கை

## அலகு 1.2

# அமெரிக்க குடியேற்றங்களின் தோற்றமும் வளர்ச்சியும்

புதிய உலகில் புதிய சாம்ராஜ்யங்களை உருவாக்க வேண்டும் என ஐரோப்பிய நாடுகள் கனவு கண்டன. பொருள் திரட்ட வணிகர்கள் கனவு கண்டனர். அரசியல், மதம், பொருளாதார கெடுபிடியிலிருந்து விடுபட்டு அங்கு நிம்மதியாக வாழலாம் என மக்கள் கனவு கண்டனர்.

H.A.பால்கனர்.

ஐரோப்பாவில் பதினைந்தாம் நூற்றாண்டின் துவக்கம் புதிய மறுமலர்ச்சிக் கொள்கை உச்ச நிலையில் இருந்த காலமாகும். அரசியல் துறையில் நிலமான்ய, படைமான்ய முறைகள் ஒழிந்தன. தேசிய உணர்வு வளர்ந்தது. புதிய தேசிய அரசுகள் (Nation States) உருவாயின. புதிய நாடுகளையும், நிலப்பரப்புகளையும் காண வேண்டும் என்ற ஆர்வம் மக்களிடையே வளர்ந்தன. திசை காட்டும் கருவியும், உயரம் கணக்கிடும் கருவியும் கடல் பயணங்களுக்கு உறுதுணை புரிந்தன. இதனால் உலகில் பல பகுதிகளுக்கும் சென்று செல்வத்தைத் திரட்டவும் வணிகம் செய்யவும் மன்னர்கள் விரும்பினார்கள். ஐரோப்பாவிற்கும் கீழைநாடுகளுக்கும் இடையே தரைவழி வாணிபம் பெர்சியா, அரேபியா வழியாக நடந்து வந்தன. இத்தாலியும், போர்ச்சுக்கல்லும் வர்த்தகத்தில் சிறந்து விளங்கின. ஆனால் வர்த்தகப் பாதைகள் தொல்லைகள் நிறைந்தனவாயும், செலவு மிக்கவையாயும் இருந்தன. கி.பி.1453இல் ஆட்டமான் துருக்கியர்கள்

கான்ஸ்டாண்டிநோபிள் நகரத்தைக் கைப்பற்றி சிரியாவிலும், எகிப்திலும் தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டினர். பழைய பாதைகளை தடை செய்து தொல்லைகள் தந்தனர். இதனால் புதிய பாதைகளைக் கண்டுபிடிக்கும் நிர்பந்தம் ஏற்பட்டது.

புதிய பாதைகளை கண்டுபிடிப்பதில் போர்ச்சுகல் முதலிடம் பெற்றது. 1487இல் பார்த்தலோமியாடயஸ் தென்ஆப்பிரிக்காவின் தென்முனையை கண்டறிந்தார். 1492இல் கிறிஸ்டோபர் கொலம்பஸ் ஸ்பானிய அரசர் பெர்டினாண்டு மற்றும் அரசி இசபெல்லாவின் உதவியுடன் மேற்குத் திசையில் கடலில் செல்வதின் மூலம் கிழக்கிந்திய தீவுகளை அடைய முடிவும் என்று நம்பி பயணம் செய்தார். அவர் தரையிறங்கியது பஹாமா தீவு ஆகும். அதனை இந்தியா எனக் கருதினார். ஆனால் 1498இல் வாஸ்கோடகாமா தான் செய்த கடல் பயணத்தால் இந்தியாவின் மேற்கு கடற்கரையில் உள்ள கள்ளிக்கோட்டையை அடைந்தார். எனவே கொலம்பஸ் கண்டறிந்த இந்தியா 'மேற்கு இந்தியத் தீவுகளாயிற்று'. அங்குள்ள மக்கள் செவ்விந்தியர்கள் என அழைக்கப்பட்டனர். ஐரோப்பாவிலிருந்து மக்கள் குடியேறும் முன்னேரே அந்த நிலப்பகுதிகளில் பூர்வீக மக்கள் வாழ்ந்தனர். இவர்கள் மத்திய ஆசியாவிலிருந்தும் மங்கோலியாவிலிருந்தும் கால்நடையாகவே பேரிங் ஜலசந்தி வழியாக அலாஸ்காவில் நுழைந்து வடக்கிலிருந்து தெற்காக அமெரிக்கக் கண்டம் முழுவதும் பரவி வாழ்ந்தனர். இவர்களே அஸ்டக்குகள், மாயாக்கள், இன்காக்கள் என்ற செவ்விந்திய இன மக்கள் ஆவர். இவர்களே அமெரிக்க மண்ணின் சொந்தக்காரர்கள். மண்ணின் மைந்தர்கள்.

ஐரோப்பியர்கள் இம்மண்ணில் நுழைந்து, பூர்வீகக்குடிகளை ஒடுக்கி, அவர்களது பூமியை அபகரித்துக் கொண்டனர். புதிய உலகில் ஒவ்வொரு நாடும் தங்கள்

நாட்டை உருவாக்க நினைத்தனர். ஸ்பெயின் ஒரு புதிய ஸ்பெயினையும், பிரான்ஸ் ஒரு புதிய பிரான்சையும், ஹாலந்து ஒரு புதிய நெதர்லாந்தையும், இங்கிலாந்து ஒரு புதிய இங்கிலாந்தையும் உருவாக்க விரும்பினார்கள். இவ்வாறாக புதிய உலகம் ஐரோப்பியர்களின் குடியேற்ற நாடாக மாறியது.

### ஸ்பானியக் குடியேற்றங்கள்

அமெரிக்காவில் முதன்முதலில் குடியேற்றங்களை அமைத்த பெருமை ஸ்பானியர்களையேச் சாரும். ஸ்பானியர்கள் மத்திய-அமெரிக்கா, தென்-அமெரிக்கா போன்ற பகுதிகளிலேயே மிகுந்த கவனம் செலுத்தினர். வட-அமெரிக்காவில் குடியேறுவதில் சிறிதும் கவனம் செலுத்தவில்லை. இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு; முதலாவதாக, ஸ்பெயினிலிருந்து புறப்பட்ட மாலுமிகள், வியாபாரக் காற்றின் (Trade wind) உதவியுடன் தெற்கு நோக்கிச் செல்வதையே எளிதாகக் கருதினர்; இரண்டாவதாக தேவைக்கும் அதிகமாக அஸ்டக்குகள் (Aztecs) மாயாக்கள் (Mayas) இன்காக்கள் (Incas) போன்ற நாகரீக இனத்தவர் சேமித்து வைத்திருந்த தங்கமும், வெள்ளியும், விலையுயர்ந்த நவரத்தின கற்களும் அவர்களைக் கவர்ந்தன. இதுதவிர மெக்சிகோவின் வடஎல்லை கடப்பதற்கு கடினமாயிருந்தது; கலிபோர்னியாவின் வறட்சியும், அங்கு வீசும் காற்றும், கடுமையான பனிப்பொழிவும் வட-அமெரிக்காவில் குடியேறுவதற்கு தடையாய் அமைந்தன.

1521ல் கார்டஸ் (Cortez) மெக்சிகோவை கைப்பற்றினார்; 1535ல் பிஸாரோ (Pizarro) பெருவை கைப்பற்றினார். சுருக்கமாகக்கூறின் கயானா, பிரேசில் நீங்கலாக மத்திய-அமெரிக்கா, தென்-அமெரிக்கா முழுவதுமாக ஸ்பெயினுக்கு சொந்தமாயிருந்தது. கிழக்குக் கடற்கரையில் "புளோரிடா" என்ற குடியேற்றமும் அமைக்கப்பட்டது. இக்குடியேற்றங்களை அமைப்பதில்

வணிகர்களும், வீரர்களும், சமயப்பரப்பாளர்களும் பெரும்பங்கு வகித்தனர்.

### *பிரெஞ்சுக் குடியேற்றங்கள்*

ஸ்பெயினுக்கு அடுத்தபடியாக அமெரிக்காவில் பிரெஞ்சுக்காரர்கள் குடியேறினர். 1608ல் சாமுவேல் சாம்பளின் (Samuel champlain) கியூபெக் குடியேற்றத்தினை அமைத்தார். 1642ல் மாண்டரில் குடியேற்றம் அமைக்கப்பட்டது. விவசாயிகள், வியாபாரிகள், மீனவர்கள் இங்கு குடியேறினர். இரண்டாவது கட்டமாக 14ம் லூயியின் காலத்தில் லா-சேல் (La Salle) என்பவரின் முயற்சியால் "லூயியானா" (Louisiana) குடியேற்றம் அமைக்கப்பட்டது. இக்குடியேற்றம் 14ம் லூயியின் பெயரால் லூயியானா எனப்பட்டது. செயின்லாரன்ஸ் நதிக்கும் மிசிசிபிக்கும் இடைப்பட்ட பகுதியில் பிரெஞ்சு ஆதிக்கம் மிகுந்திருந்தது.

டச்சுக்காரர்கள், குறுமென்தோல் விலங்குகளை வேட்டையாடும் நோக்குடன் "புதிய நெதர்லாந்து" குடியேற்றத்தை நிறுவினர்; புதிய ஆம்ஸ்டர்டாம் இதன் தலைநகராக விளங்கியது. பின்னர் ஹட்சன் வளைகுடாவையொட்டி "நியூஜெர்சி" வரை தங்களது ஆதிக்கத்தை விரிவுபடுத்தினர். இதற்கிடையில் சுவிடிஷ்காரர்கள் டெலவர் ஆற்றினையொட்டி 'டெலவர்' (Delaware) குடியேற்றத்தினை அமைத்தனர். 1655ல் டச்சுக்காரர்கள் இதனை கைப்பற்றி புதிய நெதர்லாந்துடன் இணைத்துக் கொண்டனர். சுவிடிஸ்காரர்களிடமிருந்து 'மரக்குடிலில்' (Log Cabin) வாழும் கலையை அமெரிக்கர்கள் அறிந்து கொண்டனர்.

### *இங்கிலாந்து தனது குடியேற்றங்களை நிறுவ எடுத்த முயற்சிகள்*

கொலம்பஸ் புதிய உலகைக் கண்டுபிடித்த பின்னர் இங்கிலாந்தின் ஏழாம் ஹென்றி மன்னன், ஜான் கேபாட்

என்ற வெனீஸ் நகர மாலுமியை புதிய உலகிற்கு கடற்பயணங்கள் மேற்கொள்ள பணித்தார். அவர் கி.பி.1497 மற்றும் 1498 ஆண்டுகளில் இரண்டுமுறை பயணங்கள் மேற்கொண்டு நியுபௌண்ட்லாந்த் என்ற பகுதியைக் கண்டறிந்து வந்தார். இதன் மூலம் வடஅமெரிக்கப் பகுதி மீது இங்கிலாந்து உரிமை கொண்டாடியது. இதைத் தொடர்ந்து அடுத்த எண்பது ஆண்டு காலம் இங்கிலாந்து மீனவர்கள் இப்பகுதிகளுக்குச் சென்று மீன்பிடித்து வருவது வழக்கமாக இருந்தது. இங்கிலாந்து தனது கவனத்தைத் தீவிரமாகச் செலுத்த முடியாமல் ஐரோப்பிய போர்கள் மற்றும் சீர்திருத்தச் சட்டங்களில் கவனம் செலுத்த வேண்டியிருந்தது.

இதன்பின் முதலாம் எலிசபெத் அரசியாரின் ஆட்சியில் 1570இல் இலண்டன் நகர வணிகர்கள் கீழைநாட்டு வாசனை திரவியங்களை கொண்டு வரக்கூடிய ஒரு கடல்வழிபாதையை உருவாக்க நினைத்தனர். 1576இல் மார்டின் புரோபிஷர், லாப்ரடார் கடற்கரையை கண்டறிந்தார். அவரைத் தொடர்ந்து ஜான்டேவிஸ் ஹென்றி ஹட்ஸன், வில்லியம் பப்பின் போன்றோர் கனடாவின் வடபகுதி பிரதேசங்களை கண்டறிந்து இங்கிலாந்திற்கு உரிமையாக்கினர்.

1577இல் பிரான்சிஸ் டிரேக் இங்கிலாந்திற்கு ஒரு சிறந்த குடியேற்றத்தைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஆவலில் மெகலன் ஜலசந்தியைத் கடந்து தென்அமெரிக்காவின் மேற்குப் பகுதியைக் கடந்து வடஅமெரிக்காவில் உள்ள கலிபோர்னியா அடைந்தார்.

1578இல் சர்ஹம்பரே கில்பர்ட், எலிசபெத் அரசியாரிடமிருந்து கிறிஸ்தவர்கள் இல்லாத நாடுகளை குடியேற்றங்களாக்குவதற்காக ஒரு பட்டயம் பெற்றார். 1583இல் நியுபவுண்ட்லாந்து சென்று திரும்பிய வழியில் கப்பல் மூழ்கி இறந்துபட்டார். இவருக்குத் தரப்பட்ட உரிமை இவரது ஒன்றுவிட்ட சகோதரர் வால்டர்ராலே பெற்றார்.

1584இல் இவரது தளபதிகள் பிலிப் அமடாஸ் ஆர்தர் பர்லோ ஆகியோர் வடஅமெரிக்கா சென்று ரோனேக் தீவில் ஒரு குடியேற்றத்தை நிறுவினர். இதுவே வர்ஜீனியா என அழைக்கப்பட்டது. 1585இல் நூறு பேர் சென்று குடியேற முயன்று பின்னர் இங்கிலாந்து திரும்பி விட்டனர். மீண்டும் 1587இல் 150 பேர் ஜான் ஒயிட் என்பவரின் தலைமையில் புறப்பட்டனர். இவர்களும் நிரந்தரமாக அங்கு வாழ முடியவில்லை. இவர்களுக்குப் பின்னர் சிலர் எடுத்த முயற்சிகளும் தோல்வியில் முடிந்தனர். இறுதியாக வர்ஜீனியா பகுதியில் குடியேற்றங்களை நிறுவ 'இலண்டன் கம்பெனி' மற்றும் 'பிளைமஹுத் கம்பெனி' என்ற இரண்டு நிறுவனங்கள் முயற்சித்தன. அதற்காக 1606 ஏப்ரல் 10ஆம் தேதி முதலாம் ஜேம்ஸ் அரசரிடமிருந்து அனுமதி சாசனம் பெற்றனர். இவர்கள் செசாபீக் வளைகுடா பகுதியில் நிறுவிய குடியேற்றமே ஜேம்ஸ் டவுண் குடியேற்றமாகும்.

அமெரிக்காவில் ஆங்கிலேய குடியேற்றங்கள் அமைக்கப்பட்டதற்கான மூலகாரணம் பொருளாதாரமே; இதைத்தவிர சமய சுதந்திரம் வேண்டியும், அரசியல் அடக்குமுறைகளிலிருந்து விடுபெறவும், வீரதீர செயல்களுக்கான ஆர்வமும் துணையாயின.

### பொருளாதாரக் காரணம்

மக்கள்தொகை பெருக்கத்தால் இங்கிலாந்தில் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகிறது; இந்நிலையில் விளைச்சலும் பாதிக்கப்பட்டதால் மக்களின் துயரம் பன்மடங்காயிற்று. இந்த சூழ்நிலையில், நிலப்பிரபுக்கள் தங்கள் வருவாயை பெருக்கிட கம்பள உற்பத்தியை பெருக்க எண்ணினர்; இதனால் விளைநிலங்களை மேய்ச்சல் நிலங்களாக்கினர். ஏராளமான விவசாயிகள் தங்கள் நிலங்களிலிருந்து விரட்டப்பட்டனர். கம்பள பற்றாக்குறையால் கம்பள நெசவும் வெகுவாக

பாதிக்கப்பட்டது. இந்நிலையினை சமாளிக்க புதிய உலகில் குடியேற்றங்களை அமைக்க விரும்பினர்.

நிலமான்ய திட்டம் அழிந்ததால், குடியானவர்கள் சுதந்திர மனிதர்களாயினர்; நடுத்தர மக்களும், வணிகர்களும் செல்வச்செழிப்புடன் விளங்கினர்; தங்களிடமிருந்த அதிகப்படியான மூலதனத்தைக் கொண்டு கூட்டுவணிக நிறுவனங்களை (Joint Stock Company) படைத்தனர். இந்நிறுவனங்கள் மூலம் புதிய உலகில் குடியேற்றங்களை அமைத்து செல்வம்கொழிக்க எண்ணினர்.

***சமயக்காரணம்***

இங்கிலாந்து நாட்டைச் சார்ந்த 'பியூரிட்டன்கள்' சமயப்பூசலின் காரணமாக ஹாலந்திலுள்ள 'லெய்டனில்' (Leyden) குடியேறினர். அங்கு எதிர்பார்த்த அளவிற்கு சமயச் சுதந்திரம் கிடைக்காததால் ஒருசாரார், அமெரிக்காவில் குடியேறும் எண்ணத்துடன் இங்கிலாந்திற்குத் திரும்பினர். அவர்கள் 'மேபிளவர்' (May flower) என்ற கப்பலில் புதிய உலகுக்கு பயணமாயினர்; அவர்களையே "யாத்ரீகத் தந்தையர்" (pilgrim fathers) என்று அழைக்கின்றனர்.

இவ்வாறே கத்தோலிக்கர் நலன் வேண்டி செசில் கால்வர்ட் (Cecil Calvert) மேரிலாந்து குடியேற்றத்தையும்; குவேக்கர்களின் (Quakers) நலனுக்காக வில்லியம்பென் (William penn) பென்சில்வானியாவையும் (Pensylvania) படைத்தனர். மேலும் சமய சுதந்திரம் வேண்டி ஜெர்மானியர்களும், ஹியூக்கோனாக்களும் அமெரிக்காவில் குடியேறினர்.

***அரசியல் காரணம்***

முதலாம் சார்லஸின் அடக்குமுறையையும் ஆணவப்போக்கையும் வெறுத்த மக்கள் பெருமளவில் அமெரிக்காவில் குடியேறலாயினர். அவர் சிரச்சேதம்

செய்யப்பட்டதையடுத்து, ஆலிவர்கிராம்வெல் (Oliver Gromwel) ஆட்சிப்பொறுப்பேற்றார்; அரசனுக்கு ஆதரவாக செயல்பட்ட 'கவாலியர்கள்' (Cavaliers) தண்டனைக்கு அஞ்சி புதிய உலகில் தஞ்சம் புகலாயினர்.

இதுபோன்ற அடக்குமுறைகளாலும், நீண்டகால சமயப் போர்களாலும் பாதிக்கப்பட்ட ஜெர்மானியர்களும், பிற ஐரோப்பிய நாட்டவர்களும் கூட நீண்ட அமைதியைத் தேடி அமெரிக்காவில் குடியேறலாயினர்.

### சமூகக்காரணம்

இங்கிலாந்தில் கடன்பட்டவர்கள், கடனை திருப்பிக் கொடுக்க முடியாத நிலையில் சிறையில் தள்ளப்பட்டனர். அவர்களின் புனர்வாழ்வுக்காக, ஜேம்ஸ் எட்வர்டு ஆக்ளேதார்ஃப் (James Edward Oglethorpe) என்ற சமூக சீர்திருத்தவாதி 'ஜார்ஜியா' குடியேற்றத்தை அமைத்தார்.

### குடியேற்றங்கள் அமைக்கப்படுதல்

ஆங்கிலேயக் குடியேற்றங்கள் அனைத்தும் வணிக வசதியைக் கருத்தில் கொண்டு, இயற்கைத் துறைமுகங்கள் நிறைந்த அட்லாண்டிக் கடற்கரையிலேயே அமைக்கப்பட்டன என்பதும்; இக்குடியேற்றங்கள் அரசாங்கத்தால் அல்லது தனிப்பட்ட நபர்களாலும், குழுக்களாலும் அமைக்கப்பட்டது என்பதும் அதன் தனிச்சிறப்புகளாகும். இக்குடியேற்றங்களை முறையே மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவையாவன:- முதலாவதாக வர்ஜினியாவையும், மேரிலாந்தையும் உள்ளடக்கிய செசாபிக் குடியேற்றங்கள் (Chesapeake colonies); இரண்டாவதாக, மாசசூசெட்ஸ், கனக்டிகட், ரோடுஐலாந்து, நியூஹாம்ஷையர் கொண்ட, புதிய இங்கிலாந்து குடியேற்றங்கள் (New England colonies); மூன்றாவதாக, வட-கரோலினா, தென்-கரோலினா, நியூயார்க், நியூஜெர்சி, பென்சில்வானியா, டெலவர், ஜார்ஜியா

ஆகியவற்றைக் கொண்ட பிற்காலக் குடியேற்றங்கள் (Later colonies) எனலாம்.

## (a) சசாபிக் குடியேற்றங்கள்

### *வர்ஜீனியா (1607)*

ஆங்கிலேயர்களின் முதல் குடியேற்றம் என்ற சிறப்பிற்குரியது. இங்கிலாந்து நாட்டு அரசி முதலாம் எலிசபெத் திருமணம் செய்து கொள்ளாததால் 'கன்னிஅரசி' (Virgin Queen) என்றழைக்கப்பட்டார்; இவரது பெயராலேயே இக்குடியேற்றம் வர்ஜீனியா என்றழைக்கப்பட்டது. இப்பெயரினைச் சூட்டிய பெருமை சர். வால்டர் ராலேவைச் சாரும். முதலாம் எலிசபெத் காலத்தில் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் போதிய பலனை அளிக்கவில்லை.

முதலாம் ஜேம்ஸ் மன்னரின் காலத்தில் 'இலண்டன் கம்பெனியினர்' குடியேற்றம் அமைப்பதற்கான சாசனத்தைப் பெற்றது. 1607ல் சுமார் 120 நபர்கள் கொண்ட குழு பயணத்தைத் தொடங்கியது. 104 பேருடன் புதிய உலகை அடைந்தது. அங்கு கோட்டை ஒன்றினைக்கட்டி 'ஜேம்ஸ்டவுண்' என்றழைத்தனர். இவர்கள் உணவு, உடை, மருந்துப்பொருட்கள் ஆயுதங்களுக்கு தாய்நாட்டையே நம்பி வாழ்ந்தனர். ஏராளமானவர்கள் பசியாலும், நோயாலும், கடும்பனிக்கும் இரையாயினர். தவிர செவ்விந்தியர்களின் திடீர் தாக்குதல்களாலும் கொல்லப்பட்டனர். இந்நிலையில் இக்குடியேற்றத்தை காப்பாற்றி, அழிவிலிருந்து மீட்ட பெருமை, தளபதி ஜான் ஸ்மித் (Captain John Smith) என்பவரையே சாரும்.

இலண்டன் கம்பெனி சரிவர செயல்படாததால், குடியேற்றத்திற்கான சாசனம் 'வர்ஜீனியா கம்பெனிக்கு' மாற்றப்பட்டது. இவர்கள், செவ்விந்தியர்களிடமிருந்து புகையிலை பயிரிடவும், பதப்படுத்தவும் அறிந்து மிகுதியாக

பொருளீட்டலாயினர். குறைந்துவரும் மக்கள் தொகையை சமாளிக்க புதிய முயற்சிகளை மேற்கொண்டனர். நில உரிமையும், அரசியலில் பங்குபெறும் உரிமையையும் வழங்குவதாகக் கூறி பலரைக் குடியேறச் செய்தனர். பழைய குடியேற்றத்தினருக்கு தலைக்கு 100 ஏக்கர் நிலம் வழங்கப்பட்டது. புதியதாக, தங்கள் சொந்தச் செலவில் குடியேறுபவர்களுக்கு தலைக்கு 50 ஏக்கர் நிலம் வழங்கப்பட்டது; அவருடன் அழைத்துவரப்பட்ட வேலையாட்களுக்கும் தலைக்கு 50 ஏக்கர் என வழங்கப்பட்டது. மேலும் வசதியற்றவர்களைக் கம்பெனி தனது சொந்தச் செலவில் அழைத்துச் சென்றது; அங்கு சுமார் நான்கு ஆண்டுகள் வேலை செய்தவுடன், விடுதலை வழங்கியதுடன் தலைக்கு 50 ஏக்கர் நிலமும் வழங்கியது; இதனை 'ஒப்பந்த வேலையாள் முறை' (Indenture Service) என்றழைத்தனர். இதனால் குடியேற்றம் வேகமாக வளரலாயிற்று. மேலும் ஆப்பிரிக்காவிலிருந்து 'நீக்ரோக்கள்' வேட்டையாடப்பட்டு அடிமைகளாக அழைத்து வரப்பட்டனர். 1619ல் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட 'பர்கீஸ்' (House of Burgesses) என்ற சட்டசபை ஜேம்ஸ் டவுணில் கூடியது. இதுவே புதிய உலகின் முதல் சட்டசபையாகும். வர்ஜீனியா கம்பெனியினரின் வீண் ஆடம்பர செலவுகளாலும், திறமையற்ற ஆட்சியாலும் அதிருப்தியடைந்த முதலாம் ஜேம்ஸ் 1624ல் வர்ஜீனியாவை தன்னுடைய நேரடி ஆட்சியின் கீழ் கொண்டு வந்தார். இதனால் வர்ஜீனியா அரச குடியேற்றமாயிற்று.

## *மேரிலாந்து (1632)*

முதலாம் சார்லஸின் மனைவியான 'ஹென்றியட்டா மரியாவின்' பெயரால் 'மேரிலாந்து' என்ற பெயர்பெற்றது. பால்டிமோர் பிரபு எனப்பட்ட 'ஜார்ஜ் கால்வர்ட்' (George Calvert) கத்தோலிக்கர்களின் நலனை முன்னிட்டு ஒரு

குடியேற்றத்தை உருவாக்க எண்ணினார்; இதற்கான உரிமைப் பட்டயத்தையும் முதலாம் சார்லஸிடமிருந்து பெற்றார். அவர் இறந்ததால் அவரது மகன் செசில் கால்வர்ட் (Cecilius Calvert) அம்முயற்சியைத் தொடர்ந்து மேரிலாந்தை அமைத்தார். இக்குடியேற்றம், கால்வர்ட் குடும்பத்தினரின் தனிப்பட்ட சொத்தாகக் கருதப்பட்டது. இக்குடியேற்றத்தினர் முன்னெச்சரிக்கையாக மிகுதியான உணவுப் பொருட்கள், தொழிலாளர்கள் ஆகியவற்றை உடன்கொண்டு வந்ததாலும், கட்டுப்பாட்டுடன் விளங்கியதாலும் தொல்லைகள் இன்றி வாழ்ந்தனர். 1647ல் பிரதிநிதிகளைக் கொண்ட சட்டசபை ஒன்றும் அமைக்கப்பட்டது. இது தனியுரிமை குடியேற்றமாக விளங்கியது.

இந்தக் குடியேற்ற வாசிகள் தங்களுக்குத் தேவையான உணவுப் பொருட்களை உற்பத்தி செய்து கொண்டனர். புகையிலை அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டது. அதிக வருமானமும் பெற முடிந்தது. இப்பகுதியில் வாழ்ந்த செவ்விந்தியர்களுடன் நட்புடன் இருந்தனர்.

## (b) *புதிய இங்கிலாந்து குடியேற்றங்கள்*

அமெரிக்காவின் வடகிழக்குப் பகுதியில் அமைக்கப்பட்ட பிளைமவுத், மசாசூசெட்ஸ், கனெக்டிகட், ரோடு ஐலாந்து, நியுஹேவன், நியுஹம்ஷையர், மெயின் ஆகிய குடியேற்றங்கள் 'இங்கிலாந்து குடியேற்றங்கள்' என அழைக்கப்பட்டன.

### *பிளைமவுத் (1620)*

சமயப்பூசல்களின் காரணமாக ஏராளமான பியூரிட்டன்கள், ஹாலந்திலுள்ள 'லெய்டனில்' சென்று குடியேறினர். அவர்களில் ஒருசாரார் அமெரிக்காவில் குடியேறும் எண்ணத்துடன் இங்கிலாந்து திரும்பினர். பிளைமவுத்-வர்ஜீனியா கம்பெனியின் உதவியால்

'மேபிளவர்' என்ற கப்பலில் தங்களது பயணத்தை மேற்கொண்டனர். இவர்களை 'யாத்ரீகத் தந்தையர்' என்றழைக்கின்றனர். இக்குழுவின் எண்ணிக்கை 100 ஆக இருந்து, வழியில் இரு குழந்தைகள் பிறந்ததால் 102 ஆக அமைந்தது. வர்ஜீனியா செல்லும் நோக்கத்துடன் பயணம் மேற்கொண்டாலும் சந்தர்ப்பவசத்தால் 400 மைல்கள் தள்ளி புதிய இடத்தை அடைந்தனர். அதனை பிளைமவுத் என்றழைத்தனர்.

இப்பகுதியின் பனிக்காலம் மிகவும் கடுமையாக இருந்ததினால் பாதிபேர் இறந்து விட்டனர். பல இன்னல்களைத் தாங்கிக்கொண்டு விவசாயம், ரோமவணிகம் (Fur Trade) மீன்பிடித்தல் ஆகிய தொழில்களில் ஈடுபட்டனர்.

இவர்கள் தங்களுக்குள் ஒரு ஒப்பந்தத்தினை மேற்கொண்டனர். அதனை 'மே பிளவர் ஒப்பந்தம்' (May flower compact) என்றழைத்தனர். அதன்படி தங்களுள் ஒருவரை ஆளுநராகத் தேர்ந்தெடுக்கவும், இங்கிலாந்து அரசரிடம் விசுவாசமாக இருப்பதெனவும் தீர்மானிக்கப்பட்டது. ஏராளமான மக்கள் கடும்பனியால் கொல்லப்பட்டனர். ஆனால் வில்லியம் பிராட்போர்டு (Willium Bradford) போன்ற ஆளுநர்களின் முயற்சியால் இக்குடியேற்றம் மேலும் வளரலாயிற்று. எழுபது ஆண்டுகளுக்குப் பிறகு 1691ல் மாசசூசெட்ஸீடன் இணைக்கப்பட்டது.

### *மாசசூசெட்ஸ் (1629)*

முதலாம் சார்லஸின் அடக்குமுறைகளுக்கு அஞ்சிய பியூரிட்டன்கள் புதிய உலகில் குடியேற எண்ணினர். அவர்கள், 'மாசசூசெட்ஸ் விரிகுடா கம்பெனியின்' ஆளுநரான ஜான் விந்த்ராப் (John winthrope) என்பவரின் தலைமையில் புதிய உலகை அடைந்தனர். ஏனைய குடியேற்றங்கல் போல் அல்லாது இதன் இயக்குநர்கள் அனைவரும் உடன்சென்று

குடியேறியது இக்குடியேற்றத்தின் சிறப்பு அம்சமாகும். இவர்கள் விவசாயத்திலும் வணிகத்திலும் சிறந்து விளங்கினர். பாஸ்டன் துறைமுகம் சிறந்து விளங்கியது. விந்த்ராப்பும் அவருக்குப்பின் வந்தவர்களும் கொடுங்கோலர்களாக விளங்கியதால் ஏராளமானவர்கள் இக்குடியேற்றத்தை விட்டு வெளியேறினர். சமயச் சுதந்திரத்தை நாடி வந்த இவர்கள் ஒப்புக்கொள்ளப்பட்ட பியூரிட்டன் கருத்துக்களுக்கு எதிரான கருத்துகளைக் கண்டித்தனர். இதன் காரணமாகவும் பலர் வெளியேறினர். இது அரசருடைய குடியேற்றமாகத் திகழ்ந்தது. 1640க்குள் மக்கள் தொகை 25000 உயர்ந்தது.

### கனக்டிகட் (1636)

மாசசூசெட்ஸ் குடியேற்றத்தைச் சார்ந்த பியூரிட்டன்களில், சில தீவிரவாதிகள் மேலும் சமய சுதந்திரம் வேண்டி, மாசசூசெட்ஸீக்கு மேற்கேயுள்ள கனக்டிகட் ஆற்றுப் பள்ளத்தாக்கில் தாமஸ் ஹீக்கர் (Thomas Hooker) என்பவரின் தலைமையில் சென்று குடியேறினர். அப்பகுதி செழுமையாக விளங்கியதால் மேலும் பலர் குடியேறினர். இரண்டாம் சார்லஸ் மன்னன் காலத்தில் இதற்கான பட்டயம் வழங்கப்பட்டது. இது ஒரு தனியுரிமைக் குடியேற்றமாகும். 1638ல் உருவாக்கப்பட்ட நியூஹேவன் (New Haven) குடியேற்றம் 1662ல் கனக்டிகட்டுடன் இணைக்கப்பட்டது.

### ரோடு ஜலாந்து (1636)

ரோஜர் வில்லியம் (Roger williams) என்ற மாசசூசெட்ஸ் பாதிரியார் புரட்சிகரமான கருத்துகளை வெளியிட்டார். திருச்சபையும் அரசாங்கமும் தனித்தனியே இயங்க வேண்டும்; மக்களுக்கு சமயச்சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும்; இந்தியர்களிடமிருந்து நிலங்களைக் கவர்வது தவறு என்றெல்லாம் கூறினார்; இதனைப் பலர் எதிர்த்தனர். எனவே தன்னுடைய ஆதரவாளர்களுடன் 'பராவிடன்ஸ்' (providence) என்ற பகுதியில் குடியேறினார்.

ஆன்ஹட்சின்ஸன் (Anne Hutchinson) என்ற பெண்மணி, விந்த்ராப்புடன் கருத்து வேறுபாடு கொண்டு போர்ட்ஸ்மவுத் (portsmouth) என்னும் குடியேற்றத்தை அமைத்தார். இவ்வாறே வில்லியம் காடிங்டன் (William coddington) மற்றும் 'சாமுவேல் கார்ட்டன்' (Samuel corton) என்பவர்களின் தலைமையில் நியூபோர்ட் (New ford), வார்விக் (Warwick) என்ற பகுதிகளும் அமைக்கப்பட்டன. இந்நான்கு பகுதிகளும் சமயக் கருத்துகளில் ஒற்றுமையுடன் விளங்கியதால் ஒன்றாக இணைந்து ரோடு ஐலாந்து குடியேற்றமாயிற்று. இதற்கான பட்டயத்தை இரண்டாம் சார்லஸ் வழங்கினார். இது தனியுரிமை பட்டயம் பெற்ற குடியேற்றமாகும்.

## *நியூ ஹாம்ஷையரும், மெயினும் (1679)*

இக்குடியேற்றங்கள் எப்போது அமைக்கப்பட்டது என்பது தெளிவாகத் தெரியவில்லை. 1629ல் குடியேற்றங்களை மேற்பார்வையிட்டு வந்த "புதிய இங்கிலாந்து குழு" பெர்டினாண்டோ ஜார்ஜஸ் (Ferdinando Georges) என்பவருக்கும், ஜான்மேசன் (John Mason) என்பவருக்கும் மாசசூசெட்யை அடுத்துள்ள பகுதியை வழங்கியது. அவர்கள் முறையே 'மெயின்' (Maine) 'நியூ ஹாம்ஷையர்' (Newhamshire) குடியேற்றங்களை அமைத்தனர். ஆனால் இப்பகுதிகள் தங்களுக்குச் சொந்தம் என மாசசூசெட்ஸ் உரிமை கொண்டாடியது. சுமார் 50 ஆண்டுகளுக்குப் பிறகு அரசநீதிமன்றத்தால் இவ்வுரிமை மறுக்கப்பட்டது. 1679ல் நியூஹாம்ஷையர் முழு உரிமையுடன் அரச குடியேற்றமாக விளங்கியது. 1691ல் ஜார்ஜஸ் குடும்பத்தினர் மெயின் குடியேற்றத்தை 1200 பவுன்களுக்கு விற்றுவிட்டனர்.

## (c) *பிற்காலக் குடியேற்றங்கள்*

இங்கிலாந்தில் நடைபெற்ற உள்நாட்டுப் போரில் முதலாம் சார்லஸ் கொல்லப்பட்டதையடுத்து 'ஆலிவர்

கிராம்வெல்' (Oliver Cromwell) ஆட்சியாளரானார்; இவர் காலத்தில் குடியேற்றங்கள் அமைக்கப்படுவது தடைப்பட்டது. 1660இல் இரண்டாம் சார்லஸ் மன்னரானதை அடுத்து மீண்டும் குடியேற்றங்கள் அமைக்கப்பட்டன. இக்குடியேற்றங்கள் அனைத்தும் தனி உடைமை குடியேற்றங்களாகும்.

### *கரோலினாக்கள் (1663)*

இரண்டாம் சார்லஸ் தன் நெருங்கிய நண்பர்களான எட்டுபேர் கொண்ட ஒரு குழுவிற்கு ஒரு நிலப்பரப்பை வழங்கினார். அவர்கள் 'சார்லஸ்' என்பதின் இலத்தீன் வடிவமான "கரோலின்ஸ்" (carolins) என்பதையொட்டி 'கரோலினா' என்ற பெயர் சூட்டப்பட்டது. இதன் வடபகுதியில் வர்ஜீனியாவிலிருந்து பலர் குடியேறினர்; தென்பகுதியில் பிரான்சு, ஸ்காட்லாந்து, ஜெர்மனியைச் சார்ந்த பிராட்டஸ்டண்டுகள் குடியேறினர். 'சார்லஸ் டவுண்' தென்கரோலினாவின் தலைநகராயிற்று. இக்குடியேற்ற மக்களிடமிருந்து குத்தகை வசூல் செய்வது கடினமாயிருந்ததால் அதன் உரிமையாளர்கள் அரசனுக்கு விற்பனைச் செய்தனர். அதன்படி 1721ல் தென்கரோலினாவும்; 1729ல் வடகரோலினாவும் அரச குடியேற்றமாயின. முப்பது ஆண்டுகளில் மக்கட்தொகை பெருகியது. பெரும்பண்ணையார்கள் ஆதிக்கம் அதிகமாக இருந்தது.

### *நியூயார்க் (1667)*

ஹென்றி ஹட்சன் என்ற ஆங்கில மாலுமி டச்சு வணிகரிடம் பணிபுரிந்து வந்தார். 1609இல் வடஅமெரிக்காவின் நதி ஒன்றின் வழியாக நீண்டதூரம் பயணம் செய்தார். அந்நதியே 'ஹட்சன் நதி' என அழைக்கப்பட்டது. இங்கு டச்சுக்காரர்கள் உரிமை கொண்டாடி குடியேறினர். டச்சு மேற்கு இந்தியக் கம்பெனி உரோம வணிக நிமித்தம் அதிகக் குடும்பங்களை இப்பகுதியில் குடியேற்றினர். இதுவே 'புதிய நெதர்லாந்து' குடியேற்றம் எனப்படும். இப்பகுதி செழித்து

விளங்கியதாலும், போர் முக்கியத்துவம் பெற்று விளங்கியதாலும், ஆங்கிலேயக் குடியேற்றங்களுக்கு இடையில் இருந்தாலும் அதனைக் கைப்பற்றுவதில் ஆங்கிலேயர்கள் விருப்பம் காட்டினர்; ஏராளமான மக்கள் குடியேறலாயினர். எனவே 1664ல் இரண்டாம் சார்லஸ் அப்பகுதிகளைத் தனது தம்பியான 'யார்க்கோமகனுக்கு' (Duke of York) ஒரு பட்டயம் மூலம் வழங்கினர். இதனை எதிர்த்து டச்சு அரசாங்கம் போர் தொடுத்தது. இதனை இரண்டாவது டச்சுப்போர் (1665-67) என்றழைக்கின்றனர். போரின் முடிவில் தோல்வியுற்ற டச்சுக்காரர்கள் ஒரு உடன்படிக்கையின்படி, நியூஆம்ஸ்டர்டாம், நியூஜெர்ஸி, டெலவர் உள்ளடக்கிய புதிய நெதர்லாந்து குடியேற்றத்தினை ஆங்கியேர்களுக்குக் கொடுத்தனர். நியூஆம்ஸ்டர்டாம், யார்க்கோமகனின் பெயரால் நியூயார்க் என்றழைக்கப்பட்டது. டச்சுக்காரர்களிடமிருந்து ஞாயிற்றுக்கிழமையை ஓய்வு நாளாகக் (Sabath) கருதும் பழக்கத்தை ஆங்கிலேயர்கள் கற்றுக் கொண்டனர். இக்குடியேற்றம் அரசரது குடியேற்றமாக விளங்கியது.

## *நியூஜெர்ஸி (1667)*

யார்க்கோமகன் புதிய நெதர்லாந்தின் தென்பகுதியான நியூஜெர்ஸியை தனது நண்பர்களான 'சர் ஜார்ஜ் கார்ட்டரட்' (Sir George Carteret), ஜான்பெர்கிலி (Lord John Berkeley)) என்பவர்களுக்கு வழங்கினார். அவர்கள் முறையே கிழக்கு ஜெர்ஸி, மேற்கு ஜெர்ஸி என இரண்டு பகுதிகளாகப் பிரித்து ஆண்டு வந்தனர். குத்தகை வசூலிப்பது கடினமாக இருந்ததால் குவேக்கர்களுக்கு விற்றனர். 1702ல் நியூஜெர்ஸி அரச குடியேற்றமானது.

## *பென்சில்வேனியா (1681)*

ஜார்ஜ் பாக்ஸ் என்பவரால் உருவாக்கப்பட்ட குவேக்கர் என்ற சமயப்பிரிவினர், தூய்மையான மனசாட்சி, கடவுளின்

மொழிப்படி வாழ்க்கை நடத்துதல், நன்னெறி வாழ்க்கை ஆகிய கொள்கைகளைக் கடைப்பிடித்தனர். இங்கிலாந்து அரசாங்கம் இவர்களைக் கொடுமைப்படுத்தவே புதிய உலகில் குடியேறினர். புதிய இங்கிலாந்தில் குடியேறிய இவர்கள் அங்குள்ள பியுரிட்டன்களால் கொடுமைப்படுத்தப்பட்டனர். அதனால் அங்கிருந்து வெளியேறி வடகரோலினாவில் குடியேறி சமய உரிமைகளுடன் மகிழ்ச்சியில் வாழலாயினர். இருந்தபோதும் தங்களுக்கென்று ஒரு தனி குடியேற்றம் அமைக்க விரும்பினர். வில்லியம் பென் என்பவர் அம்முயற்சியில் ஈடுபட்டார். இவரது தந்தை இரண்டாம் சார்லஸ் மன்னருக்கு 16000 பவுன்கள் கடன் கொடுத்திருந்தார். அத்தொகையைக் கொடுக்க முடியாத நிலையில் தளபதியின் மகனான 'வில்லியம் பென்னுக்கு' (William penn) புதிய உலகில் ஒருநிலப்பகுதியை அளித்தார். குவேக்கர்கள் அதனை மகிழ்வுடன் ஏற்றனர். புதிய குடியேற்றத்தினை, பென், "காடடர்ந்த நிலம்" என்ற பொருளில் 'சில்வானியா' (sylvania) என்றழைத்தார். பின்னர் பென்னின் பெயர் உடன் சேர்க்கப்பட்டு 'பென்சில்வேனியா' (pennsylvania) என்ற பெயர் ஏற்பட்டது. இக்குடியேற்றத்தில் சமயச் சுதந்திரம் வழங்கப்பட்டது. இதன் தலைநகர் 'பிலடெல்பியா' (Philadelpia) ஆகும். ஹாலந்து, ஜெர்மனி, பிரான்சு நாடுகளிலிருந்து மக்கள் குடியேறினர்.

## *டெலவர் (1682)* **(Delaware)**

புதிய நெதர்லாந்தின் ஒரு பகுதியான டெலவர் வில்லியம்பென்னுக்கு வழங்கப்பட்டது. அவர் பென்சில்வேனியாவுடன் இணைந்து ஆட்சி புரிந்தார்; சில காலத்திற்குப்பின் தனி சட்டசபை அமைக்கப்பட்டது. வில்மிங்டன் (Wilmington) அதன் தலைநகராக அமைந்தது. இங்கும் சமயப்பொறை வழங்கப்பட்டது. இவ்விரு குடியேற்றங்களும் குவேக்கர் குடியேற்றங்கள் எனப்பட்டது.

## *ஜார்ஜியா (1732)* (Georgia)

'ஜேம்ஸ் எட்வர்டு ஆக்ளிதார்ப்' என்ற சமூக சீர்திருத்தவாதி, பொதுமக்கள் கடன் தொல்லையால் சிறையில் வாடுவதைக் கண்டார். அவர்களின் நல்வாழ்விற்காக அவர்களை விடுவித்து புதிய உலகில் குடியேறச் செய்ய எண்ணினார். அதே சமயத்தில் தென்கரோலினாவுக்குத் தெற்கே இக்குடியேற்றத்தை அமைப்பதால், ஸ்பானிய குடியேற்றத்திற்கும், ஆங்கிலேய குடியேற்றத்திற்கும் இடையே தடுப்புக் குடியேற்றமாக அமையும் என்றும் எண்ணினார்.

1732ல் இரண்டாம் ஜார்ஜ் இதற்கான அனுமதியளித்தார்; அவர் பெயராலேயே 'ஜார்ஜியா' எனப் பெயரிடப்பட்டது. கத்தோலிக்கர்கள் தவிர ஏனையவர்களுக்கு சமயஉரிமை வழங்கப்பட்டது. ஜெர்மனி, ஸ்காட்லாந்தில் இருந்து பிராட்டஸ்டண்டுகள் குடியேறலாயினர். இது 1752ல் அரச குடியேற்றமாயிற்று. இது ஆங்கிலேயர்களின் கடைசி குடியேற்றமாகும்.

## *குடியேற்ற மக்களின் பிரச்சனைகள்*

தொடக்கத்தில் குடியேற்ற மக்கள் பல பிரச்சனைகளை சமாளிக்க வேண்டியிருந்தது. முதலாவதாக 'மக்கள் தொகை பிரச்சனை', குடியேறிய மக்களில் பலர் உணவு பற்றாக்குறையாலும், நோயாலும், கடும்பனியினாலும் இறந்துபட்டனர்; தவிர பழங்குடியினர் தாக்குதல்களாலும் பலர் கொல்லப்பட்டனர். இதனால் மக்கள் தொகை படிப்படியாகக் குறைந்ததுடன் குடியேற்றங்கள் அழியும் நிலைக்குத் தள்ளப்பட்டன. நல்வினையாக, குடியேறுபவர்களுக்கு பல சலுகைகள் வழங்கியும்; "ஒப்பந்த வேலைக்காரர்கள்" முறையினைப் புகுத்தியும் குடியேற்றங்களின் மக்கள் தொகை உயர்த்தப்பட்டது. மேலும் புகையிலை பயிரிடவும், பதப்படுத்தவும் அறிந்து

பொருளீட்டினர்; குறுமென்தோல் விலங்குகளை வேட்டையாடியும்; நெல், சவுரி, பருத்தி போன்றவற்றை பயிரிட்டும் வளம் சேர்த்தனர்; கப்பல் கட்டும் தொழிலும் வளரலாயிற்று. இவற்றால் குடியேற்றங்கள் புத்துயிர் பெற்றன.

இரண்டாவதாக 'பழங்குடியினர் பிரச்சனை', தொடக்கத்தில் பழங்குடியினர் அன்புடன் பழகினர்; வேட்டையாடும் நிலம் அனைவருக்கும் பொதுவாக விளங்கியது. ஆனால் ஆங்கிலேயர்கள் வேலிகள் அமைத்து தனியுரிமை கொண்டாடியது சிக்கலுக்கு காரணமாய் அமைந்தது. இவ்வாறு வேட்டை நிலங்களை ஆக்கிரமித்ததும்; செவ்விந்தியர்களைத் துன்புறுத்தியதும் தொல்லைகளுக்கு காரணமாயின. எனவே செவ்விந்தியர்களை வேட்டையாடுதல் அவசியமாயிற்று. அவர்களின் தலைக்கு 40 முதல் 100 பவுன்கள் வீதம் வழங்கப்பட்டது.

## *குடியேற்ற மக்களின் அரசியல், சமூக, பொருளாதார, சமய வாழ்க்கை*

### *அரசியல்*

பதின்மூன்றுக் குடியேற்றங்களில் எட்டு குடியேற்றங்கள் 'அரச குடியேற்றங்களாக' இருந்தன. கனக்டிகட், ரோடுஐலாந்து போன்றவை 'தன்னாட்சிக் குடியேற்றங்களாய்' இருந்தன. ஏனைய குடியேற்றங்களான, பென்சில்வேனியா, டெலவர், மேரிலாந்து போன்றவை 'தனியார் குடியேற்றங்களாய்' விளங்கின. ஒவ்வொரு குடியேற்றமும் ஒரு ஆளுநரால் ஆளப்பட்டு வந்தது. அரச குடியேற்றங்களுக்கான ஆளுநரை அரசர் நியமித்தார்; தன்னாட்சிக் குடியேற்றங்களுக்கான ஆளுநர்களை மக்களே தேர்ந்தெடுத்தனர்; தனியார் குடியேற்றங்களுக்கான ஆளுநர்களை அதன் உரிமையாளர்கள் நியமித்தனர்.

ஒவ்வொரு குடியேற்றத்திற்கும் 'பர்கீஸ்' எனப்பட்ட ஒரு சட்டமன்றம் இருந்தது. வர்ஜீனியா சட்டமன்றமே (1619)

புதிய உலகின் முதல் சட்டமன்றமாகும். பொதுவாக சட்டமன்றங்களில் இரு அவைகள் இருந்தன. கீழ்சபையின் உறுப்பினர்கள், சொத்து, சமயம், ஆகிய தகுதிகளின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மேல்சபை 'ஆளுநர் அவை' (Governor's chamber) என்றழைக்கப்பட்டது. இதன் உறுப்பினர்களை ஆளுநர் நியமித்தார். சட்டமன்ற நடவடிக்கைகள் ஆங்கிலேய பாராளுமன்றத்திற்கு கட்டுப்பட்டதாகும்.

சட்டமன்றங்களுக்கும், ஆளுநர்களுக்குமிடையே அடிக்கடி மோதல்கள் எழுந்தன. ஆளுநர்களுக்கான ஊதியத்தை ஒதுக்கீடு செய்ய மறுத்து அவர்களை அடக்க சட்டமன்றங்கள் முயன்றன. இதற்கு பதிலடியாக ஆளுநர்கள் சட்டமன்ற கூட்டங்களை ஒத்திவைத்தும், சட்டவரைவுகளை நிராகரித்தும் தங்கள் எதிர்ப்பை வெளிப்படுத்தினர்.

1639ல் கனக்டிகட்டின் மூன்று நகரங்களின் பிரதிநிதிகள் ஒன்று கூடி "அடிப்படைச் சட்டங்கள்" (Fundamental Order) என்ற அரசியலமைப்பை வரைந்தனர். புதிய உலகின் முதல் அரசியலமைப்பு இதுவேயாகும்.

## *சமூக வாழ்க்கை*

அமெரிக்காவில் பல நாட்டவர்கள், இனத்தவர்கள், மொழியினர் குடியேறினார்கள்; இவர்களது நாகரீகம் பண்புகள் ஒன்றுகலந்து, அமெரிக்க மண்ணிற்கேற்ப மாறுபட்டு 'அமெரிக்க நாகரீகம்' என்ற புதிய பண்பு உருவாயிற்று. அது பல கலாச்சாரங்களின் சங்கமம் (Melting Pot) ஆகும்.

அமெரிக்காவில் குடியேறியவர்களில் பெரும்பான்மையானவர்கள் சாதாரணமானவர்களே. எனவே தொடக்கத்தில் சமுதாயத்தில் வேறுபாடுகள் ஏதும் காணப்படவில்லை. ஆனால் காலப்போக்கில் ஐரோப்பாவில்

உள்ளதைப் போலவே வேறுபாடுகள் எழலாயின. ஆளுநர்கள், அதிகாரிகள், செல்வந்தர்கள் போன்றவர்கள் உயர்குடியினராகவும்; வணிகர்களும், நிலக்கிழார்களும் இடைப்பட்ட வகுப்பினராகவும்; ஏழைத்தொழிலாளர்கள், குடியானவர்கள், அடிமைகள் போன்றோர் கடைநிலை வகுப்பினராகவும் கருதப்பட்டனர்; ஆயினும் ஐரோப்பாவைப் போல் இப்பிரிவுகள் நெகிழாத்தன்மை உடையதாக விளங்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். நடுத்தர வகுப்பினர் எண்ணிக்கையில் அதிகமாகவும், பொருளாதார வாழ்க்கையை கட்டுப்படுத்துபவர்களாகவும் விளங்கினர். செல்வந்தர்கள் உழைப்பதை தரக்குறைவாக கருதினர்.

குடியேற்றங்கள் ஒன்றுக்கொன்று தொடர்புடையதாக இல்லாது தனித்தே விளங்கின; குடியேற்ற மக்களின் தனித்திருக்கும் பண்புகளும், நிலஅமைப்பும், செய்தித்தொடர்பு மற்றும் போக்குவரத்து வசதிகளின்மை போன்றவைகள் இதற்கு காரணங்களாய் அமைந்தன.

மக்கள் வசதிகளற்ற மரக்குடில்களில் வாழ்ந்தனர். சுகாதார வசதிகள் குறைந்தே காணப்பட்டன. ரொட்டி, மக்காச்சோளக்கஞ்சி, பன்றி இறைச்சி ஆகியவற்றை உணவாகக் கொண்டனர்.

மக்கள் பெரும்பொழுதை, காடுகளை வெட்டி நிலத்தைப் பண்படுத்துவதிலும், விவசாயத்திலும் கழித்தனர்; தவிர விலங்குகளிடமிருந்தும், செவ்விந்தியர்களிடமிருந்தும் காத்துக்கொள்ள போரிட வேண்டியிருந்ததாலும் கேளிக்கைகளுக்கு நேரமில்லாது போயிற்று. பிரபுக்கள் மட்டும், வேட்டையாடுதல், குதிரைப்பந்தயம் போன்ற கேளிக்கைகளை மேற்கொண்டிருந்தனர்.

***பொருளாதார வாழ்க்கை***

விவசாயம் அடிப்படைத் தொழிலாக அமைந்தது; ஆனால் நிலஅமைப்பிற்கேற்ப அதன் முக்கியத்துவம் வேறுபட்டிருந்தது. தென்பகுதியில் கோடைக்காலம் நீண்டு

விளங்கியதாலும், வெப்பம் அதிகமாயிருந்ததாலும், நிலம் செழித்து விளங்கியதாலும் விவசாயம் சிறந்து விளங்கியது. ஏற்றுமதிக்காக மிகுதியாக புகையிலை பயிரிட்டனர்; தவிர நெல், கோதுமை, பார்லி, பருத்தி போன்றவற்றையும் விளைவித்தனர். நியூயார்க், பென்சில்வேனியாவில், ரை, பார்லி, கோதுமை போன்ற தானியங்கள் விளைவிக்கப்பட்டன. எனவே இவற்றை 'ரொட்டிக் குடியேற்றங்கள்' (Bread colonies) என்றழைத்தனர். நீக்ரோக்கள் கடினமான விவசாய வேலைகளை மேற்கொண்டனர். வடபகுதியில் குளிர்காலம் கடுமையானதாகவும், நீண்டும் காணப்பட்டது; அத்துடன் நிலமும் வளமற்று விளங்கியது. எனவே தானியங்கள், பழங்கள் போன்றவற்றையே விளைவித்தனர்; ஆனால் இயற்கைத் துறைமுகங்கள் வணிகத்திற்கு வசதியாக அமைந்தன. மரம் வெட்டுதல், கப்பல் கட்டுதல், மீன் பிடித்தல் போன்ற பல்வேறு தொழில்களில் சிறந்து விளங்கினர்.

வணிகம் பெருமளவு தாய்நாட்டுடன் மட்டுமே மேற்கொள்ளப்பட்டது; சர்க்கரை, ஒயின், வெல்லப்பாகு போன்றவை இறக்குமதி செய்யப்பட்டன; பருத்தி, புகையிலை, அவுரி, பாய்மரத்தண்டு, குறுமென்தோல் போன்றவை எற்றுமதியாயின. உள்நாட்டு வணிகம் பெருமளவிற்கு பண்டமாற்று முறையிலேயே அமைந்தது.

ஐரோப்பிய மற்றும் மேற்கிந்திய நாடுகளின் வணிகத்திற்கு மெக்ஸிகோவின் 'ஸ்பானிஷ்டாலர்' பயன்படுத்தப்பட்டது.

### *சமய வாழ்க்கை*

பொதுவாகக் கூறுமிடத்து வடக்கில் பியூரிட்டன்களும்; மத்தியில் குவேக்கர்களும்; தெற்கில் கத்தோலிக்கர்களும்; எல்லையில் பிரெஸ்படிரியன்களும் இருந்தனர். மக்கள் சமயப்பற்றுடன் விளங்கினர்; சமயப்பொறை வழங்கப்பட்டது. சமயமே கல்வி வளர்ச்சிக்கு காரணமாய் இருந்தது.

சமயத்தைத் தவிர ஆவி, பேய், மந்திரம் ஆகியவற்றில் நம்பிக்கைக் கொண்டிருந்தனர்.

### *கல்வி*

கல்வியின் அவசியத்தை உணர்ந்த மக்கள் அதற்கான முயற்சிகளில் ஈடுபட்டனர். 1647ல் மாசசூசெட்ஸ் சட்டமன்றம் ஒரு சட்டத்தை இயற்றியது. அதன்படி 50 வீடுகள் கொண்ட நகரம் ஒரு ஆசிரியரையும், 100 வீடுகள் கொண்ட நகரம் ஒரு உயர்நிலைப் பள்ளியையும் கொண்டு கல்வியை வளர்க்க வேண்டும் என்றது. இதனை ஏனைய குடியேற்றங்களும் பின்பற்றலாயின. தென்பகுதியில் சமயப் போதகர்களால் கல்வி பரப்பப்பட்டது. காலப்போக்கில் கல்லூரிகளும் எழலாயின; ஹார்வர்ட் கல்லூரி முதல் கல்லூரியாக அமைந்தது. அதனைத் தொடர்ந்து வில்லியம் மேரி கல்லூரி, ஏல் கல்லூரி, பிரின்ஸ்டன், கொலம்பியா போன்ற கல்லூரிகள் எழுந்தன; மொத்தத்தில் ஒன்பது கல்லூரிகள் குடியேற்றங்களால் அமைக்கப்பட்டன.

செய்தித்தாள்களும் விரைவில் பரவலாயின: 'பாஸ்டன் நியூஸ் லெட்டர்' (1704), 'பாஸ்டன் கெசெட்', 'அமெரிக்கன் வீக்லி மெர்குரி' போன்ற செய்தித்தாள்கள் வெளியாயின. பெஞ்சமின் பிராங்க்லின் தொகுத்த 'புவர் ரிச்சர்சட்ஸ் ஆல்மனக்' (Poor Richards' Almanac) என்னும் புத்தகம் மக்களால் விரும்பிப் படிக்கப்பட்டது.

17, 18ம் நூற்றாண்டுகளில் மக்களது அறிவு வளர்ச்சி பெற்று பல துறைகளிலும் சிறந்து விளங்கியது.

ஆங்கிலக் குடியேற்றங்கள்



## அலகு 1.3

# அமெரிக்க சுதந்திரப் போர் (1775-83)

1. காரணங்கள்
2. போக்கு
3. பாரீஸ் உடன்படிக்கை
4. விளைவுகள்
5. ஆங்கிலேயரின் தோல்விக்கான காரணங்கள்

## அலகு 1.3

# அமெரிக்க சுதந்திரப் போர் (1775-83)

"எல்லா மனிதர்களும் சமமாகப் படைக்கப்பட்டிருக்கிறார்கள். வாழ்க்கை உரிமை, சுதந்திர உரிமை, மகிழ்ச்சியை நாடும் உரிமை ஆகிய பறிக்கமுடியாத உரிமைகள் படைத்தவனால் வழங்கப்பட்டுள்ளன. இந்த உரிமைகளைப் பெறுவதற்காகவே அரசுகள் நிறுவப்படுகின்றன".

சுதந்திர பிரகடன அறிக்கையின் வாசகங்கள் - தாமஸ்ஜெபர்சன்

அமெரிக்க வரலாற்றின் போக்கை மாற்றியமைத்த சிறப்பிற்குரிய நிகழ்ச்சிகளில் அமெரிக்க சுதந்திரப் போரும் ஒன்றாகும். தாய் நாட்டிடமிருந்து விடுதலை பெறும் நோக்குடன் பதின்மூன்று குடியேற்றங்களும் நடத்திய போரே அமெரிக்க சுதந்திரப் போர் எனப்பட்டது; இதில் குடியேற்றங்கள் வெற்றி பெற்றன. இப்போரினை 'அமெரிக்கப் புரட்சி' (American Revolution) என்றும் கூறுகின்றனர்.

### *காரணங்கள்*

இப்போர் திடீரென ஏற்பட்டது அல்ல; பல்வேறு காரணங்கள் பின்னிப் பிணைந்துள்ளன. அவையாவன:-

### *1. மெர்கண்டலிசம்* (Mercantalism)

18ம் நூற்றாண்டில் இங்கிலாந்தும், ஏனைய ஐரோப்பிய நாடுகளும் பின்பற்றிய பழைய பொருளாதாரக் கொள்கை 'மெர்கண்டலிசம்' எனப்பட்டது. இக்கொள்கையின்படி

குடியேற்றங்கள் தாய்நாட்டின் ஒருபகுதியாகவே கருதப்பட்டது; தாய்நாட்டின் நலனிற்கு ஏற்பவே ஆளப்பட்டது. மேலும் குடியேற்றங்கள் தங்களது பொருளாதார வளத்தினை தாய்நாட்டின் நலனிற்கு வழங்குமாறும் கட்டாயப்படுத்தப்பட்டனர். இவற்றை செயல்படுத்திட நாவாய் சட்டங்கள், உற்பத்தியாளர்கள் மீதான தடைச்சட்டம் போன்ற சட்டங்களும் இயற்றப்பட்டன.

### (I) *நாவாய் சட்டங்கள்* (Navigation Acts)

ஆங்கிலேயப் பாராளுமன்றம் நாவாய் சட்டங்களை இயற்றியது. அதன்மூலம் குடியேற்றங்களின் வாணிபத்திற்கு பல தடைகள் விதிக்கப்பட்டன. அவையாவன.

(a) வாணிபத்திற்கு, ஆங்கிலேய அல்லது குடியேற்ற நாட்டுக் கப்பல்களை மட்டுமே பயன்படுத்த வேண்டும். கட்டணம் குறைவு என்பதால் பிற கப்பல்களை பயன்படுத்தக்கூடாது.

(b) புகையிலை, பாய்மரத்தண்டு போன்ற வரைமுறை செய்யப்பட்ட பொருட்களை, இங்கிலாந்தைத் தவிர பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யக்கூடாது.

(c) அமெரிக்காவிலிருந்து ஏற்றுமதியாகும் அல்லது இறக்குமதியாகும் பொருட்கள் அனைத்தும் இங்கிலாந்தின் வழியாகவே செயல்பட வேண்டும் என்பனவாகும்.

### (II) *உற்பத்தியாளர்கள் மீதான தடைச்சட்டங்கள்* (Manufacturer's Prohibition Acts)

ஆங்கிலேயர்களால் நிறைவேற்றப்பட்ட உற்பத்தியாளர்கள் மீதான தடைச்சட்டங்கள் குடியேற்றங்களின் தொழில்வளத்தை பாதிக்கும் வகையில் பல தடைகளை விதித்தது. அவையாவன:-

(a) தாய்நாட்டில் உற்பத்தியாகும் பொருட்களை குடியேற்றங்கள் உற்பத்தி செய்யக்கூடாது. (உ.ம்) (Iron Act) ரும்புச்சட்டம் (1750).

(b) குறிப்பிட்ட சில பொருட்களை தாய்நாட்டிடமிருந்து மட்டுமே இறக்குமதி செய்ய வேண்டும் என்றும் வலியுறுத்தியது. (உ.ம்.) வெல்லப்பாகு. வெல்லப்பாகு சட்டத்தின்படி (1733) (Molasses Act) இறக்குமதியாகும் வெல்லப்பாகின் மீது, ஒரு காலனுக்கு ஆறு பென்ஸ் வீதம் சுங்கவரி வசூலிக்கப்பட்டது. இதனால் தாய்நாட்டிலிருந்து மட்டுமே வெல்லப்பாகு இறக்குமதி செய்ய வேண்டிய நிலை உருவானது. ரோடு ஐலாந்து 80% வெல்லப்பாகினை கடத்தல் மூலம் பெற்றது.

இத்தடைகளை விரும்பாத குடியேற்ற மக்கள் கள்ளக்கடத்தலின் மூலம் தங்களது தேவைகளை நிறைவேற்றிக் கொண்டனர். இதனை நன்கறிந்த ஆங்கிலேய அமைச்சர்களும், அதிகாரிகளும், கண்டும் காணாததுபோல் விட்டுவிட்டனர். இந்நிலையில் இங்கிலாந்தின் மன்னரான மூன்றாம் ஜார்ஜ் சட்டங்களை நிறைவேற்றுவதில் மிகவும் கடுமையாயிருந்தார். இதனை குடியேற்ற மக்கள் விரும்பவில்லை; ஆயினும் கனடாவில் உள்ள பிரெஞ்சுக்காரர்களிடம் கொண்டிருந்த அச்சத்தின் காரணமாக மௌனமாக ஏற்றுக் கொண்டனர்.

## *2. ஏழாண்டுப் போர் (1756 - 63)*

ஐரோப்பாவில் நடைபெற்ற ஏழாண்டுப் போரில், இங்கிலாந்தும் பிரான்சும் பங்குபெற்றன; தோல்வி அடைந்த பிரான்சு, பாரீஸ் உடன்படிக்கையின்படி, கனடாவை இங்கிலாந்து வழங்கியது. இதனால், கனடாவிலிருந்த பிரெஞ்சுக்காரர்களிடம் அமெரிக்கர்களுக்கு இருந்துவந்த அச்சம் நீங்கியது. குடியேற்றங்களுக்கு தாய்நாட்டின் பாதுகாப்பு அவசியமற்றதாயிற்று. எனவே குடியேற்றங்கள்

தங்கள் வெறுப்பினை வெளிப்படுத்தவும், தாய்நாட்டின் ஆதிக்கத்திலிருந்து விடுபடவும் முயற்சித்தனர். எனவேதான், ஒரு வரலாற்றறிஞர் "வடஅமெரிக்காவில் பிரான்சின் ஆதிக்கம் மறைந்ததைத் தொடர்ந்து முதல் பிரிட்டிஷ் பேரரசும் மறையத் தொடங்கியது" எனக் குறிப்பிட்டுள்ளார்.

### 3. *முத்திரைச்சட்டம்* (Stamp Act)

அமெரிக்கர்களை செவ்விந்தியர்களிடமிருந்தும் பிரெஞ்சுக்காரர்களிடம் இருந்தும் பாதுகாக்க ஒருசிறு ஆங்கிலேய படை அமைக்கப்பட்டிருந்தது. தவிர ஏழாண்டுப் போரின் போது ஏற்பட்ட செலவில் ஒரு சிறுபகுதியை அமெரிக்கர்களிடமிருந்து வசூல் செய்யவும் பிரதம மந்திரியான கிரென்வில் பிரபு (Lord Grenville) எண்ணினார். இதன் பொருட்டு 'முத்திரைச் சட்டத்தை' வெளியிட்டார். இதன்படி பதிவு செய்யப்படும் ஒவ்வொரு பத்திரத்தின் மீதும் ஒரு சிறுதொகையினை வரியாக செலுத்த ஆணையிட்டார். இதனை ஏற்க மறுத்து மக்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டனர். எட்மண்டு பர்க்கும் "பிரதிநிதித்துவம் இன்றி வரிவிதிக்கக் கூடாது" (No Taxation without Representation) என்று முழங்கினார். 'முத்திரைச் சட்ட எதிர்ப்பு மாநாடு' நியூயார்க்கில் கூடியது; இதில் ஒன்பது குடியேற்றங்கள் பங்கேற்றன. ஆங்கிலேயப் பொருட்களை வாங்க மறுத்தனர்; வணிகம் பாதியாகக் குறைந்தது. மேலும் முத்திரைத் தாள்கள் தீக்கிரையாக்கப்பட்டதுடன், விற்கும் அதிகாரிகளையும் விரட்டியடித்தனர். செய்தித்தாள்கள் கறுப்பு மை பூசி துக்கம் கொண்டாடின. இறுதியாக பிரதம மந்திரியான ராக்கிங்ஹாம் (Rockingham) முத்திரைச் சட்டத்தை நீக்கினார். ஆனால் 1766ல் குடியேற்றங்களின் மீது வரிவிதிக்கும் உரிமையும் அதிகாரமும் பாராளுமன்றத்திற்கு உண்டு என்பதை அறிவிக்கும் வகையில் அறிக்கை சட்டத்தை (Declaration Act) வெளியிட்டார். இச்சட்டம் குடியேற்றங்களின் மனக்கசப்பை அதிகரித்தது.

## 4. பாஸ்டன் படுகொலை (1770)

மறைமுகமான வரிவிதிப்பினை மக்கள் எதிர்க்க மாட்டார்கள் என எண்ணிய நிதியமைச்சரான "சார்லஸ் டவுண்ஷெண்ட்" (Charles Townshend) தேயிலை, கண்ணாடி, காகிதம், வர்ணக்கலவை ஆகியவற்றின் மீது வரிவிதித்தார். குடியேற்ற மக்கள் மீண்டும் கிளர்ச்சியில் இறங்கினர்; வரிவிதிக்கப்பட்ட பொருட்களை வாங்கா இயக்கமும் எழுந்தது. கிளர்ச்சியை அடக்க இராணுவம் அனுப்பப்பட்டது. இராணுவத்திற்கும், மக்களுக்குமிடையே எழுந்த மோதலின் போது மூன்று அமெரிக்கர்கள் கொல்லப்பட்டனர். இதனை செய்தித்தாள்கள் 'பாஸ்டன் படுகொலை' என வருணித்தன. இந்நிகழ்ச்சி குடியேற்றங்களின் வெறுப்பினை வளர்த்ததுடன், தாய்நாட்டுடனான உறவையும் நலியச் செய்தது. இந்நிகழ்ச்சியினை 'பாஸ்டில் சிறைச்சாலையின்' வீழ்ச்சியுடன் ஒப்பிட்டுப் பேசுகின்றனர்.

## 5. பாஸ்டன் தேநீர் விருந்து (1773)

பிரதம மந்திரியான நார்த் பிரபு (Lord North) தேயிலையின் மீதான வரியைத் தவிர ஏனைய வரிகளை ரத்து செய்தார். 1773ல் தேயிலைச் சட்டத்தின்படி, தேயிலையின் விலையைக் குறைக்கும் எண்ணத்துடன், நேரடியாக தேயிலையை இந்தியாவிலிருந்து அமெரிக்காவிற்கு கொண்டு செல்ல கிழக்கிந்திய கம்பெனிக்கு அனுமதியும் அளித்தார். 1773ல் மூன்று கப்பல்கள் 340 பெட்டிகளில் 25,000 பவுன்கள் மதிப்புள்ள தேயிலையை ஏற்றிக் கொண்டு பாஸ்டன் துறைமுகத்தை அடைந்தன. வரிவிதிக்கப்பட்ட தேயிலையை இறக்க மக்கள் எதிர்ப்பு தெரிவித்தனர். மாசசுசெட்ஸின் கவர்னரோ தேயிலைப் பெட்டிகளை இறக்காமல் செல்லக்கூடாது என்று முரண்டு பிடித்தார். இந்நிலையில் சுதந்திரதாகம் கொண்ட இளைஞர்கள் சாமுவேல் ஆடம்ஸ் (Samuel Adams) தலைமையில் செவ்விந்தியர்கள்போல் வேடம் பூண்டு

கப்பலுக்குள் நுழைந்து தேயிலைப் பெட்டிகளை கடலில் வீசினர். இதனையே 'பாஸ்டன் தேநீர் விருந்து' (Baston Tea Party) என்று வரலாற்றறிஞர்கள் கூறுகின்றனர். இதனால் ஆத்திரமுற்ற மூன்றாம் ஜார்ஜ் பாஸ்டன் துறைமுகத்தை மூடுமாறு ஆணையிட்டார்; மாசசூசெட்ஸின் சாசனமும் பறிக்கப்பட்டது; எரிச்சலுற்ற மக்கள் போட்டி அரசாங்கத்தை அமைத்தனர்.

### *6. ஆட்சியாளர்களின் தவறுகள்*

மூன்றாம் ஜார்ஜ் பாஸ்டன் துறைமுகத்தை மூடியது முதல் தவறாகும்; தங்களது உரிமைகள் பறிக்கப்படுவதை விரும்பாத குடியேற்றங்கள் முதன்முறையாக தாய்நாட்டிற்கு எதிராக ஒன்றுதிரண்டனர். தவிர அரசரால் நியமிக்கப்பட்ட ஆளுநர்கள், சட்டமன்றங்களுடன் அடிக்கடி மோதிக் கொண்டனர். சட்டமன்றங்கள் நிறைவேற்றும் சட்டங்களுக்கு ஒப்புதல் தராது நிராகரித்தனர்; சில சமயங்களில் சட்டமன்றங்களை கூட்டாது ஒத்தி வைத்தனர். இதனை விரும்பாத சட்டமன்றங்கள் ஆளுநர்களின் ஊதியத்தை ஒதுக்கிடு செய்ததர மறுத்தன. இவை குடியேற்ற மக்களின் வெறுப்பிற்கு எண்ணெய் ஊற்றின.

### *7. கியூபெக் சட்டம் (1774)* (Qubec Act)

1774ல் நார்த் பிரபு கியூபெக் சட்டத்தை வெளியிட்டார். இச்சட்டம் கனடாவிலிருந்து பிரெஞ்சுக்காரர்களுக்கு பல சமூக, சமய சலுகைகளை அளித்தது. இதனை குடியேற்ற மக்கள் தவறாக புரிந்து கொண்டனர்; பிரெஞ்சுக்காரர்களின் உதவியுடன் தங்களை அழிக்க தாய்நாடு முயல்வதாக எண்ணினர். எனவே தாய்நாட்டுடனான உறவை முறித்துக் கொள்ளவும் தயாராயினர்.

## போக்கு

### *பிலடெல்பியா பேரவை (1774)*

மாசசூசெட்ஸின் சாசனம் ரத்து செய்யப்பட்டதைத் தொடர்ந்து, வர்ஜீனியா சட்டமன்றத்தின் வேண்டுகோளின்படி,

ஜார்ஜியாவைத் தவிர ஏனைய குடியேற்றங்கள் அனைத்தும் 'பிலடெல்பியாவில்' ஒன்று கூடின. இதனை 'முதலாவது கண்ட மாநாடு' என்றும் கூறுகின்றனர். இப்பேரவைக்கு ஜார்ஜ் வாஷிங்டன் தலைமை ஏற்றார். இவ்வவை, ஆங்கிலேய பாராளுமன்றத்திற்கு தங்கள் மீது வரிவிதிக்க உரிமை இல்லை என்றும், மாசசூசெட்ஸின் சாசனம் ரத்து செய்யப்பட்டது தவறு என்றும் தீர்மானங்களை நிறைவேற்றின. பிரிட்டனுடன் வணிகம் செய்ய தடை விதித்தது; ஒரு பாதுகாப்பு குழுவை அமைத்ததுடன், படையை திரட்டவும் முயன்றது.

மாசசூசெட்ஸின் ஆளுநரான தளபதி கேஜ் (Gage) என்பவர், கன்கார்டு என்ற இடத்திலுள்ள வெடிமருந்து கிடங்கினைக் கைப்பற்றும் பொருட்டு ஒரு படையை அனுப்பி வைத்தார்; அப்படை ஏமாந்து திரும்பி வரும்போது லெக்ஸிங்டன் (Lexington) என்ற இடத்தில் வழிமறிக்கப்பட்டது; இதைத் தொடர்ந்து குண்டுகள் பரிமாறிக் கொள்ளப்பட்டன. ஏராளமான ஆங்கிலேய வீரர்கள் (250) கொல்லப்பட்டனர்; எட்டு அமெரிக்கர்கள் பலியாயினர்; இதைத் தொடர்ந்து போர் பரவலாயிற்று.

### *இரண்டாவது கண்ட மாநாடு (1775)*

1775ல் இரண்டாவது கண்ட மாநாடு பிலடெல்பியாவில் கூட்டப்பட்டது. இம்மாநாடு குடியேற்றங்களின் வெறுப்பினை வளர்த்த பதின்மூன்று சட்டங்களை ரத்து செய்யக்கோரி 'ஆலிவ் கிளை மனுவினை' (Olive branch petition) மன்னருக்கு அனுப்பி வைத்தது; மன்னர் இதனை ஏற்க மறுக்கவே போர் பரவலாயிற்று. இம்மாநாடு ஜார்ஜ் வாஷிங்டனைத் தலைமை தளபதியாக நியமித்தது.

### *அமெரிக்க சுதந்திர அறிக்கை (1776)*

அமெரிக்கர்கள் 'பங்கர் குன்றுகள்' என்ற பகுதியினைக் கைப்பற்றிக் கொண்டனர். ஆங்கிலேயத் தளபதியான கேஜ்

மிகுந்த சிரமத்துடன், ஏராளமான வீரர்களை இழந்து அதனை மீட்டார். இந்நிலையில் 'தாமஸ் ஸ்பெயின்' எழுதிய 'பொது அறிவு' (common sense) என்ற புத்தகத்தால் தூண்டப்பட்ட மக்கள் அமெரிக்காவை சுதந்திர நாடாக்க விரும்பினர். அவரின் கருத்துப்படி குடியேற்ற நாடுகள் தங்களைத் தாங்களே சிறந்த முறையில் ஆட்சி செய்துகொள்ள முடியும் என்றும், இப்பொழுது புதிய அரசை உருவாக்க ஒரு வாய்ப்பு கிடைத்துள்ளது என்றும், ஐரோப்பிய சுரண்டல்களிலிருந்து விடுபட தக்க தருணம் வந்துவிட்டது என்றும் தனது கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். இவரது கருத்துக்கள் தேசபக்தி கொண்ட அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டு சுதந்திர உணர்வு பொங்கியெழுந்தது.

1776ம் ஆண்டு ஜூலை மாதம் 4ம் நாள் அமெரிக்கா சுதந்திர நாடாக அறிவிக்கப்பட்டது. இதற்கான 'சுதந்திர அறிக்கையினை' (Declaration of Independence) தாமஸ் ஜெபர்சன் (Thomas Jefferson) என்பவர் இயற்றினார். "எல்லா மனிதர்களும் சமமாக படைக்கப்பட்டிருக்கிறார்கள், படைத்தவனால் பறிக்க முடியாத உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. வாழ்க்கை உரிமை, சுதந்திர உரிமை, மகிழ்ச்சியை நாடும் உரிமை போன்றவை இதில் அடங்கும். இவ்வுரிமைகளை அடையவே மக்களிடையே அரசுகள் நிறுவப்படுகின்றன. அரசுக்கு, ஆளப்படுபவர்களின் அனுமதியுடன் நியாயமான அதிகாரங்கள் வழங்கப்படுகின்றன. எந்த அரசும் இந்த இலட்சியங்களை மதிக்காது அழிக்க முற்பட்டால் அவ்வரசை மாற்றியமைத்து புதிய அரசு ஒன்றை நிறுவ மக்களுக்கு உரிமையுண்டு; அரசின் அடிப்படைக் கொள்கைகளும், நிர்வாக சக்திகளும் மக்களுக்கு நலனையும், மகிழ்வையும் அளிக்கக் கூடியனவாக இருக்க வேண்டும். இவ்வுண்மைகளைச் சிறப்புமிக்கனவாக நாங்கள் மதிக்கிறோம்" என்று குறிப்பிட்டார். இவ்வறிக்கையை அமெரிக்க ஐக்கிய நாடுகளின் "பிறப்புப் பதிவு பத்திரம்" என்று சிலர்

கூறுகின்றனர். இவ்வறிக்கை, பிரான்சு, இந்தியா போன்ற நாடுகளின் அரசியல் சட்டத்திற்கு ஒரு முன்மாதிரியாக அமைந்தது.

### *சாரடோகா சரணடைவு (1777)*

தளபதி கேஜ் நீக்கப்பட்டு, சர் வில்லியம் ஹோவ் (Sir William Hawe) என்பவர் தளபதியாக்கப்பட்டார். இவர் வாஷிங்டனை 'புருக்லின்' (Brooklyn) என்ற இடத்தில் முறியடித்தார். ஆனால் வாஷிங்டன் அவரை 'டிரெண்டன்' (Trenton), 'பிரின்ஸ்டன்' (Princeton) ஆகிய இடங்களில் முறியடித்து அவரது முன்னேற்றத்தை தடை செய்தார்.

ஆங்கிலேயர்கள் புதிய இங்கிலாந்து குடியேற்றங்களை கைப்பற்ற திட்டமிட்டனர். ஒரு பிரிவு தளபதி 'பர்காயின்' (General Burgoyne) தலைமையில் கனடாவிலிருந்தும், மற்றொரு பிரிவு 'கிளிண்டன்' (Clinton) தலைமையில் நியூயார்க்கிலிருந்தும் தாக்குவதாகத் திட்டமிடப்பட்டது. ஆனால் உத்திரவு சரிவரக் கிடைக்காததால் திட்டம் தோல்வியடைந்தது. பர்காயின், சாரடோகா (Saratoga) என்ற இடத்தில் அமெரிக்கத் தளபதி கேட்ஸ் (Gates) என்பவரால் தோற்கடிக்கப்பட்டு சரணடைந்தார்.

இவ்வெற்றி அமெரிக்க சுதந்திரப் போரின் திருப்புமுனையாக அமைந்தது. இதைத்தொடர்ந்து, இங்கிலாந்தைப் பழிவாங்க காத்திருந்த ஸ்பெயினும், பிரான்சும் நேரடியாக குடியேற்றங்களுக்கு ஆதரவாக போரில் இறங்கின. குடியேற்றங்களுக்குத் தேவையான பொருள் உதவியினையும், படை உதவியையும் வழங்கினர்.

### *யார்க்ட்வுன் சரணடைவு (1781)*

1780ல் ஆங்கிலேயத் தளபதியான 'காரன்வாலிஸ்' (Cornwallis) அமெரிக்கத் தளபதியான கேட்ஸை 'காம்டன்' (comdon) சண்டையில் வென்றார். இவர் ஆங்கிலேயக்

கப்பல்களுடன் தொடர்பு கொள்ளும் எண்ணத்துடன் கடற்கரையை அடைந்தார். அங்கு எதிர்பார்த்ததற்கு மாறாக பிரெஞ்சுக் கப்பல் படை இருந்ததால் மீண்டும் நிலப்பகுதிக்குத் திரும்பினார். ஆனால் 1781ல் யார்க்டவுன் (Yorktown) என்ற இடத்தில் அமெரிக்கப் படைகளால் சூழ்ந்து கொள்ளப்பட்டார். எனவே வேறுவழியின்றி வாஷிங்டனிடம் சரணடைந்தார்; அத்துடன் போரும் முடிவுற்றது.

### *பாரீஸ் உடன்படிக்கை (1783)*

பாரிஸில் நடைபெற்ற சமாதான பேச்சுவார்த்தைக்கு அமெரிக்காவின் சார்பாக பெஞ்சமின் பிராங்களின், ஜான் ஆடம்ஸ் (John Adams), ஜான் ஜே (John Jay) ஆகியோரும், இங்கிலாந்தின் சார்பாக அமெச்சர் ஷெல்பர்னும் (Shelburne) கலந்து கொண்டனர். அமெரிக்க சுதந்திரத்தை இங்கிலாந்து ஏற்றுக்கொண்டது; மேற்கில் மிசிசிபி வரையிலுள்ள பகுதிகளையும், வடக்கே ஐம்பெரும் ஏரிகளையும் அமெரிக்கர்கள் பெற்றனர். நியூபவுண்டுலாந்து, நோவாஸ்கோஷியா (Navascotia) நீர் பகுதிகளில் மீன்பிடிக்கும் உரிமையை அமெரிக்கா பெற்றது; மிசிசிபி நதியில் கப்பல் செலுத்தும் உரிமையை இங்கிலாந்து பெற்றது; போரின் போது ஆங்கிலேயருக்கு ஆதரவாக செயல்பட்டவர்களை, அமெரிக்கர்கள் 'விசுவாசிகள்' (Loyalists) என கேலி செய்தனர்; அவர்களது உடைமைகள் பறிமுதல் செய்யப்பட்டிருந்தது; அதனைத் திருப்பித்தர ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆங்கிலேய வணிகர்களுக்குச் சேரவேண்டிய கடன் தொகையை வசூலித்துக் கொள்ளவும் அனுமதி வழங்கப்பட்டது. தனிப்பட்ட உடன்படிக்கையின்படி ஸ்பெயின், பிளாரிடாவையும் (Florida), மினார்க்கா (Minarcca)வையும் பெற்றது; பிரான்சுக்கு பல மேற்கிந்திய தீவுகள் கிடைத்தன.

### *விளைவுகள்*

அமெரிக்க சுதந்திரப் போர் பல அரிய விளைவுகளைத் தோற்றுவித்தது. அவையாவன:-

1. அமெரிக்கா என்ற புதிய நாடு பிறந்தது; பதின்மூன்று குடியேற்றங்களும் ஒன்றாக இணைந்து ஒரு கூட்டரசை உருவாக்கினர்; ஜார்ஜ் வாஷிங்டன் அதன் முதல் குடியரசுத் தலைவரானார்.

2. அமெரிக்க சுதந்திரப் போர் பிரெஞ்சுப் புரட்சிக்கு வழிகோலியது. அமெரிக்க சுதந்திரப் போரில் பங்கு பெற்றதால் நலிவடைந்திருந்த பிரெஞ்சுப் பொருளாதாரம் மேலும் நலிவடைந்தது. போரில் கலந்து கொண்ட பிரெஞ்சு வீரர்கள், அமெரிக்காவிலிருந்து 'தனி மனித சுதந்திரம்', 'குடியரசு' போன்ற அரிய கருத்துக்களால் கவரப்பட்டனர்; அக்கருத்துக்கள் வேகமாகப் பரவி பிரெஞ்சுப் புரட்சியை விரைவுபடுத்தியது.

3. அமெரிக்க குடியேற்றங்களின் விடுதலை, இலத்தீன்-அமெரிக்க குடியேற்றங்களின் விடுதலைக்கு வழிகாட்டியாக அமைந்தன.

4. அமெரிக்க குடியேற்றங்களை இழந்த பிறகு விழித்துக் கொண்ட ஆங்கிலேய அரசாங்கம், கெடுபிடிகளை விடுத்து தாராளமான கொள்கைகளை பின்பற்ற ஆரம்பித்தது. மேலும் குடியேற்றங்களின் முன்னேற்றத்திற்கும் உதவியது.

5. மூன்றாம் ஜார்ஜ் மன்னரின் வல்லாட்சிக்கு முடிவுகட்ட விரும்பிய மக்கள் மன்னரின் அதிகாரத்தை வெகுவாகக் குறைத்தனர்.

6. ஆங்கிலேயர்களுக்கு ஆதரவாக செயல்பட்ட அமெரிக்கர்களை 'விசுவாசிகள்' எனக் கேலி செய்தனர்.

இவர்கள் தங்கள் உயிருக்கும், உடைமைக்கும் சேதம் வரும் என அஞ்சினர். இவர்கள் பெருமளவில் கனடாவுக்குச் சென்று குடியேறலாயினர்; கனடாவின் மக்கள் தொகை பெருகியது.

## ஆங்கிலேயரின் தோல்விக்கான காரணங்கள்

இங்கிலாந்து வலிமையான கப்பற்படையைப் பெற்றிருந்தது; கனடாவும் அவர்களுக்குச் சொந்தமாயிருந்தது; ஏராளமான அமெரிக்கர்களும் இங்கிலாந்துக்கு ஆதரவாக செயல்பட்டனர். இதற்கு மாறாக பதின்மூன்று குடியேற்றங்களும் ஒற்றுமையின்றி பிரிந்து கிடந்தன; போதிய இராணுவ வசதியோ, நிதி வசதியோ இல்லை; ஆயினும் இப்போரில் இங்கிலாந்து தோல்வியுற்றது வியப்பிற்குரியதே. அதற்கு பல காரணங்கள் துணையாயின.

1. ஆங்கிலேயர்கள் 3000 மைல்களுக்கு அப்பால் இருந்து போரினை நடத்தினர்; போரிடும் நிலத்துடன் ஒப்பிடும் போது ஆங்கிலேய வீரர்களின் எண்ணிக்கை போதுமானதாக இல்லை; மேலும் அவர்களுக்கு அமெரிக்காவின் நில அமைப்பு பற்றி ஏதும் தெரியாது. இதற்குமாறாக அமெரிக்கர்கள் தங்களுக்கு பழக்கமான நிலப்பரப்பில் போர் புரிந்ததால் மிகச் சிறப்பாக செயல்பட்டனர். தவிர அட்லாண்டிக் கடலை கடந்து செய்திகள் வருவதற்கு மூன்று மாதங்கள் பிடித்தன.

2. ஆங்கிலேயத் தளபதிகளான கேஜ், ஹோவ், பர்காயின் போன்றவர்கள், வாஷிங்டனுடன் ஒப்பிடும் போது திறமையற்றவர்களாகவே காணப்பட்டனர். வாஷிங்டன் நாட்டுப்பற்றுடன் போராடினார். ஆனால் ஆங்கிலேயத் தளபதிகளிடையே போட்டியும், பொறாமையும் நிலவியது; இதனால் பல அரிய வாய்ப்புகளையும் நழுவவிட்டனர்.

3. அமெரிக்காவில் குடியேறியவர்களில் பலர் ஆங்கிலேய வீரர்களுக்கு உறவினர்களாக அமைந்தனர்; அவர்களுக்கு எதிராக ஆங்கிலேய வீரர்கள் முழுமனதுடன் போரிடவில்லை. தவிர ஜெர்மானிய கூலிப்படையை இறக்கியதை இவர்கள் வெறுத்தனர்.

4. மூன்றாம் ஜார்ஜ் மன்னரின் பிடிவாத குணமும், முன்கோபமும் தோல்விக்கு காரணமாயின. அவரது ஆட்சியின் முதல் பத்து ஆண்டுகளில் பல அமைச்சரவைகள் மாற்றியமைக்கப்பட்டன; எனவே நிலையான, தொடர்ச்சியான முடிவுகளை மேற்கொள்வது இயலாது போயிற்று. இவை வெற்றி வாய்ப்பினை பறித்தன. தவிர நார்த்பிரபுவின் தலைமையிலான அமைச்சரவையும் திறமையற்றதாகவே விளங்கியது.

5. இங்கிலாந்தின் மீது கொண்டிருந்த பழிவாங்கும் உணர்வால் பிரான்சும், ஸ்பெயினும் அமெரிக்க குடியேற்றங்களுக்கு ஆதரவாக நிதி உதவியையும், படை உதவியையும் வழங்கின.

6. இறுதியாக எட்மண்டு பர்க் (Edmund Burke) ஜேம்ஸ் பாக்ஸ் (James Fox) போன்ற அரசியல்வாதிகள் அமெரிக்கர்களுக்கு ஆதரவாகவே குரலெழுப்பினர். இதனால் ஆங்கிலேய அரசுக்குத் தேவையான பொதுமக்களின் ஆதரவும், ஒத்துழைப்பும் கிடைக்கவில்லை.

# அலகு 1.4

# அரசியலமைப்பு உருவாகுதல்

1. இணைப்பரசு
2. போருக்குப் பிந்தைய பிரச்சனைகள்
3. பிலடெல்பியா மாநாடு
4. எதிர்ப்புகள்

# அலகு 1.4
# அரசியலமைப்பு உருவாகுதல்

"மத்திய கூட்டாட்சி அரசாங்கம் வலுவானதாகவும் கற்றவர்களாலும், அறிவாளிகளாலும், செல்வந்தர்களாலும் அடங்கிய குழு தான் ஆட்சிபுரிய வேண்டும்".

அலெக்ஸாண்டர் ஹாமில்டன்

"மத்திய அரசாங்கத்திற்கு அதிக அதிகாரங்கள் இருக்கக்கூடாது. அது மாநில அரசுகளையும், மக்களின் உரிமைகளையும் பறித்துவிடும். அரசு என்பது மக்களுக்காகத்தானேயொழிய குழுவினருக்கு அல்ல".

தாமஸ்ஜெபர்சன்.

அமெரிக்கா சுதந்திரமடைந்தாலும், வணிகம், பழங்குடி மக்கள் போன்ற பல பிரச்சனைகள் தொடர்ந்தன; மேலும் அமெரிக்கா வலிமை பெற பதின்மூன்று குடியேற்றங்களும் ஒன்றிணைய வேண்டியிருந்தது. இதனை செயல்படுத்த வலிமையான மத்திய அரசு தேவைப்பட்டது; அதன் காரணமாகவே அரசியலமைப்பு உருவாக்கப்பட்டது.

### *இணைப்பரசு (1781 – 89)*

சுதந்திரப் போரின் போது 13 குடியேற்றங்களும் தற்காலிகமாக இணைந்து 'இணைப்பரசு' (confederation) ஒன்றினை தோற்றுவித்திருந்தன. இதற்கான விதிகளை 'ஜான் டிக்கின்ஸன்' (John Dickinson) 1777ல் உருவாக்கினார். இவ்விதிகள் மாநிலங்களின் விட்டுக்கொடுக்கும் தன்மையின்மையையும், மத்திய அரசு போன்றவற்றின்

மீதிருந்த நம்பிக்கையின்மையையும் வெளிப்படுத்துவதாக அமைந்தன.

இவ்விதியின்படி ஒரு 'பேரவை' உருவாக்கப்பட்டிருந்தது. அதில் அனைத்து மாநிலங்களும் பிரதிநிதித்துவம் பெற்றிருந்தன; இரண்டு முதல் ஏழு உறுப்பினர்கள் வரை அனுப்பினாலும் மாநிலத்திற்கு ஒரு வாக்கு மட்டுமே வழங்கப்பட்டது. வெளிநாட்டுக் கொள்கை, பாதுகாப்பு, நாணயங்கள், அஞ்சல் நிலையங்கள் அமைத்தல் போன்ற அதிகாரங்கள் இணைப்பரசுக்கு வழங்கப்பட்டது. ஒரு மாநிலத்தின் குடிமகன் மற்றொரு மாநிலத்தின் குடிமகனாகும் உரிமையையும் வழங்கியது. ஆனால் வரிவிதித்தல், வணிகத்தை கட்டுப்படுத்துதல் போன்ற அவசியமான அதிகாரங்கள் வழங்கப்படவில்லை.

பேரவை கூடாத நேரங்களில் அலுவல்களை நடத்திச் செல்ல நிருவாகக் குழு (Committee) ஒன்று அமைக்கப்பட்டது. அதில் ஒவ்வொரு குடியேற்றத்திலிருந்தும் ஒரு உறுப்பினர் இடம்பெற்றார்.

பதின்மூன்று குடியேற்றங்களுக்கும் தலைக்கொரு வாக்கு வீதம் கொடுக்கப்பட்டது; குறைந்தது ஒன்பது மாநிலங்களின் ஒப்புதலின்றி முக்கியமான முடிவுகள் எடுக்கப்பட மாட்டாது. இணைப்பரசு விதிகளில் திருத்தம் செய்ய பதின்மூன்று குடியேற்றங்களின் ஒப்புதல் தேவைப்பட்டது. சுருக்கமாகக் கூறின், "போருக்காக ஏற்படுத்தப்பட்ட ஒற்றுமைதான் இணைப்பரசு". பேரவையின் கூட்டம் பாராளுமன்றம்போல் அல்லாது அரசியல் தூதர்களின் கூட்டம் போன்றே விளங்கியது.

குடியேற்றங்களிடையே காணப்பட்ட பொறாமையும், தங்கள் உரிமையையும், சலுகைகளையும் இழந்து விடுவோமோ என்ற அச்சத்தின் காரணமாகவும் இணைப்பரசு

விதிகளை ஏற்றுக்கொள்வதில் நான்காண்டுகள் காலம் தாழ்த்தின. எனவே 1781 முதல் 1789 வரை இவ்விதிகள் செயல்பாட்டில் இருந்தன. போரின்போது மேற்குப்பகுதியில் கைப்பற்றிய நிலங்களை இணைப்பரசிடம் ஒப்படைக்க வேண்டும் என்ற மேரிலாந்தின் கோரிக்கையை ஏற்று பல மாநிலங்கள் இணைப்பரசு விதிகளை ஏற்றன; ஏழு மாநிலங்கள் அவ்வாறே நிலங்களை ஒப்படைத்தன. இவ்வமைப்பு போர்க்காலத்திற்கு பயன்பட்டதே தவிர நிரந்தர ஒற்றுமைக்கு பயன்படவில்லை.

## போருக்குப் பிந்தைய பிரச்சனைகள்

### 1. விவசாயிகளின் பிரச்சனைகள்

போருக்குப் பிறகு பல பொருளாதார சிக்கல்கள் எழுந்தன. மேற்கிந்திய நாடுகளுடனான வணிகத்திற்கு இங்கிலாந்து தடை விதித்தது; இதனால் வடக்கு மாநிலங்களில் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகியது. பணத்தட்டுப்பாட்டை சமாளிக்க மேலும்மேலும் காகித நாணயங்கள் அச்சடிக்கப்பட்டதால் நாணயத்தின் மதிப்பு குறைந்து விலைகள் உயர்ந்தன. மிகுதியாக கடன் பெற்றிருந்த விவசாயிகள், தங்கள் விளைபொருட்களை விற்கமுடியாத நிலையில் நிலங்களை விற்கலாயினர்; பலர் கடனை திருப்ப முடியாத நிலையில் சிறையிலிடப்பட்டனர். இந்நிலை மாசசூசெட்ஸில் அதிகமாய் இருந்தது. இதன் காரணமாக 1786ல் ஷேய்ஸின் கலகம் எழுந்தது. போருக்குப்பின் இராணுவம் கலைக்கப்பட்டது; வீரர்களுக்கான ஊதியம் கடன் பத்திரங்களாகவே வழங்கப்பட்டன.

## ஷேய்ஸின் கலகம் (1786)

டேனியல் ஷேய்ஸ் (Daniel Shays) என்ற பழைய இராணுவ அதிகாரியின் தலைமையில் மக்கள் கிளர்ச்சியில்

ஈடுபட்டனர். கடன் நிவாரணச் சட்டம், வரிவிலக்கு, கூடுதல் நாணயம் அச்சடிப்பு போன்றவற்றைக் கேட்டனர். மேலும் கடனுக்காக சிறைப்படுத்தப்படுவதையும்; கடன் பெற்றவர்களுக்கு எதிராக நீதிபதிகள் தீர்ப்பளிப்பதையும்; அடகு வைக்கப்பட்ட சொத்துக்கள் விற்கப்படுவதையும் வன்முறையில் மூலம் தடைசெய்ய முயன்றனர். நிலங்களை மறுபங்கீடு செய்யுமாறும் கோரினர். ஆனால் கிளர்ச்சி அடக்கப்பட்டதுடன் கிளர்ச்சிக்காரர்களும் கடுமையாக தண்டிக்கப்பட்டனர.

கிளர்ச்சி அடக்கப்பட்டதும், மாசசூசெட்ஸ் அரசாங்கம் மக்களின் துயர்துடைக்க முன்வந்தது. கடன் வசூல் ஒத்திவைப்பு, வரிச்சலுகைகள், நீதிமன்றக் கட்டணக் குறைப்பு போன்றவைகளை வழங்கியது; தொழில் கருவிகள், வீட்டுச் சாமான்கள் போன்றவற்றை பறிமுதல் செய்வது தடை செய்யப்பட்டது. இக்கலகத்தால் அதிர்ச்சியடைந்த செல்வந்தர்கள் வலிமைமிக்க மத்திய அரசு ஒன்று வேண்டும் என்பதை உணர்ந்து அதனை வரவேற்றனர்.

## 2. *மாநிலங்களுக்கிடையேயான பிரச்சனைகள்*

மாநிலங்களுக்கிடையேயான ஒற்றுமை குறைந்து, சிறுசிறு மோதல்களில் ஈடுபட்டு வந்தன. கனக்டிகட் மாநிலம் வாணிபத்தின் காரணமாக ஏனைய மாநிலங்களுடன் அடிக்கடி மோதலில் ஈடுபட்டது. தன் பகுதியில் விளையும் விளைபொருட்களை பாதுகாக்க நியூயார்க், நியூஜெர்ஸியிலிருந்து இறக்குமதியாகும் காய்கறிகள், கோழி இறைச்சி போன்றவற்றின் மீது வரி விதித்தது. பொட்டோமக் (Potomac) நதியில் படகு விடுவது குறித்து வர்ஜீனியாவும், மேரிலாந்தும் சண்டையிட்டுக் கொண்டன. வியோமிங் பள்ளத்தாக்கு பற்றி கனக்டிகட்டும், பென்சில்வேனியாவும் மோதிக் கொண்டன. மேலும் பழங்குடியினரும்

அமெரிக்கர்களுடன் அடிக்கடி மோதலில் இறங்கினர். இக்குறைகளைக் களைய வலிமையான ஒரு மத்திய அரசு தேவை என்பதை குடியேற்றங்கள் உணரலாயின.

### 3. அயல்நாட்டு உறவுகள் பிரச்சனை

வடஅமெரிக்காவில் குடியேற்றங்களைக் கொண்ட இங்கிலாந்தும், ஸ்பெயினும் அமெரிக்கர்களுடன் பகைமை பாராட்டினர். பதின்மூன்று குடியேற்றங்களும், ஐரோப்பிய நாடுகளுக்கு தனித்தனியாக தூதுவர்களை அனுப்புவது என்பது எளிதல்ல; அவ்வாறு அனுப்பினாலும் சரிவர மதிக்கப்பட மாட்டார்கள் என்ற நிலை எழுந்தது.

பாரீஸ் உடன்படிக்கையின்படி ஒப்புக்கொள்ளப்பட்ட பல பிரச்சனைகள் தீர்க்கப்படாமல் இருந்தன. விசுவாசிகளிடமிருந்து கைப்பற்றப்பட்ட உடமைகள் திருப்பித்தர வேண்டும்; ஆனால் உடன்படிக்கையை நம்பி நாடு திரும்பிய விசுவாசிகள் தூக்கிலிடப்பட்டனர் அல்லது கிழித்தெறியப்பட்டன. மேலும் ஆங்கிலேயர்களுக்குச் சேர வேண்டிய கடன்தொகை கொடுபடாமலிருந்தது. இவ்விரு காரணங்களையும் காட்டி இங்கிலாந்து அமெரிக்காவில் உள்ள காவல் நிலையங்களை அகற்ற மறுத்தது. மேலும் ஏற்றுக்கொண்ட நிபந்தனைகளை செயல்படுத்தும் அதிகாரம் இணைப்பரசு மன்றத்திற்கு இல்லாதிருந்தது.

சுதந்திரப்போரின் போது உதவிய ஸ்பெயின் போருக்குப்பின் எதிரி நாடாகியது; பிளாரிடாவில் கோட்டைகளை கட்டி தன்னை வலுப்படுத்திக் கொண்டது; இந்தியப் பழங்குடியினருடன் நட்பு பூண்டும், பண உதவியும், ஆயுதங்களையும் வழங்கியது; மேலும் மிசிசிபியின் வழியாக அமெரிக்கர்கள் பொருட்களை எடுத்துச் செல்ல அனுமதியளிக்க மறுத்தது. இச்சிக்கலை தீர்ப்பதற்கு

மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் தோல்வியுற்றன. இவையனைத்தும் அமெரிக்காவில் வலிமையான அரசு அமைய வேண்டும் என்பதை மறைமுகமாக சுட்டிக்காட்டின.

## 4. மேற்கு நிலங்கள்

ஏழாண்டுப் போருக்குப் பிறகு குடியேற்றங்கள் தங்களுக்கு நேராக உள்ள மேற்கு நிலங்களின் மீது உரிமை கொண்டாடின. இதனால் ஒரு நிலத்தின் மீது பலர் உரிமை கொண்டாடும் நிலை எழுந்தது. சுதந்திரப் போருக்குப்பின் எல்லா குடியேற்றங்களும் தமது கட்டுப்பாட்டில் இருந்த பகுதிகளை இணைப்பரசிடம் ஒப்படைத்தன. இதைப் பங்கீடு செய்வதில் சிக்கல்கள் எழுந்தன.

இணைப்பரசு மன்றம் 1785ல் இயற்றப்பட்ட "நில ஆணையின்படி" நிலங்கள் அளக்கப்பட்டு நகர்புறங்களாக வகுக்கப்பட்டது. சுமார் 36 சதுரமைல்களைக் கொண்ட இந்நகரங்கள் 640 சதுரங்களாக்கப்பட்டது, 4 சதுரமைல்கள் மத்திய அரசிற்கும், ஒரு சதுரமைல் கல்விக்கூடத்திற்கும் ஒதுக்கப்பட்டது, எஞ்சிய 31 சதுரமைல்கள் பொதுமக்களுக்கு ஏலத்தில் விற்கப்பட்டது. ஒரு சதுரத்தின் குறைந்தபட்ச விலை 640 டாலர் எனப்பட்டது. பல கம்பெனிகள் மிகக் குறைந்த விலைக்கு இவ்வற்றை வாங்கின.

மேற்கு நிலப்பகுதியில் மக்கள் குடியேற்றத்தை ஊக்குவிக்கும் பொருட்டு 1787ல் உருவான 'வடமேற்கு ஆணையில்' (North West ordinance) பல விதிமுறைகள் கொடுக்கப்பட்டன. இதன்படி வடமேற்கு நிலப்பகுதிகள் மூன்று அல்லது ஐந்து மாநிலங்களாக பிரிக்கப்படும். அப்பகுதிகளில் அடிமைமுறை கூடாது என்பதுடன் கல்வியை பரப்புவதற்கான வழிமுறைகளும் வகுக்கப்பட்டன. இப்பகுதிகள் மாநில உரிமையைப் பெற மூன்று நிலைகளைக்

கடக்க வேண்டும் எனப்பட்டது. முதலாவதாக மத்திய அரசு எல்லைகளை வரையறுத்து ஒரு ஆளுநரையும், நீதிபதியையும் நியமிக்கும். அவர்கள் அப்பகுதிக்குத் தேவையான சட்டங்களை உருவாக்குவார்கள், அவற்றைத் தள்ளுபடி செய்யும் உரிமை இணைப்பரசு மன்றத்திற்கு உண்டு. இரண்டாவது நிலையில் அந்நிலைப்பகுதியில் மக்கள் தொகை 5000 ஆக வளர்ந்த பிறகு தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட 'பிரதேச சட்டமன்றம்' அமைக்கப்படுவதுடன் மாமன்றத்திற்கு வாக்களிக்கா உறுப்பினர்களை அனுப்பிடும் உரிமையும் வழங்கப்பட்டது. மூன்றாவது நிலையில் மக்கள் தொகை 60,000 ஆக வளர்ந்த பிறகு மாநிலமாக ஏற்கப்பட்டு சமஉரிமை அளிக்கப்படும் எனப்பட்டது. தொடக்கத்தில் வடமேற்கு பகுதியில் செயல்படுத்தப்பட்ட இச்சட்டம் காலப்போக்கில் அனைத்துப் பகுதிகளுக்கும் விரிவாக்கப்பட்டது.

இதனைச் செயல்படுத்த வலுவான மத்திய அரசு தேவைப்பட்டது.

## *5. கூட்டாட்சி வாதிகள்*

இணைப்பரசு காலத்தில் 'கூட்டாட்சிவாதிகள்' எனப்பட்ட ஒரு சிறுகுழு வலுவான மத்திய அரசு தேவை எனப் பிரச்சாரம் செய்தனர். இவர்களில் அலெக்சாந்தர் ஹாமில்டன் (Alexander Hamilton), ஜேம்ஸ் மாடிசன் (James Madison) போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

## *பிலடெல்பியா மாநாடு (1787)*

வர்ஜீனியாவும், மேரிலாந்தும் பொடோமக் ஆற்றில் படகு விடுவது தொடர்பான சிக்கலைத் தீர்த்துக் கொள்ள ஜார்ஜ் வாஷிங்டன் தலைமையில் (1785) கூடின. அங்கு குழப்பம் எழவே, எல்லா மாநிலங்களும் கூடிப்பேசி முடிவு

செய்ய எண்ணினர். 1786ல் 'அன்னபாலிஸ்' (Annapolis) என்ற இடத்தில் ஐந்து மாநிலங்கள் கூடின. அப்போது அலெக்சாந்தர் ஹாமில்டன், படகு விடுவதற்கான பிரச்சனையுடன் ஏனைய பிரச்சனைகளையும் விவாதிக்க அனைத்து மாநிலங்களின் பிரதிநிதிகளும் அடங்கிய ஒரு சபையை கூட்ட வேண்டும் எனக் கோரினார். இதனை ஏற்று 1787ல் பிலடெல்பியாவில் ஒரு மாநாடு கூட்டப்பட்டது. இதில் ரோடு ஐலாந்து தவிர ஏனைய மாநிலங்கள் தங்கள் பிரதிநிதிகளை தேர்ந்தெடுத்து அனுப்பினர். ஜார்ஜ் வாஷிங்டன் வர்ஜீனியாவின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார்.

ஜார்ஜ் வாஷிங்டன் இம்மாநாட்டின் தலைவராக்கப்பட்டார். மாநிலங்கள் எத்துனை உறுப்பினர்களை வேண்டுமானாலும் அனுப்பலாம் என்றும், ஆனால் மாநிலத்திற்கு ஒரு வாக்குதான் என்றும் முடிவு செய்யப்பட்டது. மொத்தத்தில் 55 உறுப்பினர்கள் பங்கேற்றனர்; இவர்கள் அனைவரும் இளைஞர்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்; இவர்களில் மாடிசன், ஹாமில்டன், பெஞ்சமின் பிராங்களின் போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். தாமஸ் ஜெபர்சன் பிரான்சிலும், ஜான் ஆடம்ஸ் இங்கிலாந்திலும் தூதுவர்களாய் இருந்ததால் இம்மாநாட்டில் கலந்து கொள்ளவில்லை. மாநாட்டின் நடவடிக்கைகள் இரகசியமாக வைக்கப்பட்டன.

இணைப்பரசு விதிகளின் செயலின்மையை உணர்ந்த தலைவர்கள் அதனை சீர்திருத்தம் செய்வதை விடுத்து புதிய அரசியலமைப்பினை உருவாக்கும் முயற்சியில் இறங்கினர். வரி வசூலித்தல், நாணயங்களை அச்சிடல், கலகங்களை அடக்குதல் ஆகியவற்றை செயல்படுத்தக்கூடிய மத்திய அரசை உருவாக்க எண்ணினர். அரசியலமைப்பை

உருவாக்கும் பொறுப்பு ஜேம்ஸ் மாடிசனிடம் ஒப்படைக்கப்பட்டது; அவரை "அரசியலமைப்பின் தந்தை" என அழைக்கின்றனர். பலவிதமான கருத்துக்கள் ஆராயப்பட்டன. சிலர் வலிமையான மத்திய அரசை விரும்பினர்; சிலர் வலிமையான மாநில அரசை விரும்பினர்; சிலர் செல்வந்தர்களின் நலனைக் காக்கும் முறையில் அரசியலமைப்பு அமைவதை விரும்பினர். அதே சமயத்தில் அனைத்து பிரதிநிதிகளும் வரி விதிக்கவும், வசூலிக்கவும் தேவையான அதிகாரம், வணிகத்தை கட்டுப்படுத்தும் அதிகாரம், பாதுகாப்பிற்கான இராணுவ அதிகாரம், நாணயம் அச்சிடும் அதிகாரம் ஆகியவற்றை பெற்ற மத்திய அரசு அவசியம் என்பதை உணர்ந்தனர்.

மாண்டெஸ்க்யூ (Montesquieu), லாக் (Lock) போன்ற அறிஞர்களின் கருத்துக்களால் கவரப்பட்ட பிரதிநிதிகள் அவற்றை தங்களது அரசியலமைப்பில் சேர்க்க விரும்பினர். மாண்டெஸ்க்யூவின், அதிகாரப் பிரிவினையும் (Separation of Power) அதன் தொடர்பான தடைகளும் சமன்படுத்தலும் (checks and balances) போன்ற கோட்பாடுகளை விரும்பி ஏற்றனர்.

கூட்டாட்சியின் பிரதிநிதிகள் மக்கள் தொகையின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என பெரிய மாநிலமான வர்ஜீனியா கூறியது; இதனை வர்ஜீனியாத் திட்டம் (Virginia plan) என்றழைத்தனர். சிறிய மாநிலமான நியூஜெர்ஸி மாநிலத்தின் அடிப்படையில் சமமான பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட வேண்டும் என வாதிட்டது; இதனை 'நியூஜெர்ஸி திட்டம்' என்றழைத்தனர். இறுதியில் 'கனக்டிகட் திட்டம்' அல்லது 'பெரும் சமரசம்' (great compromise) ஏற்கப்பட்டது. ஒரு சபையின் உறுப்பினர்கள் மக்கள் தொகை அடிப்படையிலும், மற்றொரு சபையின்

உறுப்பினர்கள் மாநில அடிப்படையிலும் தேர்ந்தெடுப்பது என தீர்மானிக்கப்பட்டது.

மக்கள் தொகையில் நீக்ரோக்களை சேர்ப்பது குறித்து சிக்கல்கள் எழுந்தன; இதனை வடமாநிலங்கள் எதிர்த்தன. இறுதியில் ஐந்து நீக்ரோக்கள் மூன்று வெள்ளையர்களுக்குச் சமம் என்ற வீதம் ஒப்புக் கொள்ளப்பட்டது. இதனை 3:5 திட்டம் என்றனர்.

மன்னராட்சியை விடுத்து மக்களாட்சியை ஏற்றனர். குடியாட்சித் தலைவர் எந்தவொரு அமைப்பையும் சார்ந்திருக்கக் கூடாது எனக்கருதி மறைமுகத் தேர்தலுக்கு வழிவகுத்தனர். ஒன்பது மாநிலங்கள் ஏற்பின் புதிய அரசியலமைப்பு செயல்பாட்டிற்கு வரும் எனப்பட்டது.

### *எதிர்ப்புகள்*

பேட்ரிக் ஹென்றி (Patrick Henry), ரிச்சர்ட் ஹென்றி லி (Richard Henry Lee) போன்றவர்கள் புதிய அரசியலமைப்பினை எதிர்த்து குரலெழுப்பினர்.

1. இணைப்பரசு விதிகளை திருத்த மட்டுமே சபைக்கு அனுமதியளிக்கப்பட்ட நிலையில் புதிய அரசியலமைப்பை வரைந்தது தவறு.
2. மத்திய அரசு வலுப்படுத்தப்பட்டு, மாநில அரசுகள் அதனைச் சார்ந்திருக்குமாறு செய்தது தவறு.
3. மனித உரிமைகளை ஒதுக்கி சொத்துக்கு முதலிடம் தந்தது வெறுக்கத் தக்கது.
4. உரிமைகள் பட்டியல் (Bill of Rights) சேர்க்கப்படவில்லை.
5. பணக்காரப் பிரதிநிதிகளால் இரகசியமாக வரையப்பட்டது.

இவர்களை 'கூட்டாட்சி எதிர்ப்பாளர்கள்' (Anti-federalists) என்றழைத்தனர்; ஆனால் அவர்கள் தங்களை'உண்மையான கூட்டாட்சியாளர்கள்' (Real federalists) என்றழைத்துக் கொண்டனர். மாடிசன், ஜான் ஜே, ஹாமில்டன் போன்றவர்கள் "பெடரலிஸ்ட்" என்ற கட்டுரைகள் மூலம் தங்களது கருத்துக்களை விளக்கினர்.

தேர்தல் மூலம் மக்கள் மன்றங்களைக் கூட்டி புதிய அரசியலமைப்பிற்கு ஒப்புதல் பெற வேண்டும் எனப்பட்டது. பல வாக்காளர்கள் இதனை புறக்கணித்தனர். டெலவர், பென்சில்வேனியா, நியூஜெர்ஸி போன்ற மாநிலங்கள் ஏற்றன. உரிமைகள் பட்டியல் ஒன்றினை பின்னர் இணைப்பதாக வாக்களித்ததைத் தொடர்ந்து பல மாநிலங்கள் புதிய அரசியலமைப்பை ஏற்றன. 1788ல் 11 மாநிலங்கள் ஏற்றதால் புதிய அரசியலமைப்பு செயல்பாட்டுக்கு வந்தது. ரோடு ஐலாந்தும், வடகரோலினாவும் பின்னர் இணைந்தன.

## அலகு 1.5

# ஜார்ஜ் வாஷிங்டன் (1789-97)

1. தொடக்க கால வாழ்க்கை
2. உள்நாட்டுக் கொள்கை
   - (a) செயலர்கள் நியமனம்
   - (b) நீதித்துறைச் சட்டம்
   - (c) உரிமைகள் பட்டியல்
   - (d) ஹாமில்டனின் நீதிக் கொள்கை
   - (e) அரசியல் கட்சிகள்
3. வெளிநாட்டுக் கொள்கை
   - (a) பிரான்சுடன்
   - (b) இங்கிலாந்துடன்
   - (c) ஸ்பெயினுடன்
4. மதிப்பீடு

# அலகு 1.5
# ஜார்ஜ் வாஷிங்டன் (1789-97)

"அரசியல் ரீதியாக அவர் ஒரு கற்பனை வாதியோ அல்லது எதையும் துடிப்புடன் தொடங்கக்கூடியவரோ அல்லர். ஆனால் அவர் ஒரு உறுதியான எழுத்தாளர். அதேநேரத்தில் பொதுமேடைகளில் உரையாற்றும் வல்லமை அற்றவர். ஆனால் அவர் நிர்வாகம் புரிவது எப்படி என்பதை அறிந்தவர்".

நெவின்ஸ்.

அமெரிக்காவின் தந்தையென போற்றப்படும் ஜார்ஜ் வாஷிங்டன், அமெரிக்காவின் முதல் குடியரசுத் தலைவராவார். இவரது செயல்கள் அமெரிக்காவிற்கு பெருமை சேர்ப்பதாக அமைந்ததுடன், மற்ற குடியாட்சித் தலைவர்களுக்கும் வழிகாட்டியாக அமைந்தன.

## தொடக்க கால வாழ்க்கை

வர்ஜீனியா மாநிலத்திலுள்ள மவுண்ட் வர்னான் பண்ணைக் குடும்பம் ஒன்றில் பிறந்தார். போர் பயிற்சி பெற்றிருந்தார். 1774ல் கூடிய பிலடெல்பியா மாநாட்டில் பங்குபெற்று அதன் தலைவராக இருந்தார். அமெரிக்கப் படைகளின் தலைமைத் தளபதியாகவும் பணியாற்றினார்; இவரது தீவிர முயற்சியாலும், உருக்கமான பேச்சாலும் வீரர்கள் சலிக்காது போரிட்டு வெற்றியைத் தந்தனர். அரசியலமைப்புக் குழுவின் தலைவராகவும் செயல்பட்டார். 1789ல் மிகுந்த அச்சத்துடன் முதல் குடியரசுத் தலைவராகப் பதவியேற்றார். ஜான் ஆடம்ஸ் துணைத் தலைவரானார்.

## உள்நாட்டுக் கொள்கை

### (a) செயலர்கள் நியமனம்

அமைச்சரவை போன்ற அமைப்பு இல்லாததால் தனக்கு ஆலோசனை வழங்கும் பொருட்டு திறமை சான்ற பலரை 'செயலர்களாக' நியமித்தார். அலெக்சாண்டர் ஹாமில்டனை கருவூலச் செயலராகவும் (Secretary of Treasury), தாமஸ் ஜெபர்சனை வெளிநாட்டுச் செயலராகவும் (Secretary of State), எட்மண்ட் ராண்டால்ப் (Edmund Randolph) என்பவரை சட்டச் செயலராகவும், ஹென்றி நாக்ஸ் (Henry knox) என்பவரை போர்த்துறை அமைச்சராகவும் நியமித்தார். இவர்களைக் கலந்தாலோசித்தே முடிவெடுக்கும் வழக்கத்தை மேற்கொண்டார். இவ்வாறு நியமிக்கப்பட்டவர்கள் அனைவரும் அரசியலமைப்பை ஆதரித்தவர்களாகவே இருந்தனர் என சிலர் குறை கூறினர். இது ஓரளவிற்கு உண்மையே ஆகும். அரசியல் அமைப்பின்பால் நம்பிக்கைக் கொண்டவர்களை நியமித்தால் அரசு நன்முறையில் செயல்படும் என்ற எண்ணமே இதற்கு காரணமாய் இருந்திருக்கலாம்.

### (b) நீதித்துறைச் சட்டம் *(1789)*

அரசியலமைப்பு நீதித்துறை ஒன்றினை தோற்றுவித்ததே தவிர அதன் அமைப்பு, செயல்முறை பற்றிய விளக்கம் ஏதும் தரப்படவில்லை. இக்குறையினைக் களைய 1789ல் நீதித்துறைச் சட்டம் (Judiciary Act) ஒன்று இயற்றப்பட்டது. அதன்படி ஆறு நீதிபதிகளைக் கொண்ட தலைமை நீதிமன்றமும் (Supreme Court); 13 மாவட்ட நீதிமன்றங்களும் (District Court); மூன்று சுற்றுலா நீதிமன்றங்களும் (Circuit Court) நிறுவப்பட்டன. ஜான் ஜே தலைமை நீதிபதியாக நியமிக்கப்பட்டார். தலைமை நீதிபதியும் ஏனைய நீதிபதிகளும் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்பட்டு செனட் மன்றத்தால் அங்கீகரிக்கப்பட்டனர். நீதிமன்றங்களின் அதிகார வரம்புகளும் குறிப்பிடப்பட்டது.

## (c) *உரிமைகள் பட்டியல்* (Bill of Rights) *(1789)*

அரசியலமைப்பு உருவாக்கப்பட்ட போது அதில் 'உரிமைகள் பட்டியல்' இல்லாததால், அதனை ஏற்க ஐந்து மாநிலங்கள் தயக்கம் காட்டின. எனவே கூட்டாட்சிவாதிகள் பின்னர் இணைப்பதாக உறுதிகூறி அரசியலமைப்பை ஏற்கச் செய்தனர். எனவே 1789ல் ஜேம்ஸ் மாடிசனின் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டு, 'பன்னிரண்டு திருத்தங்கள்' முன்வைக்கப்பட்டன. அதில் 10 திருத்தங்களை தேவையான மாநிலங்கள் ஏற்றன. அவையாவன, பேச்சுரிமை, எழுத்துரிமை, சமய உரிமை, அமைதியாகக் கூடும் உரிமை, ஆயுதம் ஏந்தும் உரிமை, நடுவர்களைக் கொண்டு விசாரிக்கும் உரிமை போன்றவைகளாகும். இப்பகுதி அரசியலமைப்பின் சிறப்பான பகுதியாகும்.

## (d) *ஹாமில்டனின் நிதிக் கொள்கை*

ஹாமில்டன் 1755ல் மேற்கிந்திய தீவுகளில் ஒரு சிறு தீவில் பிறந்தார். சட்டம் பயின்றவர். சுதந்திரப் போரில் பங்குபெற்று பீரங்கிப் படையின் தலைவரானார். வாஷிங்டனின் அந்தரங்க செயலராகவும் பணியாற்றினார். நியூயார்க் நகரத்துச் செல்வந்தரின் மகளை மணந்தார்; நியூயார்க்கின் பிரதிநிதியாக பிலடெல்பியா மாநாட்டில் கலந்து கொண்டார். அரசியலமைப்பு மாநாட்டை கூட்ட வேண்டும் என வலியுறுத்தியவர்களில் இவரும் ஒருவராவார். கூட்டாட்சிக் கட்டுரைகளில் (Federalist Essays) மிகுதியானவற்றை எழுதியவரும் இவரே. இவர் செல்வந்தர்களுக்கு ஆதரவாகவே செயல்பட்டார். இவரை வாஷிங்டன் கருவூல செயலராக நியமித்தார்.

ஹாமில்டன் உருவாக்கிய நிதித்திட்டத்தை "ஹாமில்டனின் முறை" (Hamilton system) என்று கூறுகின்றனர். இது நான்கு அம்சங்களைக் கொண்டிருந்தது. 1. தேசியக் கடனை முழுவதுமாக தருதல், 2. மாநிலங்களின்

கடனை மத்திய அரசு ஏற்றுக் கொள்ளுதல், 3. வங்கி ஒன்றினை அமைத்தல், 4. கடன் கழிவு நிதியினை (sinking fund) உருவாக்குதல் என்பனவாகும்.

## 1. தேசியக் கடனை முழுவதுமாக திருப்பித் தருதல்

ஹாமில்டன் பதவியேற்றபோது நிதி நிலைமை மிகவும் மோசமாக இருந்தது; 12 மில்லியன் அயல்நாட்டுக் கடனும், 42 மில்லியன் உள்நாட்டுக் கடனும் இருந்தன. இதனைத் திருப்பிக் கொடுத்து அமெரிக்காவின் நிதிக்கொள்கை மீது நம்பிக்கை ஏற்படுத்த வேண்டும் என ஹாமில்டன் விரும்பினார். கடனைத் தள்ளுபடி செய்ய வேண்டும் என சிலர் கூறிய யோசனையை ஏற்கவில்லை. அயல் நாட்டுக் கடன் சுதந்திரப் போரின் போது ஏற்பட்டதாகும்; உள்நாட்டுக் கடனில் பெரும்பகுதி போர் வீரர்களின் ஊதியத்திற்கு ஈடாக வழங்கப்பட்ட கடன் பத்திரங்களாகும். இதனை வட்டியுடன் முழுவதுமாக திருப்பித் தருவதற்கான அனுமதியைப் பெற்றார். இதற்கான நிதியினை இறக்குமதி வரிகளின் மூலமும், விஸ்கி போன்ற பொருட்களின் மீது விதிக்கப்பட்ட தீர்வையின் (excise) மூலமும் சரிக்கட்ட எண்ணினார்.

இதனைச் சிலர் கடுமையாக எதிர்த்தனர். ஏனெனில் கடன் பத்திரங்கள் அனைத்தும் ஒரு சிலரிடமே குவிந்திருந்தன.அவர்கள் மிகக் குறைந்த கழிவுக்கு பெற்றிருந்தனர். உதாரணமாக 100 டாலர் மதிப்புள்ள பத்திரம் 20 டாலருக்கு வாங்கப்பட்டிருந்தது. இதனால் உண்மையான நபருக்கு பணம் போய்ச்சேராது என வாதிட்டனர். ஆனால் ஹாமில்டன், கடனைத் திருப்பிக் கொடுப்பதால் அமெரிக்காவின் மீதான மதிப்பு ஐரோப்பிய நாட்டிலும் உயரும் என்று கூறினார். ஒருசிலரிடம் பணம் குவிந்திருப்பதால், தொழில் வளர்ச்சிக்குரிய மூலதனம் கிட்டும் என்றும் கூறினார். ஹாமில்டனின் வாதத்தால் காங்கிரஸ் அதற்குரிய சட்டவரைவினை (Funding bill) நிறைவேற்றியது. பிரதிநிதிகள் மன்றத்தின்

பெரும்பான்மையான உறுப்பினர்கள் மிகுதியான கடன் பத்திரங்களை வைத்திருந்தனர் என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

### *சாராயக் கலகம்* **(Whisky rebellion)** *(1794)*

மேற்கு பென்சில்வேனியாவைச் சார்ந்த விவசாயிகள், அதிகப்படியான தானியத்திலிருந்து விஸ்கி தயாரித்து விற்று வந்தனர். விஸ்கியின் மீது வரி விதிக்கப்பட்டதைக் கண்டித்ததுடன் செலுத்தவும் மறுத்து கிளர்ச்சியில் ஈடுபட்டனர். வாஷிங்டன் நான்கு மாநிலங்களிலிருந்து சுமார் 15,000 வீரர்களைத் திரட்டி, ஹாமில்டனின் தலைமையில் அனுப்பி வைத்து கலகத்தை அடக்கினார். இச்செயலால் மத்திய அரசின் பெருமை உயர்ந்தது; தன் முடிவை செயலாக்கும் திறன் அதற்கு உண்டு என்பதும் வெளிப்பட்டது.

### *2. மாநிலக் கடன்களை மத்திய அரசு ஏற்றல்*

போரின் போது மாநிலங்கள் பெற்றிருந்த கடன் சுமார் 21.5 மில்லியன் டாலர்களாகும்; இதனை மத்திய அரசே ஏற்க வேண்டும் என ஹாமில்டன் விரும்பினார். ஆனால் கடன்தொகை மாநிலங்களுக்கிடையே பெருமளவில் வேறுபட்டிருந்தது. வர்ஜீனியா, பென்சில்வேனியா போன்ற மாநிலங்கள் பெருமளவு கடனை கழித்துவிட்டிருந்தன; எனவே இதனை கடுமையாக எதிர்த்தன. கடன் தொகையில் சிறிதும் செலுத்தாக தென்கரோலினா, மாசசூசெட்ஸ் போன்ற மாநிலங்கள் ஹாமில்டனின் முடிவை வரவேற்றன.

இறுதியாக ஹாமில்டன் தன் முடிவை செயலாக்க ஒரு வழியினைக் கண்டார். தன் திட்டம் ஒப்புக்கொள்ளப்பட்டால் 'தேசியத் தலைநகரை' வர்ஜீனியாவில் அமைப்பதாக ஜெபர்சன் மூலம் உறுதியளித்தார். அதுவரை தற்காலிகமாக தலைநகரை பென்சில்வேனியாவில் அமைப்பதாகவும் கூறி சட்டவரைவினை (Assumption Bill) நிறைவேறச் செய்தார்.

இவ்வுடன்பாட்டின்படி வர்ஜீனியாவில் புதிய தலைநகருக்கான இடத்தை பொடோமக் நதிக்கரையில் வாஷிங்டன் தேர்ந்தெடுத்தார். இது கொலம்பியா மாவட்டம் என்ற பெயரில் தனி நிர்வாகத்தின் கீழ் அமைக்கப்பட்டது. புதிய தலைநகரம் வாஷிங்டனின் பெயராலேயே 'வாஷிங்டன்' எனப் பெயர் பெற்றது.

### *3. தேசிய வங்கி*

ஹாமில்டன் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கான வங்கி ஒன்றினைத் தோற்றுவித்தார். இது பலவிதத்தில் குறிப்பாக அரசாங்கத்துடன் தொடர்பு கொள்வதில் இங்கிலாந்து நாட்டு வங்கியைப் போலவே அமைந்தது. இருபது ஆண்டுகளுக்கு செயல்படுவதற்கான சாசனம் ஒன்றும் வழங்கப்பட்டது. அதன் மொத்த முதலீடான 10 மில்லியன் டாலரில், 1/5 பங்கு அரசாங்கத்தால் வழங்கப்பட்டது; இதன் மூலம் தனியார் பொறுப்பில் வங்கி செயல்பட அனுமதிக்கப்பட்டது. அவ்வங்கிக்கு நாணயங்கள் அச்சிடவும், நிதி திரட்டவும், கிளை நிறுவனங்களை அமைத்துக் கொள்ளவும், அரசாங்கத்திற்கும், ஏனையவர்களுக்கும் கடன் தரவும் அனுமதிக்கப்பட்டது. இதன் மூலம் தேசியக் கடன்களைத் திருப்பித் தரவும், நிலையான நாணயக் கட்டுப்பாட்டினைக் கொண்டு வரவும் ஹாமில்டன் முயன்றார்.

ஹாமில்டனின் திட்டத்தை ஜெபர்சன் வன்மையாகக் கண்டித்தார். வங்கி பற்றி அரசியலமைப்பு ஏதும் கூறவில்லை என்றும்; அது அரசியல் அமைப்பில் உள்ளதிற்கு மாறாக உள்ளதாகவும் கருதினார். மேலும் மாநிலங்களின் உரிமையில் ஊடுறுவதாகவும் கூறினார். ஆனால் ஹாமில்டன் அனைத்து அதிகாரங்களையும் அரசியலமைப்பில் சேர்க்க முடியாது என்பதை விளக்கியதுடன், சட்டமன்றத்திற்குள்ள "பொதிந்துள்ள அதிகாரத்தின்படி" (Doctrine of implied power) வங்கியை அமைக்க வழியுண்டு எனவும் வாதிட்டார். அதனையொட்டி சட்டவரைவு நிறைவேற்றப்பட்டு 1791ம்

ஆண்டு வங்கி அமைக்கப்பட்டது. 1792ல் உருவான நாணயச்சாலை சட்டத்தின்படி (Mint Act) தங்க, வெள்ளி நாணயங்களை வெளியிட்டது. நாணயங்கள் தசாம்ச முறையில் வெளியிடப்பட்டன.

### 4. கடன் கழிவு நிதி

இறுதியாக கடன் கழிவு நிதி ஒன்றினை ஏற்படுத்தினார். இதன் மூலம் சிறிது சிறிதாக பணம் சேர்த்து தேசியக் கடனை திருப்ப முயன்றார். இது ஹாமில்டனின் கடைசி சாதனையாகும்.

தொழில் வளர்ச்சிக்காக அதிகமான பாதுகாப்பு வரி, மான்யம் போன்ற பல வசதிகளை அளித்தார். ஆனால் தொழில் வளர்ச்சியில் மக்கள் போதிய அக்கறை காட்டாததால் இவை போதுமான பலனைத் தரவில்லை.

ஹாமில்டனின் நிதித்திட்டத்தின் வெற்றிகள் அவரது திறமைக்கு சான்றாக அமைந்தன. அமெரிக்கப் பொருட்களை ஐரோப்பியர்கள் விரும்பி வாங்கினர். 1817க்கு முன் உள்நாட்டு, வெளிநாட்டுக் கடன்கள் திருப்பப்பட்டன. சுருக்கமாகக் கூறின் சீர்கெட்டிருந்த அமெரிக்க நிதிநிலைமையை செம்மைப்படுத்தியதுடன், சேமித்து வைக்கும் நாடாகவும் மாற்றினார். ஆனால் அவரது சாதனைகள் மோதல்களைத் தோற்றுவித்ததுடன் அரசியல் கட்சிகள் தோன்றவும் காரணமாயின.

### (e) அரசியல் கட்சிகள்

முதன்முறையாக அமெரிக்காவில் அரசியல் கட்சிகள் தோன்றின. முக்கியமான பிரச்சனைகளில் மக்களிடையே காணப்பட்ட கருத்து வேறுபாடுகளே இதற்கு காரணமாயின; குறிப்பாக ஹாமில்டனின் நிதிக் கொள்கையும், பிரெஞ்சுப் புரட்சியுமாகும்.

ஹாமில்டன் மக்களாட்சியில் நம்பிக்கை இல்லாதவர்; மக்கள் மனம் மாறும் தன்மையுடையது என்றும், அவர்களால்

சரியாக முடிவு செய்ய முடியாது என்றும் கருதினார். ஆனால் செல்வந்தர்கள் நன்கு கற்றவர்கள், திறம்பட முடிவெடுக்கக் கூடியவர்கள் என்றும் கருதினார். மேலும் தவறான ஆட்சியால் செல்வந்தர்களுக்குத்தான் நஷ்டம் ஏற்படும் என்றும் கூறினார். சுருக்கமாகக் கூறின் செல்வந்தர்களுக்கு ஆதரவாகவே திட்டங்களைத் தீட்டினார். எனவே செல்வந்தர்களைக் கொண்ட வடக்கு மாநிலங்கள் 'கூட்டாட்சிவாதிகளை' (Federalist) ஆதரித்தன. ஜெபர்சன் ஒரு இலட்சியவாதி. மக்களை பெரிதும் மதித்தவர்; தெற்கிலுள்ள விவசாயிகள் அவரை ஆதரித்தனர். நாட்டின் வலுவான பொருளாதாரத்திற்காக, ஆட்சிக்கு செல்வந்தர்களின் துணை தேவை என ஹாமில்டன் கருதினார். அதன் அடிப்படையிலேயே தனது நிதிக் கொள்கைகளை அமைத்தார். ஆனால் ஜெபர்சனின் கருத்துப்படி, ஹாமில்டனின் திட்டங்கள் அரசாங்கத்தை செல்வந்தர்களின் தயவில் நடத்துவதுபோலாயிற்று.

கட்சிகள் தோன்றக் காரணமாய் அமைந்தது பிரெஞ்சுப் புரட்சியே ஆகும். வடக்கிலுள்ள செல்வந்தர்கள் வணிக நலனை முன்னிட்டு இங்கிலாந்தை ஆதரித்தனர். ஆனால் தெற்கிலுள்ள விவசாயிகள் சுதந்திரத்தை விரும்புபவர்கள்; எனவே பிரெஞ்சுப் புரட்சியை ஆதரித்தனர்; தங்களை ஏய்த்துப் பிழைக்கும் ஆங்கிலேய வணிகர்களை வெறுத்தனர்.

அரசியல் கட்சிகள் எப்போது தோன்றின என்பதை தெளிவாகக் கூறமுடியாது; அரசியலமைப்பு உருவாக்கப் படும்போது ஏற்பட்டு, அரசியலமைப்பினை ஏற்கும் பொருட்டு கூட்டப்பட்ட, சிறப்புக் கூட்டங்களில் வளர்ச்சி பெற்று வாஷிங்டன் காலத்தில் வெளிப்பட்டது எனலாம். ஹாமில்டனை ஆதரித்தவர்கள் 'கூட்டாட்சிவாதிகள்' எனவும், மேடிசன், ஜெபர்சன் போன்றவர்களைச் சார்ந்தவர்கள் "ஜனநாயக குடியரசுக்காரர்கள்" (Democratic Republicans) என்றும் பெயர் பெற்றனர். 1791ல் வெளிப்பட்ட

இக்கட்சிகளுடன் மத்திய அரசின் மாற்றங்களும், மாநில அரசின் மாற்றங்களும் தொடர்பு கொண்டிருந்தன. வாஷிங்டன் இக்கட்சிகளில் பங்கு கொள்ளாது ஒதுங்கியே நின்றார்.

## வெளிநாட்டுக் கொள்கை

வாஷிங்டன் வெளிநாட்டு உறவின்மூலம் அமைதியையே விரும்பினார். போர்களையும், அதனால் ஏற்படும் இழப்புகளையும் புதிய நாடான அமெரிக்காவால் சமாளிக்க முடியாது என்ற எண்ணமே இதற்குக் காரணமாகும். ஆனாலும் பல பிரச்சனைகளை சமாளிக்க வேண்டியிருந்தது. அவையாவன:- 1. ஆங்கிலேயர்கள் மேற்கிலிருந்து காவல் நிலையங்களை விட்டகல மறுத்தனர், 2. ஸ்பெயின் மிசிசிபி நதியின் வழியாக வாணிபம் செய்யத் தடை விதித்தது, 3. பிரெஞ்சுப் புரட்சி ஏற்பட்டு உலகையே கலக்கியது.

### (a) பிரெஞ்சுப் புரட்சி

பிரெஞ்சு மக்கள் முடியாட்சியினை எதிர்த்து கிளர்ச்சியில் இறங்கினர்; அமெரிக்கர்களிடமிருந்து குறைந்தபட்சம் படை உதவியாவது கிடைக்கும் என எதிர்பார்த்தனர். தொடக்கத்தில் அமெரிக்கர்கள் புரட்சியை விரும்பினார்; ஆனால் 16ம் லூயியும் (Lowis XVI) ஏனைய பிரபுக்களும் சிரச்சேதம் செய்யப்படவே மாறுபட்ட கருத்துக்கள் ஏற்பட்டன. ஹாமில்டனும், கூட்டாட்சியவாதிகளும் புரட்சியை கண்டித்தனர். குடியரசுவாதிகள் ஜெபர்சனின் தலைமையில் புரட்சியை ஆதரித்தனர். ஆனால் வாஷிங்டன் 1793ல் ஓர் அறிக்கை மூலம் அமெரிக்கா நடுநிலைமை வகிக்கும் என அறிவித்தார்.

பிரெஞ்சு தூதராக இருந்த 'எட்மண்டு சார்லஸ் ஜெனைட்' (Edmond Charles Genet) என்பவர் வாஷிங்டனின் அறிவிப்பை மதியாது பிரான்சுக்கு ஆதரவு தேட முனைந்தார். ஆங்கிலேயக் கப்பல்களை தாக்கும்படி

தூண்டினார்; ஜகோப்பியன் (Jacobin club) குழுக்களை அமைத்தார்; பிரெஞ்சுக் கொடியின் கீழ் போரிடும் பொருட்டு வீரர்களையும் சேர்த்தார்; ஜெபர்சன் உட்பட அமெரிக்க அரசியல்வாதிகளை துச்சமாகக் கருதி செயல்பட்டார். எனவே வாஷிங்டன் அவரை நாடு திரும்புமாறு ஆணையிட்டார்; நாடு திரும்பினால் தண்டனை நிச்சயம் என உணர்ந்த ஜெனைட் அமெரிக்க குடிமகனாகி அங்கேயே தங்கி விட்டார்.

### (b) *இங்கிலாந்துடனான உறவு*

இங்கிலாந்துடன் கசப்பானே உறவே நிலவியது. ஆங்கிலேய துருப்புகள் மேற்கில் காவல் நிலையங்களை விட்டகல மறுத்தன. சுதந்திரப் போரின்போது கைப்பற்றிய சொத்துக்களை திருப்பித்தர மறுத்தனர்; இந்தியப் பழங்குடியினருடன் தொடர்பு கொண்டு உதவினர்; அமெரிக்க கப்பல்களில் ஆங்கிலேய மாலுமிகள் உள்ளனரா? என்று கண்டறியும் பொருட்டு அமெரிக்க கப்பல்களை அடிக்கடி தடுத்து நிறுத்தி சோதனை என்ற பெயரில் தொல்லைகள் தந்தனர். இதனால் வெகுண்ட பலர் போர்க்குரல் எழுப்பினர்.

வாஷிங்டன் தலைமை நீதிபதியும், ஆங்கிலேய அரசின் நட்புக்குப் பாத்திரமானவருமான 'ஜான் ஜேவை' சிறப்புத் தூதுவராக அனுப்பி வைத்தார். அமெரிக்கர்களின் ஏமாளித்தனத்தையும், அரசியல் சூழ்ச்சித் திறனின்மையையும் பயன்படுத்திக்கொண்டு, ஆங்கிலேயர்கள் தங்களுக்கு நன்மைபயக்கும் வகையில் 1794ல் 'ஜே உடன்படிக்கையினை' மேற்கொண்டனர். அதன்படி, காவல் நிலையங்களைவிட்டு வெளியேற ஒப்புக் கொண்டனர்; அதற்குப் பதிலாக அமெரிக்க கப்பல்களை சோதனை செய்யும் உரிமையையும், வேறு பல வணிக உரிமைகளையும் பெற்றது. இந்தியப் பழங்குடியினரால் ஏற்பட்ட நஷடங்களை ஈடுசெய்வது பற்றி உடன்படிக்கை ஏதும் சொல்லவில்லை.

ஜே உடன்படிக்கையை மக்கள் எதிர்த்தனர். கலகங்கள் ஏற்பட்டன; ஜேவின் புனைவடிவங்கள் தீயிலிடப்பட்டன. வாஷிங்டன் இவ்வுடன்பாட்டை விரும்பவில்லை. ஆயினும் வேறு வழியில்லாததால் அதனை ஒப்புக் கொண்டார். சட்டமன்றமும் அதனை அங்கீகரித்தது.

### (c) ஸ்பெயினுடன் உறவு

ஸ்பெயினுடனான உறவு நன்முறையில் இல்லை; சுதந்திரப் போருக்குப்பின் ஸ்பெயின் பகைமை பாராட்டியது; பிளாரிடாவில் எல்லைகளில் கோட்டைகளைக் கட்டி வலுப்படுத்திக் கொண்டது; மிசிசிபி நதியினை அமெரிக்கர்கள் வணிகத்திற்கு பயன்படுத்த தடை விதித்தது; இந்திய பழங்குடியினரையும் தூண்டிவிட்டது. வாஷிங்டன் போரினை விரும்பாது சமாதானத்தையே விரும்பினார். இந்நிலையில் பிரான்சுக்கு எதிராக இங்கிலாந்துடன் கூட்டு வைத்திருந்த ஸ்பெயின் அக்கூட்டிலிருந்து விலகியது; இதனால் இங்கிலாந்தின் பகை ஏற்பட்டது; எனவே அமெரிக்காவின் நட்பை பெற விரும்பியது.

அமெரிக்காவின் தூதராக 'தாமஸ் பிங்கினி' (Thomas Pinckney) அனுப்பப்பட்டார்; அவர் பிங்கினி உடன்படிக்கை அல்லது சான் லொரான்சோ (san lorenzo) உடன்படிக்கையினை 1795ல் மேற்கொண்டார். ஜே உடன்படிக்கையால் ஏற்பட்ட இழப்பினை இவ்வுடன்படிக்கை சமன்செய்தது. இதன்படி; மிசிசிபி நதி முழுவதையும் அமெரிக்கர்கள் வணிகத்திற்கு பயன்படுத்திக் கொள்ள அனுமதிக்கப்பட்டனர்; நியூ ஆர்லியன்ஸ் (New arleans) துறைமுகத்தில் வரிகளின்றி பொருட்களை சேமித்து வைத்து ஏற்றுமதி செய்ய அனுமதிக்கப்பட்டனர். பிளாரிடாவின் வடஎல்லை 31° அட்சரேகை என ஒப்புக்கொள்ளப்பட்டது; பழங்குடியினரின் செயல்களை கட்டுப்படுத்தவும் ஒப்புக் கொண்டது. இவ்வெற்றி பிற்கால அமெரிக்க வளர்ச்சிக்கு பெரிதும் பயன்பட்டது.

## மதிப்பீடு

வாஷிங்டன் இருமுறை தலைவராக இருந்தபின் ஓய்வு பெற்றார்; இருமுறைக்குமேல் பதவி கூடாது எனக்கூறி சிறந்த பாரம்பரியத்தையும் உண்டாக்கினார். இவருக்கு அரசியல் அனுபவம் இல்லை; இவரது எழுத்திலும், பேச்சிலும் கவர்ச்சி இல்லை; ஆயினும் மக்கள் இவரது சொல்லுக்கு கட்டுப்பட்டனர். இவரது நேர்மையான, பரந்த நுண்ணறிவில் மக்கள் நம்பிக்கை கொண்டிருந்ததே இதற்குக் காரணமாகும். அவர் தனது பிரிவுபச்சார விழாவின் போது 'எந்தவொரு நாட்டுடனும் நெருக்கமான உறவு கொள்ளாது தனித்திருப்பது அமெரிக்காவிற்கு நன்மை பயக்கும்' என்று கூறினார். அதுவே பிற்காலத்தில் வளர்ச்சிப் பெற்று 'மன்ரோ கோட்பாடு' அல்லது 'தனித்திருக்கும் கொள்கையாக' உருப்பெற்றது எனலாம். இவரைப் பெருமைப்படுத்தும் வகையில் தலைநகருக்கு 'வாஷிங்டன்' எனப் பெயரிடப்பட்டது.

## அலகு 1.6

# ஜான் ஆடம்ஸ் (1797 - 1801)

1. உள்நாட்டுக் கொள்கை

   (a) பிற்போக்குச் சட்டங்கள்

   (b) நள்ளிரவு நீதிபதிகள்

2. வெளிநாட்டுக் கொள்கை

   xyz நிகழ்ச்சி

3. கூட்டாட்சிவாதிகளின் சாதனைகள்

# அலகு 1.6
# ஜான் ஆடம்ஸ் (1797 - 1801)

"ஆடம்ஸ் ஒரு உயர்ந்த பண்புகள் உடையவர்தான். அவருடைய கடுமையான, பணிய மறுக்கும் தனித்தன்மையி னால் நிர்வாகத்தில் ஒத்துழைப்பைப் பெறமுடியவில்லை"

நெவின்ஸ்.

வாஷிங்டனுக்குப் பிறகு துணைத் தலைவராக இருந்த ஜான் ஆடம்ஸ் குடியரசுத் தலைவராக பதவியேற்றார். இவரது காலம் குழப்பம் நிறைந்த ஒன்றாகும்.

### *உள்நாட்டுக் கொள்கை*

இவர் வாஷிங்டனின் அமைச்சரவையைத் தொடர்ந்து செயல்பட அனுமதித்தார்; இது அவரது முதல் தவறாகும்; அவர்கள் ஹாமில்டனுக்கு ஆதரவாகவே செயல்பட்டனர். இவர் ஹாமில்டனுடன் கருத்து வேறுபாடு கொண்டிருந்ததால் வலுவற்று விளங்கினார். இதனால் இரண்டாவது முறை தேர்ந்தெடுக்கப்படுவதற்கான வாய்ப்பினை இழந்தார். மேலும் இவர் புதிய இங்கிலாந்து பகுதியைச் சார்ந்தவராக இருந்ததால் தென்மாநில மக்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர்.

### (a) *பிற்போக்குச் சட்டங்கள்*

ஐரோப்பாவிலிருந்து குடியேறிய மக்களில் பலர் தாராளமான கொள்கை உடையவர்களாய் இருந்தனர்; குடியரசுக் கட்சியை ஆதரித்தனர். இதனை தடை செய்து குடியரசு கட்சியை ஒடுக்கும் நோக்கத்துடன் மூன்று சட்டங்களை இயற்றினார்; அதனை "பிற்போக்குச் சட்டங்கள்" என்று கூறுகின்றனர்.

## அயலவர் சட்டம் (Alien Act) (1798)

நாட்டின் அமைதிக்கு ஊறு விளைவிக்கக்கூடிய அயலவர்களை சிறையிடவோ, நாட்டினின்று வெளியேற்றவோ குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் வழங்கப் பட்டது. இதனையடுத்து ஏராளமான பிரெஞ்சுக்காரர்கள் நாடு திரும்பினர்.

## அயலவர் குடியுரிமைச் சட்டம் (Naturalisation Act) (1798)

இதன்படி அயல்நாட்டவர்கள் அமெரிக்க குடிமகனாவதற்கு அமெரிக்காவில் வசிக்க வேண்டிய காலம் 5 ஆண்டுகளிலிருந்து 14 ஆண்டுகளாக உயர்த்தப்பட்டது.

## அரசுத் துரோகச் சட்டம் (Sedition Act) (1798)

இதன்படி குடியரசுத் தலைவருக்கு எதிராகவோ, அரசுக்கு எதிராகவோ சதி செய்பவர்களுக்கு 5 ஆண்டுகள் சிறைத் தண்டனையும், 5000 டாலர்கள் தண்டமும் செலுத்த வேண்டும். சட்டமாற்றத்தையோ, குடியரசுத் தலைவரையோ இகழ்ந்து கட்டுரைகள் வெளியாயின் இரண்டு ஆண்டுகள் சிறைவாசமும், 2000 டாலர்கள் தண்டமும் விதிக்க வழி செய்யப்பட்டது.

அயலவர் சட்டமும், அரசுத் துரோகச் சட்டமும் அடிப்படை உரிமைகளை பறிப்பதாகக் கூறி வர்ஜீனியாவும், கெண்டகியும் (Kentuckey) எதிர்த்தன. ஆனால் கூட்டாட்சிவாதிகள் நீதித்துறையில் இருந்ததால் இச்சட்டங்கள் செயல்படுத்தப்பட்டன. எனவே இவ்விரு மாநிலங்களும், 'மாநிலங்களின் உரிமைகளை' வலியுறுத்தலாயின; அரசியலமைப்பை மீறும் வகையில் கூட்டாட்சி மன்றத்தால் உருவாக்கப்படும் சட்டங்கள் செல்லாது எனக்கூறும் "செல்லுபடியற்றதாக்கும் கோட்பாட்டினை" (Doctrine of Nullification) உள்ளடக்கிய சட்டங்களை இயற்றின.

### (b) *நள்ளிரவு நீதிபதிகள்* (Midnight Judges) (1801)

ஆடம்ஸ் 1801ல் பதவியை விட்டு விலகும் முன் முதல்நாள் இரவு நீதித்துறை சட்டத்தின்படி பல நீதிபதிகளை நியமித்தார். அவர்களில் தலைமை நீதிபதியாக நியமிக்கப்பட்ட 'ஜான் மார்ஷலும்' (John Marshall) அடங்குவார். இவர்களை "நள்ளிரவு நீதிபதிகள்" எனக் கேலி செய்தனர்.

### *வெளிநாட்டுக் கொள்கை*

#### xyz *நிகழ்ச்சி*

பிரான்சுக்கும் அமெரிக்காவுக்கும் இடையேயான உறவுகள் அறுபட்டன. ஜெ உடன்படிக்கைக்குப் பிறகு பிரெஞ்சுக்காரர்கள் அமெரிக்க கப்பல்களைத் தாக்கினர். மேலும் பிரான்சு, அமெரிக்காவில் மீண்டும் தனது ஆதிக்கத்தை நிறுவமுயலுகின்றதோ? என்ற அச்சமும் எழுந்தது. சமாதானத்தை விரும்பிய ஆடம்ஸ், ஜான்மார்ஷல், பிங்கினி (C.C.Pinckney), எல்பிரிட்ஜ் ஜெர்ரி (Elbridge Gerry) ஆகியோர் அடங்கிய தூதுக்குழுவை அனுப்பி வைத்தார். ஆனால் பிரான்சின் வெளிநாட்டமைச்சரான 'டாலிரண்ட்' (Talleyrand) இவர்களை சந்திக்க மறுத்தார். அப்போது பெயர் குறிப்பிட விரும்பாத மூவர் தங்களை 'xyz' என அழைத்துக் கொண்டு இவர்களை சந்தித்தனர். அமைச்சருக்கு $2^1/_2$ இலட்சம் கையூட்டும், அரசிற்கு கடனுதவியும் அளிக்க ஒப்புக்கொண்டால் அமைச்சரைக் காணலாம் எனக் கூறினர். இதனை அறிந்த அமெரிக்க மக்கள் கொதித்தெழுந்தனர். "நாட்டின் பாதுகாப்பிற்கெனின் லட்சம் லட்சமாக கொட்டிக் கொடுப்போம், இலஞ்சமாக ஒரு சென்ட் கூட வழங்க மாட்டோம்" (Millions for defence cent not one cent for triluke) என முழங்கினர். மூவர் குழு நாடு திரும்பியது; இதனையே xyz நிகழ்ச்சி என்கின்றனர்.

கூட்டாட்சிவாதிகள், குடியரசு கட்சியினரை ஒடுக்கவும்; பிரான்சின் இராணுவ திட்டத்தை (உலகை வெல்லும் திட்டம்) உடைக்கவும் பிரான்சின் மீது போர் தொடுக்க விரும்பினர். அமெரிக்க கப்பற்படை வலுப்படுத்தப்பட்டது; போக்குவரத்து கப்பல்களில் ஆயுதங்கள் பொருத்தப்பட்டு தயாராயின; இங்கிலாந்தும் ஆயுதங்களை வழங்கியது. போர் அறிவிப்பு இல்லாமலேயே 84 பிரெஞ்சுக் கப்பல்கள் கைப்பற்றப்பட்டன. பிரான்சு போரினைத் துவங்கட்டும் என அமெரிக்கர்கள் காத்திருந்தனர்.

1799ல் பிரான்சு சமாதானத்திற்கு ஒப்புக் கொண்டது; புதிய தூதுக்குழுவை அனுப்புமாறும் கேட்டது. ஹாமில்டன் உட்பட பல கூட்டாட்சிவாதிகள் இதனை எதிர்த்தனர். ஆடம்ஸ் போரினை விரும்பாது தூதுக்குழுவினை அனுப்பி வைத்தார். அவர்கள் பிரான்சை அடைந்தபோது நெப்போலியன் பதவியிலிருந்தார். அவர் 1800ல் சமாதான உடன்படிக்கையினை மேற்கொண்டார். இதன்படி பிரான்சால் கைப்பற்றப்பட்ட அமெரிக்க கப்பல்களுக்கு நஷ்டஈடு கேட்பதில்லை என அமெரிக்கா ஒப்புக்கொண்டது; அமைதியாக வணிகம் நடத்தவும் ஒப்புக்கொண்டனர். இவ்வுடன்படிக்கையை கூட்டாட்சிவாதிகள் கடுமையாக எதிர்த்தனர். இதனால் ஆடம்ஸ் அமைதியை நிலைநாட்டினார்; ஆனால் ஹாமில்டனுடன் மோதியதால் இரண்டாவது முறை தேர்ந்தெடுக்கப்படும் வாய்ப்பினை இழந்தார்.

இவர் திறமையும், நேர்மையும், உயர்ந்த நோக்கும் கொண்டவர்; நிரம்ப அரசியல் அனுபவம் உடையவர்; ஆனால் குடியரசு கட்சியினரை ஒடுக்க முனைந்து தனது குறுகிய மனப்பான்மையை வெளிப்படுத்தினார்.

### கூட்டாட்சிவாதிகளின் சாதனைகள்

கூட்டாட்சிவாதிகள் முதல் பன்னிரண்டாண்டுகள் ஆட்சி புரிந்தனர்; இக்காலத்தில் இவர்கள் ஆற்றிய சாதனைகள் குறிப்பிடத்தக்கவையாகும்.

முதலாவதாக வலிமையான கூட்டாட்சியைத் தோற்றுவித்தனர்; மாநிலங்கள் கோரிய கூடுதல் உரிமைகள் மறுக்கப்பட்டன.

இரண்டாவதாக கூட்டாட்சிக்கான அரசியலமைப்பினை உருவாக்கிய பெருமை இவர்களையேச் சாரும்.

மூன்றாவதாக, ஹாமில்டனின் நிதி சீர்திருத்தங்களால் பற்றாக்குறை நாடாக இருந்த அமெரிக்காவை சேமித்து வைக்கும் நாடாக்கினார்; தேசிய வங்கியும் தோற்று விக்கப்பட்டது.

நான்காவதாக மேற்குப் பகுதியிலுள்ள நிலங்களை திறமையாக பங்கீடு செய்தனர்; பழங்குடியினரையும் அடக்கி வைத்தனர்.

ஐந்தாவதாக பல்வேறு பொருளாதார வளர்ச்சிக்கும், தொழில் வளர்ச்சிக்கும் அடித்தளம் அமைத்துக் கொடுத்தனர்.

இறுதியாக 'தனித்திருக்கும் கொள்கை அல்லது 'மன்ரோ கோட்பாடு' என சிறப்பித்துக் கூறும் வெளிநாட்டுக் கொள்கைக்கான வித்தும் இவர்கள் காலத்தில் ஊன்றப்பட்டது என்பது சிறப்பிற்குரியதாகும்.

1789ல் அமெரிக்கா நிலைக்குமா? என்ற ஐயம் இருந்தது; ஆனால் 1800ல் அத்தகைய ஐயம் ஏதுமில்லை என்பது இவர்களது சாதனையின் வெளிப்பாடாகும்.

# அலகு 1.7
# தாமஸ் ஜெபர்சன்

1. ஜெபர்சனின் அரசியல் கொள்கைகள்

2. உள்நாட்டுக் கொள்கை

   (a) அரசியல் மாற்றங்கள்

   (b) மாடிசனுக்கு எதிரான மார்பரி வழக்கு

   (c) லூயிசியானா வாங்கப்படுதல்

   (d) ஆப்பிரிக்க நாடுகளுடன் போர்

   (e) ஆரன்பர் விவகாரம்

3. வெளிநாட்டுக் கொள்கை

4. மதிப்பீடு

# அலகு 1.7
# தாமஸ் ஜெபர்சன்

"Democracy had come into Power"
மக்களாட்சி பதவிக்கு வந்துள்ளது.

நெவின்ஸ்.

மாநிலங்களின் உரிமைகளிலும் மக்களின் சுதந்திரத்திலும் அசைக்க முடியாத நம்பிக்கையுடையவர்.

C.P.ஹில்

"அமெரிக்க சுதந்திர அறிக்கையைத் தயாரித்தவர்; வர்ஜீனியாவின் சமயச் சுதந்திரத்திற்கான வர்ஜீனியா சட்டத்தை ஏற்படுத்தியவர்; வர்ஜீனியா பல்கலைக் கழகத்தின் தந்தை" என்றெல்லாம் போற்றப்படுகிற தாமஸ் ஜெபர்சன் அமெரிக்காவின் மூன்றாவது குடியாட்சித் தலைவராவார். இவரது உள்நாட்டுக் கொள்கை வெற்றிபெற்ற அளவிற்கு, வெளிநாட்டுக் கொள்கை வெற்றி பெறவில்லை எனலாம்.

## *1. ஜெபர்சனின் அரசியல் கொள்கைகள்*

இவரது தேர்தலை இரண்டாவது புரட்சி என்று கூறுகின்றனர். ஜெபர்சனின் அரசியல் கொள்கைகளாவன:- அரசாங்கம் குறைந்த அளவே பொறுப்புடையதாக இருக்க வேண்டும். பொதுமக்களை மிகுதியாகக் கட்டுப்படுத்தக் கூடாது; பெரும்பான்மையோரின் கருத்துக்கு மதிப்பளிக்க வேண்டும்; ஆட்சித்துறைக்கு இராணுவம் கட்டுப்பட்டிருக்க வேண்டும்; சட்டத்தின் முன் அனைவரும் ஏழை, பணக்காரன் வேறுபாடின்றி சமமாக நடத்தப்பட வேண்டும்; அமெரிக்க

அரசு சிறு நில உடைமையாளர்களை அடிப்படையாகக் கொண்டு விளங்க வேண்டும் என்றார்; பெரு வணிகர்களுக்கும், தொழிலதிபர்களுக்கும் முக்கியத்துவம் கொடுக்கவில்லை. மாநிலங்களில் உரிமைகளை அதிகமாக காண நாட்டங்கொண்டார்.

## 2. உள்நாட்டுக் கொள்கை

### (a) அரசியல் மாற்றங்கள்

ஜெபர்சன் அரசியலில் சில மாற்றங்களைப் புகுத்தினார். ஜேம்ஸ் மாடிசனை வெளிவிவகாரச் செயலராகவும்; அல்பர்ட் கால்லடின் (Albert Gallatin) என்பவரை கருவூல செயலராகவும் நியமித்தார். மக்களால் வெறுக்கப்பட்ட அயலவர் சட்டம், அரசுத் துரோகச் சட்டம் ஆகியவற்றை ரத்து செய்தார். விஸ்கி மீது விதிக்கப்பட்டிருந்த வரியினை ரத்து செய்தார்; இதனால் ஏற்பட்ட நஷ்டத்தை இறக்குமதியின் மீது விதிக்கப்பட்ட கூடுதல் சுங்க வரியால் சமன் செய்தார். நள்ளிரவு நீதிபதிகள் நியமிக்கப்பட காரணமாய் இருந்த, 1801ல் இயற்றப்பட்ட நீதித்துறை சட்டத்தை ரத்து செய்தார். 1802ல் ஒகியோ (Ohio) மாநிலம் கூட்டாட்சியில் சேர்க்கப்பட்டது. அரசாங்க வீண்செலவுகளை கட்டுப்படுத்தினார்; குறிப்பாக கப்பற்படை, இராணுவம் ஆகியவற்றிற்கான செலவுகள் குறைக்கப்பட்டன; இதனால் கிடைத்த தொகையைக் கொண்டு தேசியக்கடன்களை விரைந்து திருப்பித்தர முனைந்தார்.

இவர் தனது ஆதரவாளர்கள் பலருக்கு பதவியளிக்க வேண்டி சில அலுவலர்களை பதவி நீக்கம் செய்தார். இது பிற்காலத்தில் தோன்றிய "வெற்றி பெற்ற கட்சி ஆதாயப் பங்கு பெறும் முறை" (Spoils system) தோன்றிட முன்னோடியாக அமைந்தது.

### (b) *மாடிசனுக்கு எதிரான மார்பரி வழக்கு*

1801ம் ஆண்டு நீதித்துறை சட்டம் ரத்து செய்யப்பட்டதால் அதன்படி நியமிக்கப்பட்ட நீதிபதிகள் பதவியிலிருந்து விலக்கப்பட்டனர். அவர்களுக்கு மீண்டும் பதவி வாங்கித்தர கூட்டாட்சிவாதிகள் வழக்குத் தொடுத்தனர். இவ்வழக்கை ஆராய்ந்த தலைமை நீதிபதி ஜான்மார்ஷல் அரியதொரு விளக்கத்தை அளித்தார்; "சட்டமன்றத்தால் உருவாக்கப்பட்ட சட்டம் அரசியலமைப்பிற்கு முரணாக இருந்தால் அது செல்லாது எனக்கூறும் அதிகாரம் நீதித்துறைக்கு உண்டு" என்று கூறினார். இதனை 'நீதி மறுஆய்வு' (Judicial Review) என்று கூறுகின்றனர். நீதித்துறையுடனான மோதலில் ஜெபர்சன் எதிர்பார்த்த அளவிற்கு வெற்றி பெறவில்லை எனினும் நீதிபதிகள் நியாயம் வழங்குவதில் கவனமாக நடந்து கொண்டதுடன், அரசியலிலிருந்து ஒதுங்கலாயினர்.

### (c) *லூயிசியானா வாங்கப்படுதல்*

ஜெபர்சனின் ஆட்சியின் மிகச்சிறந்த நிகழ்ச்சி லூயிசியானா (Louisiana) வாங்கப்பட்டதே ஆகும். மிசிசிபி நதிக்கு மேற்கே உள்ள பகுதியில் பிரெஞ்சுக்காரர்கள் ஒரு குடியேற்றத்தை அமைத்தனர்; 14ம் லூயியின் பெயரால் லூயிசியானா என்பட்டது. ஏழாண்டுப் போரில் உதவியமைக்காக பிரான்சு, இப்பகுதியை ஸ்பெயினுக்கு பரிசாக வழங்கியது. 1800ல் ஒரு இரகசிய உடன்படிக்கையின்படி (சான் இல் டெபான்சோ) ஸ்பெயினிடமிருந்து நெப்போலியன் மீட்டுக் கொண்டார். 1802ல் இச்செய்தி வெளிப்படவே அமெரிக்க அச்சம் கொண்டது. பிரான்சு புதிய உலகில் தன் வலிமையை பெருக்கிக் கொள்ளவும் மேற்குப் பகுதிகளுடனான வணிகத்தை அழிக்கவும் முயன்றது. எனவே பிரான்சு

லூயிசியானாவை கைப்பற்ற முயன்றால் அமெரிக்கா இங்கிலாந்துடன் கூட்டு சேரும் என எச்சரித்தார்.

நெப்போலியன், அமெரிக்காவும், இங்கிலாந்தும் கூட்டு சேரும் அபாயம் கண்டு அஞ்சினார். மேற்கிந்திய தீவுகளில் தனது ஆதிக்கத்தை நிலைநாட்ட முயன்று, மஞ்சள் காய்ச்சலாலும் (Yellow fever), நீக்ரோக்கள் தொல்லையாலும் தோல்வியுற்றார். பிரிட்டனுடன் மீண்டும் போர் எழும் சூழ்நிலை எழுந்தது; அதற்கு மிகுதியான பொருளும் தேவைப்பட்டது. இந்நிலையில் அமெரிக்காவை பகைத்துக் கொள்வதும், அமெரிக்காவிற்கு எதிராக லூயிசியானாவைக் கட்டிக்காப்பதும் இயலாது என்பதை உணர்ந்தார். மேலும் அமெரிக்காவை தனது நண்பராக்கிக் கொள்ளவும், இங்கிலாந்தின் நிரந்தர எதிரியாக்கும் எண்ணத்துடனும் லூயிசியானாவை முழுமையாக விற்க எண்ணினார்.

1803ல் ஜெபர்சன், ஜேம்ஸ் மன்ரோவை (James Manroe) சிறப்புத் தூதுவராக அனுப்பி வைத்தார். பாரிஸில் நடந்த பேச்சு வார்த்தைகளின்படி 15 மில்லியன் டாலருக்கு லூயிசியானாவை விற்க பிரான்சு ஒப்புக் கொண்டது; இதனை அமெரிக்காவும் ஏற்றது. இவ்வாறு லூயிசியானாவை வாங்கியது அரசியலமைப்பிற்கு முரணானது என்று சிலர் கூறினர். புதிய நிலப்பகுதி எதனையும் வாங்க அரசியலமைப்புப்படி குடியாட்சித் தலைவருக்கு அதிகாரமில்லை என்றும்; காங்கிரஸின் ஒப்புதலின்றி செயல்பட்டு விட்டார் என்றும் குறைகள் கூறப்பட்டது. ஆனால் 'பொதிந்துள்ள அதிகாரக் கோட்பாட்டின்படி' நாட்டின் நலனுக்காக பிற நாடுகளுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளவும், நிலப்பகுதியை வாங்கவும் உரிமை உண்டு எனச் சிலரும் வாதிட்டனர்.

லூயிசியானா வாங்கப்பட்டதால் அமெரிக்காவின் நிலப்பரப்பு இருமடங்காக பெருகியது; வணிக வளத்திற்கு ஏற்ற மிசிசிபி நதியும் துறைமுகமான நியூஆர்லியன்ஸீம் அமெரிக்க ஆதிக்கத்தின்கீழ் வந்தன; பிரெஞ்சுக்காரர்களின் ஆதிக்கம் வடஅமெரிக்காவில் முழுமையாக அகற்றப்பட்டது; இப்பகுதியின் செழிப்பால் தானிய உற்பத்தி மிகுதியாக பெருகலாயிற்று; லூயிசியானாவின் எல்லைகள் வரையறுக்கப்படாமையால் பிற்காலத்தில் டெக்சாஸ் (Texas), பிளாரிடாவின் ஒரு பகுதி ஆகியவற்றின் மீது அமெரிக்கா உரிமை கொண்டாட முடிந்தது. மேலும் இந்தியப் பழங்குடியினருக்கு ஐரோப்பியர்களின் மறைமுக உதவி கிட்டுவது தடைப்பட்டது.

### (d) ஆப்பிரிக்க நாடுகளுடன் போர்

மத்தியத் தரைக் கடலில் சென்ற அமெரிக்க வாணிபக் கப்பல்களிடமிருந்து அல்ஜீரியா, டியூனிஸ், டிரிப்போலி போன்ற வடஆப்பிரிக்க நாடுகள் கப்பம் வசூலித்தன. டிரிப்போலியின் பாஷா அதிகமாக கப்பம் கட்டக் கூறினார்; மேலும் டிரிப்போலியின் கடற்கொள்ளைக்காரர்கள் அமெரிக்க கப்பல் ஒன்றைத் தாக்கியதுடன், அமெரிக்க கொடியினையும் இழிவுபடுத்தினர்; பல மாலுமிகளும் சிறைப்பிடிக்கப்பட்டனர். எனவே ஜெபர்சன் ஒரு பெரும் படையினை அனுப்பி வைத்தார். இரண்டு ஆண்டுகளுக்குப்பின் டிரிப்போலியின் பாஷா மாலுமிகளை விடுவித்ததுடன் கப்பம் வாங்குவதில்லை என்று உறுதி கூறினார்.

### (e) ஆரன்பர் விவகாரம்

குடியாட்சியின் துணைத் தலைவரான ஆரன்பர் (Aaron Burr) பெரும் தொல்லைகளுக்குக் காரணமாயிருந்தார்.

சுயநலவாதியான இவர் ஜெபர்சனுடனும், குடியரசுக் கட்சியினருடனும் கருத்து வேறுபாடு கொண்டிருந்தார். இதையறிந்த கூட்டாட்சிவாதிகளில் சிலர் இவரை 1804ல் நியூயார்க்கின் ஆளுநர் தேர்தலில் நிற்குமாறு தூண்டினர். வெற்றி பெற்றபின் புதிய இங்கிலாந்து பகுதியினை கூட்டாட்சியிலிருந்து பிரித்துவிடவும் திட்டம் தீட்டினர். ஆனால் ஹாமில்டன் தனது செல்வாக்கினைப் பயன்படுத்தி ஆரன்பர்ரை தோல்வியடையச் செய்தார். எனவே, ஆரன்பர், ஹாமில்டனை வம்புச் சண்டைக்கிழுத்தார். அதில் ஹாமில்டன் கொல்லப்பட்டார். இதனால் மக்கள் வெகுண்டெழுந்தனர். 1806ல் லூயிசியானாவை கூட்டாட்சியிலிருந்து பிரிப்பதற்கான சதியில் ஈடுபட்டதாக துரோகக் குற்றம் சாட்டப்பட்டு, பின்னர் விடுதலை செய்யப்பட்டார். இதனால் வருத்தமுற்ற ஆரன்பர் பிரான்சில் குடியேறி எஞ்சிய காலத்தை கழித்தார்.

1804ம் ஆண்டுத் தேர்தலில் ஜெபர்சன் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவரது இரண்டாவது ஆட்சிக்காலம் சிக்கல் நிறைந்ததாய் விளங்கியது. பன்னிரண்டாவது அரசியலமைப்பு திருத்தத்தின்படி துணைத்தலைவர் தனியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### 3. வெளிநாட்டுக் கொள்கை

ஜெபர்சன் வாஷிங்டனின் அடிச்சுவட்டைப் பின்பற்றி அமைதியான வெளிநாட்டுக் கொள்கையினை பின்பற்றினார். ஆனால் நெப்போலியனது போரால் ஐரோப்பாவில் ஏற்பட்ட மாறுதல்கள் அமெரிக்கர்களை வெகுவாகப் பாதித்தது. நெப்போலியன் கண்டத் திட்டத்தின் மூலம் இங்கிலாந்திற்கு எதிராகப் பொருளாதாரப் போரில் ஈடுபட்டார்; பெர்லின் ஆணைகள் (Berlin Decrees) மூலம் இங்கிலாந்துடனான வணிகத்திற்கு தடை விதித்தார். இங்கிலாந்தும் பதிலுக்கு

அரசவை ஆணைகள் (Ordinance in council) மூலம் பிரான்சுடனான வணிகத்திற்கு தடை விதித்தது. இதனால் அமெரிக்க வணிகம் பெரிதும் பாதிக்கப்பட்டது.

போரில் ஈடுபட்டிருக்கும் இரு நாடுகளையும் பொருளாதார நடவடிக்கைகள் மூலம் பணிய வைக்க முயன்றார். 1806ல் 'இறக்குமதியின்மை சட்டத்தை' (Non-Importation Act) இயற்றினார். இதன்படி மற்ற நாடுகளிலிருந்து கிடைக்கும் எப்பொருளையும் இங்கிலாந்திடமிருந்து இறக்குமதி செய்யக்கூடாது என்று அறிவித்தார். இது போதிய பலனைத் தரவில்லை. போரில் ஈடுபட்டிருக்கும் நாடுகளுக்கு நடுநிலைக் கொள்கை வகிக்கும் நாடுகளின் உதவி அவசியமாகும்; அதனை முறித்துக் கொள்வதாக அச்சுறுத்தி அவ்விரு நாடுகளையும் அடக்க எண்ணினார். 1807ல் வணிபத் தடைச் சட்டத்தை (Embargo Act) இயற்றினார். இதன்படி அமெரிக்க கப்பல்கள் அன்னிய நாடுகளுக்குச் செல்வது தடை செய்யப்பட்டது. எதிர்பார்த்ததற்கு மாறாக எதிரிகளுக்கு தொல்லைகள் தருவதற்கு மாறாக அமெரிக்காவின் பொருளாதாரத்திற்கு பெருந்தீங்கினை விளைவித்தன. உற்பத்தி பெருகியது, விலைகள் குறைந்தன; கடல் வணிக நிறுவனங்கள் முறிந்தன; நாட்டில் குழப்பங்களும் எதிர்ப்புகளும் எழலாயின. எனவே ஜெபர்சன் தன்னுடைய கொள்கையை சற்று மாற்றியமைத்தார். வணிகத்தடை சட்டத்திற்கு பதிலாக 'உறவின்மை சட்டத்தை' (Non-Intercourse Act) நிறைவேற்றினார். இதன்படி பிரான்சு, இங்கிலாந்து போன்ற நாடுகளுடனோ அதன் கட்டுப்பாட்டில் உள்ள நாடுகளுடனோ வணிகம் செய்யக்கூடாது. ஆனால் இவ்விரு நாடுகளில் ஏதேனும் ஒன்று நடுநிலைக் கொள்கை நாட்டின் வணிகத்தை தாக்காமலிருந்தால் அந்நாட்டுடன் வணிக உறவு கொள்ளப்படும் என்றும் அறிவித்தார். நெப்போலியன் இதற்கிணங்க அமெரிக்காவிற்கு எதிரான

நடவடிக்கைகளை நிறுத்திவிட்டதாக அறிவித்தார். எனவே பிரான்சுடன் வணிகத்தொடர்பு மீண்டும் ஏற்பட்டது; இங்கிலாந்துடன் பகை வளர்ந்தது.

ஆங்கிலேயக் கடற்படையினர் தங்களது மாலுமிகள் அமெரிக்க கப்பல்களில் ஒளிந்துள்ளனரா? என்று அறிய அமெரிக்க கப்பல்களை தடுத்து நிறுத்தி சோதனையில் ஈடுபட்டனர். இதனால் பல தொல்லைகள் எழுந்தன. தோற்றத்தில் வேறுபாடு இல்லாததால் அமெரிக்க மாலுமிகளை ஆங்கிலேய மாலுமிகள் எனத் தவறாக நினைத்து இழுத்துச் சென்றனர். இதனால் இங்கிலாந்திற்கும் அமெரிக்காவிற்கும் இடையேயான உறவுகள் நலிவுற்றன.

### *மதிப்பீடு*

ஜெபர்சன் மக்களது உரிமையில் மிகுந்த நாட்டம் கொண்டவர்; அவ்வளவில் அப்ரஹாம்லிங்கனுடன் (Abraham Lincoln) ஒப்பிடப்படுகின்றார். ஆற்றல் மிக்கவர்; ஆனால் எந்தக் கொள்கைகளை வன்மையாகக் கண்டித்தாரோ அதே கொள்கைகளையே தன் ஆட்சிக் காலத்தில் பின்பற்ற வேண்டியவரானார். இவரது பேச்சில் இருந்த வேகம் செயலில் இல்லை எனலாம். இவரை மூன்றாவது முறையாக பதவி வகிக்க மக்கள் கேட்டுக் கொண்டபோது, வாஷிங்டனின் அடிச்சுவட்டை பின்பற்றி மறுத்து விட்டார். இவரது உள்நாட்டுக் கொள்கை இவருக்கு மிகுந்த பெருமையை பெற்றுத் தந்தது. ஆனால் வெளிநாட்டுக் கொள்கை மிகுந்த மனக்கசப்பையே உண்டாக்கியது; அத்துடனே அவர் ஓய்வு பெற்றார். இவரை "மாண்டிசெலோவின் மாமுனிவர்" என்று அழைத்தனர். மக்களது உரிமைகளை மதித்த ஜெபர்சன் அவ்வுரிமைகளை இந்தியப் பழங்குடியினருக்கு வழங்க மறுத்தார். அவர்களை மிசிசிபி ஆற்றுக்கு அப்பால் குடிபெயரச் செய்தார்.

# அலகு 1.8
# ஜேம்ஸ் மாடிசனும் 1812ம் ஆண்டுப் போரும் 1809-1817

1. காரணங்கள்

   (a) வணிகச்சிக்கல்கள்

   (b) இந்தியப் பழங்குடியினர்

   (c) போர் வெறியர்கள்

   (d) மாடிசனது இரண்டாவது தேர்தல்

   (e) செசாபிக்-லெப்பர்ட் நிகழ்ச்சி

2. போக்கு

3. கெண்ட் உடன்படிக்கை

4. ஹார்ட் போர்டு மாநாடு

5. விளைவுகள்

6. போருக்கு பிந்தைய பிரச்சனைகள்

# அலகு 1.8
# ஜேம்ஸ் மாடிசனும் 1812ம் ஆண்டுப் போரும் 1809-1817

"அரசியல் சுதந்திரமடைந்த அமெரிக்கா பொருளாதாரச் சுதந்திரமடைய மேற்கொண்ட போர், 1812ஆம் ஆண்டுப் போர்".

ஜெபர்சனுக்குப் பிறகு ஜேம்ஸ் மாடிசன் (1809-1817) அமெரிக்காவின் நான்காவது குடியாட்சித் தலைவரானார். இவரது காலத்தில் '1812ம் ஆண்டுப் போர்' ஏற்பட்டது; இதனை 'மாடிசனது போர்' என்றும் கூறுகின்றனர். இப்போர் இங்கிலாந்திற்கும் அமெரிக்காவிற்கும் இடையே எழுந்தது. இப்போரினை 'இரண்டாவது சுதந்திரப் போர்' என்றும் கூறுகின்றனர்; ஏனெனில் முதல் போர் அரசியல் சுதந்திரத்தைப் பெற்றுத்தந்தது; இரண்டாவது போர், பொருளாதார உரிமைகளை மீட்டுத் தந்தது எனலாம். இப்போர் பல அரிய விளைவுகளைத் தோற்றுவித்தது.

### *காரணங்கள்*

### (a) *வணிகச் சிக்கல்கள்*

அமெரிக்க சுதந்திரப் போருக்குப்பின் இங்கிலாந்து அமெரிக்க வணிகத்திற்கு தடைவிதித்தது; இதனால் மக்கள் மனக்கசப்டைந்தனர். ஆங்கிலேயர்கள் மேற்கிலுள்ள காவல் நிலையங்களை விட்டகல மறுத்தது வெறுப்பை அதிகரித்தது.

ஜே உடன்படிக்கையின் போது ஆங்கிலேயர்கள் தங்களை ஏமாற்றி விட்டதாகவும் வெறுப்பு காட்டினர்.

இச்சமயத்தில் நெப்போலியனுக்கும் இங்கிலாந்திற்கு மிடையே போர் எழுந்தது. ஆங்கிலேய மாலுமிகள் சலுகைகள் காரணமாகவும், அதிக ஊதியத்திற்கும் ஆசைப்பட்டு அமெரிக்க கப்பல்களில் பணிபுரியலாயினர்; இதனால் மாலுமிகள் பற்றாக்குறை எழுந்தது. எனவே பாராளுமன்ற ஆணையின்படி ஆங்கிலேய மாலுமிகள், அமெரிக்கக் கப்பல்களில் உள்ளனரா எனக் கண்டறியும் பொருட்டு அமெரிக்க கப்பல்களை அடிக்கடி தடுத்து நிறுத்தி சோதனைகள் மேற்கொண்டனர். தோற்றத்தில் வேறுபாடு இல்லாததால் அமெரிக்க மாலுமிகளை, ஆங்கிலேய மாலுமிகள் என வலுக்கட்டாயமாக இழுத்துச் சென்றனர்; மூன்றாண்டுகளுக்குள் 6000க்கும் மேற்பட்ட வழக்குகள் எழுந்தன.

தவிர நெப்போலியனது கண்டத் திட்டத்தால் அமெரிக்க வணிகம் பாதிக்கப்பட்டது. வணிகத்தடை சட்டத்தால் மிகுந்த பொருளாதார நெருக்கடிகள் எழுந்தன; பொருட்கள் தேங்கின, விலைகள் விழுந்தன, கப்பல் நிறுவனங்கள் முறிந்தன; பொருளாதாரம் ஸ்தம்பித்தது. ஜெபர்சன் 'வணிக உறவின்மை' சட்டத்தை வெளியிட்டபோது, பிரான்சு அதனை ஏற்றது; அதனால் இங்கிலாந்தின் பகை வளர்ந்தது.

### (5) இந்தியப் பழங்குடியினர்

இந்தியப் பழங்குடியினர் மிசிசிபி ஆற்றுக்கு அப்பால் விரட்டப்பட்டனர். அவர்களில் கிரிக்ஸ், சோக்டாஸ், செரோக்கிகள், செமினோல்கள் என பல குடும்பங்கள் இருந்தன. இவர்கள் தேக்கும்சே (Tecumsch) என்பவரின் தலைமையில் ஒன்று சேர்ந்தனர். அவர் திப்பிக்கானோ

(Tippecanoe) என்ற இடத்தில் தலைநகர் ஒன்றினை நிறுவினர். இவர்கள் கொள்ளையர்களுடன் ஒத்துழைக்க மறுத்தனர்; பழங்குடியினர் அனைவரின் இசைவும் பெறாமல் நிலத்தை அமெரிக்காவிற்கு விற்கக்கூடாது என கண்டித்தனர். இவர்களுக்கு இங்கிலாந்து, கனடா வழியாக உதவுவதாக அமெரிக்கர்கள் எண்ணினர். அவர்கள் தனி அரசு அமைக்க உள்ளதாகவும் எண்ணி அஞ்சினர்.

### (c) *போர் வெறியர்கள்* (War Hawks)

அமெரிக்காவின் நிலப்பரப்பை அதிகரிக்க வேண்டும் என சிலர் விரும்பினர்; குறிப்பாக கனடாவிலும், பிளாரிடாவிலும் அமெரிக்க ஆதிக்கத்தை நிலைநிறுத்த விரும்பினர். இவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் 'ஹென்றி கிளே' (Henry clay), 'ஜான்.சி.கால்ஹீன்' (John.C.Calhoun) போன்றவர்கள் முக்கியமானவர்களாவர். இவர்களைப் 'போர் வெறியர்கள்' அல்லது 'போர் பருந்துகள்' என்றழைத்தனர். இவர்களின் செயல்பாடுகள் போருக்கு காரணமாயிற்று.

### (d) *மாடிசனது இரண்டாவது தேர்தல்*

மாடிசன் தான் இரண்டாவது முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால், இங்கிலாந்துக்கு எதிராக போர் தொடுப்பதாக வாக்குறுதி அளித்தார். இவர் தேர்ந்தெடுக்கப்பட்டதால் போர் அவசியமாயிற்று.

### (e) *செசாப்பிக்-லெப்பர்ட் நிகழ்ச்சி* (1807)

1807ல் ஆங்கிலேயப் போர் கப்பலான 'லெப்பர்ட்' அமெரிக்க கப்பலான 'செசாப்பிக்கை' வழிமறித்து சுட்டது; அதிலிருந்த நான்கு அமெரிக்கர்களைக் கடத்திச் சென்றது. இந்நிகழ்ச்சி போருக்கு உடனடி காரணமாக அமைந்தது.

## 2. போக்கு

இப்போரினை பெரும்பாலோர் விரும்பினாலும், புதிய இங்கிலாந்து மாநிலங்களும், வேறு சில மாநிலங்களும் எதிர்த்தன; போதிய நிதியும் இல்லாதிருந்தது. இராணுவ வீரர்களின் எண்ணிக்கையும் போதிய அளவில் இல்லை; எதிர்பார்த்ததற்கு மாறாக சில மாநிலங்கள் தங்கள் எல்லைகளுக்கு அப்பால் போரிட மாநில இராணுவத்தை அனுப்ப மறுத்தன. நல்வினையாக இங்கிலாந்து, பிரான்சுடன் கடுமையான போரில் ஈடுபட்டிருந்ததால் தனது முழு கவனத்தையும் செலுத்த முடியாமலிருந்தது; இல்லையெனில் போரின் முடிவு வேறுவிதமாக இருந்திருக்கும்.

கனடாவைக் கைப்பற்ற முயன்ற அமெரிக்காவின் மும்முனைத் தாக்குதல் தோல்வியில் முடிந்தது. தளபதி ஹல் (William Hull) தலைமையிலான அமெரிக்கப் படையை, இந்தியப் பழங்குடியினர் தோற்கடித்து, டெட்ராய்ட் (Detroit) நகரினைக் கைப்பற்றினர். ஆனால் தளபதி ஹாரிசன் (Harrison) இந்தியர்களை விரட்டியடித்தார். தளபதி பெர்ரியின் (Perry) தலைமையிலான படைகள், ஆங்கிலேய கடற்படையை ஐம்பெரும் ஏரிகளில் தோற்கடித்தது. கனடாவில் தேம்ஸ் நதிக்கரையில் நடந்த போரில் 'தேக்கும்சே' ஹாரிசனால் கொல்லப்பட்டார்.

நெப்போலியனுடனான போரிலிருந்து விடுபட்ட இங்கிலாந்து புதிய துருப்புகளை அனுப்பி வைத்தது. ஆனால் ஐம்பெரும் ஏரிகளைக் கைப்பற்ற முயன்ற ஒரு பிரிவு தோற்கடிக்கப்பட்டது; மற்றொரு பிரிவு வாஷிங்டனைத் தாக்கியது; குடியரசுத் தலைவர் மாளிகைக்கும் தீயிட்டது. நல்வினையாக மேடிசன் தப்பியோடினார். தீயின் சுவடுகள் மறைய வெள்ளை வர்ணம் பூசப்பட்டதால், இம்மாளிகை

'வெள்ளை மாளிகை' எனப்பெயர் பெற்றது. வர்ஜீனியா தற்காலிகத் தலைநகரானது. பால்டிமோர் (Baltimore) நகரினை கைப்பற்ற முயன்ற ஆங்கிலேயர்கள் தோல்வியுற்றனர். நியூஆர்லியன்ஸைக் கைப்பற்ற முயன்ற ஆங்கிலேயர்களை 'ஆண்ட்ருஜாக்சன்' திறமையாக தடுத்து நிறுத்தினார். இதற்கிடையில் சமாதான உடன்படிக்கை ஏற்பட்டு, போர் நிறுத்தப்பட்டது.

### *3. கெண்ட் உடன்படிக்கை*
### (Treaty of Ghent) Dec 1813

பெல்ஜியத்தில் கெண்ட் நகரில் சமாதான உடன்படிக்கை மேற்கொள்ளப்பட்டது; அமெரிக்கா ஐவர் அடங்கிய குழுவை அனுப்பியது. இதன்படி போருக்கு முந்தைய நிலைக்குத் திரும்ப இரு நாடுகளும் ஒப்புக் கொண்டன; மற்ற பிரச்சனைகள் பற்றி குறிப்பிடப்படவில்லை; அவற்றை நடுவர் குழு ஒன்றின் முடிவுக்கு விட இரு நாடுகளும் ஒப்புக்கொண்டன.

நடுவர் குழுவின் முயற்சியால் பல ஒப்பந்தங்கள் செய்யப்பட்டன. 1815ம் ஆண்டு வணிக ஒப்பந்தத்தின்படி இருநாடுகளுக்கும் இடையேயான வணிகத் தொடர்பு மீண்டும் ஏற்பட்டது. 1817ம் ஆண்டு ஏற்பட்ட ரஷ்-பேகாட் (Rush-Bagot) உடன்பாட்டின்படி இருநாடுகளும் ஐம்பெரும் ஏரிகளில் போர்க் கப்பல்களை வைத்துக் கொள்ளக் கூடாது எனவும்; கோட்டை கொத்தளங்கள் கட்டக்கூடாது என்றும் முடிவாயிற்று. 1818ம் ஆண்டு மீன்பிடிப்பு ஒப்பந்தத்தின்படி கனடாவின் பகுதியில் அமெரிக்கர்கள் மீன்பிடிக்க அனுமதிக்கப்பட்டனர். ஐம்பெரும் ஏரியிலிருந்து மேற்கே ராக்கி மலைகள் வரை $49^0$ எல்லைக்கோடாக ஏற்கப்பட்டது.

## 4. ஹார்ட் போர்ட் மாநாடு (Hardford convention) 1814

இப்போரை எதிர்த்து நியூ புதிய இங்கிலாந்து மாநிலங்கள் கண்டித்தன. அவற்றின் பிரதிநிதிகள் கனக்டிகட்டில் ஹார்ட்போர்ட் நகரில் ரகசியமாகக் கூடி கூட்டமைப்பிலிருந்து விலக வேண்டும் எனக் கூறினர்; ஆனால் தீர்மானம் வெற்றிபெறவில்லை. மேலும் அரசியலமைப்பில் சில திருத்தங்களைக் கோரினர். போர் அறிவிப்பிற்கு காங்கிரசில் 2/3 பங்கு பெரும்பான்மையினரின் ஒப்புதல் வேண்டும்; அயல்நாட்டு வணிகத்திற்கு 60 நாட்களுக்கு மேல் தடைவிதிக்கக் கூடாது; கட்டாயப்படுத்தி யாரையும் இராணுவத்தில் சேர்க்கக் கூடாது; ஒருவர் ஒருமுறை மட்டுமே குடியாட்சித் தலைவராக பதவி வகிக்கலாம் போன்ற பல தீர்மானங்களை நிறைவேற்றினர். இதனை ஒரு குழு காங்கிரசில் சமர்ப்பித்தது; ஆனால் கவனிக்கப்படவில்லை. இதனை மக்கள் `துரோகத் தீர்மானங்கள்' எனக் கடிந்துரைத்தனர். இதனால் கூட்டாட்சிக் கட்சியின் செல்வாக்கு குறைந்தது.

## 5. விளைவுகள்

1812ம் ஆண்டுப் போர் பல அரிய விளைவுகளை தோற்றுவித்தது. இந்தியப் பழங்குடியினர் அடக்கப்பட்டனர்; இதனால் வடமேற்கு, தென்மேற்கு பகுதிகளில் அமெரிக்கர்கள் குடியேறலாயினர்; தேக்கும்சே கொல்லப்பட்டது வாய்ப்பாயிற்று; அமெரிக்கர்களிடையே ஒற்றுமையுணர்வும், தேசிய உணர்வும் பெருகலாயிற்று; போரின் போது சிறைப்பிடிக்கப்பட்ட அமெரிக்க மாலுமியான பிரான்சிஸ் ஸ்காட் கே (Francis Scott Key) என்பவர் (The star of spanglad canner) என்ற பாடலைப் பாடினார். அதுவே அமெரிக்காவின் தேசிய கீதமாயிற்று; கடியரசுத் தலைவர்

மாளிகையும் வெள்ளை மாளிகை எனப்பட்டது. தொழிலும் வணிகமும் வளர்ச்சி பெற்றது; தொழிற்புரட்சி ஏற்பட்டது; மாற்றுருப்புகளைப் பொருத்தும் முறையும் கண்டறியப்பட்டது. எலிவிட்னி (Eli Whitney) என்பவர் பருத்தியிலிருந்து கொட்டையை நீக்கும் 'காட்டன்ஜின்' (Cotton Gin) என்ற இயந்திரத்தைக் கண்டுபிடித்தார். இரு நாட்டவருக்கிடையேயான பகை தொடர்ந்து நிலவியது; அமெரிக்கர்கள் ஐரோப்பிய விவகாரங்களிலிருந்து விலகி நிற்கும் 'தனித்திருக்கும் கொள்கையை' (Policy of Isolation) பின்பற்றலாயினர். கூட்டாட்சி கட்சியின் செல்வாக்கு குறைந்தது. தேசியக்கடன் அதிகரித்தது; நாணயத்தின் மதிப்பு குறையலாயிற்று.

## 6. போருக்குப் பிந்தைய பிரச்சினைகள் (1814-17)

1812ம் ஆண்டுப் போருக்குப்பின் பல சிக்கல்கள் எழுந்தன; இங்கிலாந்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது அவை அத்துணை கடுமையானதாக இல்லை எனலாம். முதலாவதாக வேலையில்லாத் திண்டாட்டம் எழுந்தது. இந்நிலையில் ஆங்கிலேய உற்பத்தியாளர்கள் ஏராளமான பொருட்களைக் கொண்டு வந்து குவித்ததுடன், குறைந்த விலைக்கும் விற்றனர். இதனால் பல புதிய தொழில்களுக்கான தொழிற்சாலைகள் மூடப்பட்டன. இச்சிக்கலிலிருந்து விடுபட 'பாதுகாப்பு வரியினை' விதித்தனர். இவை தொழிற்சாலைகள் நிறைந்த வடமாநிலங்களுக்கு சாதகமாகவும், தொழிற்சாலைகள் இல்லாத தென்மாநிலங்களுக்கு பாதகமாகவும் அமைந்தன. இரண்டாவதாக ஹாமில்டனால் தோற்றுவிக்கப்பட்ட வங்கியின் சாசனம் 1811ல் முடிவடைந்தது; புதுப்பிக்கப்படாததால் பல சிக்கல்கள் எழுந்தன. எனவே 1816ல் ஹாமில்டனின் அடிச்சுவட்டில் வங்கி மீண்டும் புதுப்பிக்கப்பட்டது.

## அலகு 1.9
# ஜேம்ஸ் மன்றோ 1817-1825

அமெரிக்கா அமெரிக்கர்களுக்கே. அந்நிய நாட்டினர் அமெரிக்க விவகாரங்களில் தலையிடல் கூடாது என குரல் கொடுத்தவர்.

அமெரிக்க ஐக்கிய நாட்டின் முதல் ஐந்து ஜனாதிபதிகளில் நான்கு பேர் வெர்ஜீனியா மாநிலத்தைச் சேர்ந்தவர்கள். ஜேம்ஸ் மன்றோவும் அம்மாநிலத்தவர்தான். அமெரிக்க சுதந்திரப் போரில் பங்கு கொண்டவர். ஜெபர்சனின் நெருங்கிய நண்பர். வெர்ஜீனியா சட்டமன்றத்திலும், கூட்டாட்சி காங்கிரசிலும் உறுப்பினராக இருந்தார். 1780இல் செனட் உறுப்பினர் ஆனார். 1794இல் பிரான்ஸ் நாட்டிற்கு தூதுவராக அனுப்பப்பட்டார். 1799-1802 வரை வெர்ஜீனியா மாநில கவர்னராக பதவி வகித்தார். 1803-1806 வரை இங்கிலாந்தில் தூதுவராகப் பணியாற்றினார். 1811இல் ஜனாதிபதி மாடிசனின் வெளியுறவுச் செயலராக இருந்தார். 1816 மற்றும் 1820 ஆண்டு தேர்தல்களில் வெற்றிபெற்று ஜனாதிபதி பதவி வகித்தார். இவர் பதவி வகித்த எட்டு ஆண்டுகளில் எந்தவிதமான கட்சி சார்பான எதிர்ப்புகள் எதுவும் எழவில்லை. ஆதலால் இவரது ஆட்சிக்காலத்தை 'நல்லெண்ணங்களின் சகாப்தம்' (Era of Good Feelings) என்றழைக்கப்படுகின்றது.

### *உள்நாட்டுக் கொள்கை*

தனது அமைச்சரவையில் நியுஇங்கிலாந்தைச் சேர்ந்த ஜான் குவின்சி ஆடம்ஸ். வெளியுறவுச் செயலராகவும்,

ஜான்கால்கூன் போர்துறை செயலராகவும், ஜியார்ஜியாவைச் சேர்ந்த வில்லியம் கிராபோர்ட் நிதித்துறை செயலராகவும் நியமிக்கப்பட்டனர். இவருடைய ஆட்சிக்காலத்தில் மேற்குப் பகுதியில் ஆறு புதிய மாநிலங்கள் இண்டியானா (1816), மிச்சிசிபி (1817), இல்லினாய்ஸ் (1818), அலபாமா (1819), மெய்ன் (1820), மிசௌரி (1821) கூட்டாட்சியில் சேர்த்துக் கொள்ளப்பட்டன. தென்பகுதியில் புளோரிடா இணைக்கப்பட்டது முக்கிய நிகழ்வுகளாகும்.

புளோரிடாவில் செமினால் என்ற பழங்குடியினர் வாழ்ந்து வந்தனர். மேலும் அமெரிக்கர்களுக்கு விரோதமாக செவ்விந்தியர்களும், தப்பி ஓடும் அடிமைகளுக்கு புகலிடமாகவும் இப்பகுதி இருந்து வந்தது. கிழக்கு புளோரிடவிலிருந்த செவ்விந்தியர்கள் எல்லைப்புற அமெரிக்கர்களுக்கு தொல்லை கொடுத்து வந்தனர். இவர்களை ஒடுக்குமாறு ஜாக்சனுக்கு மன்றோ உத்தரவிட்டார். அவரும் இப்பகுதிகளுக்கு படையெடுத்துக் சென்று செயின்ட் மார்க்ஸ், பென்சகோலா நகரங்களை அழித்தார். இலத்தீன் அமெரிக்காவிலும், ஸ்பெயினுக்கு எதிராகக் கலவரங்கள் நடைபெற்று வந்தன. இங்கிலாந்தும் ஸ்பெயினுக்கு உதவவில்லை. கிழக்கு புளோரிடாவை அமெரிக்கா கைப்பற்றிவிடும் என்று அஞ்சிய ஸ்பெயின் புளோரிடாவை விற்றுவிட சம்மதித்தது. இதற்காக ஆடம்ஸ் ஓனிஸ் உடன்படிக்கை 1819ஆம் ஆண்டு ஏற்பட்டது.

ஐந்து மில்லியன் டாலர்களுக்கு புளோரிடாவை விற்றுவிட ஸ்பெயின் சம்மதித்தது. மேற்கு புளோரிடா மீது கொண்டிருந்த உரிமையையும் விட்டுக் கொடுத்தது. ஸ்பெயினிடமிருந்து நஷ்டஈடு கேட்டு வந்த அமெரிக்கர்களுக்கே அத்தொகை கொடுக்கப்பட வேண்டும் எனவும் உடன்படிக்கை ஏற்பட்டது. மேலும்

மெக்சிகோவிற்கும் அமெரிக்காவுக்கும் இடையே ஒரு எல்லைக்கோடு வரையரை செய்யப்பட்டது. ஸ்பெயின் நதியிலிருந்து அர்கான்சாஸ் வரை 42$^{0}$ பூமத்தியரேகைக்கு வடக்கே இந்த எல்லைக்கோடு அமைந்தது. பசிபிக் கடற்கரைப்பகுதியில் 42வது அட்சரேகைக்கு வடக்கில் உள்ள எல்லாப்பகுதிகள் மீதுள்ள உரிமைகளையும் ஸ்பெயின் விட்டுக்கொடுத்தது. புளோரிடா 1845இல் ஒரு மாநிலமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

கனடா சம்மந்தமாக இரு ஒப்பந்தங்கள் இங்கிலாந்துடன் செய்து கொள்ளப்பட்டன. 1817, ரஷ் பேகாட் ஒப்பந்தத்தின்படி பெரிய ஏரி பகுதிகளில் இங்கிலாந்தும் அமெரிக்காவும் எத்தனை கப்பல்கள் வைத்துக் கொள்ளலாம் என்று முடிவு செய்யப்பட்டது. 1818ஆம் ஆண்டு ஒப்பந்தத்தின்படி ஏரிகளிலிருந்து மேற்கே ராக்கிமலைத்தொடர் வரை 42வது அட்சரேகை கனடா அமெரிக்கா எல்லையாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

### *மிசௌரி ஒப்பந்தம் 1820*

அடிமைமுறை சம்மந்தமாக வட, தென்மாநிலங்களிடம் கருத்து வேறுபாடு நிலவிவந்தது. நாட்டில் உள்ள 22 மாநிலங்களில் 11 மாநிலங்களில் அடிமைமுறையும், 11 வட மாநிலங்களில் அடிமைமுறை தடை செய்யப்பட்டும் இருந்தன. இச்சமயம் லூயிசியானாப் பகுதியில் மிசௌரியில் மக்கள் தொகை 50,000த்தைத் தாண்டியதால், மாநில அந்தஸ்து கோரி விண்ணப்பித்தது. அடிமை முறையை ஏற்றுக்கொள்ளும் மாநிலமாக சேர்க்கப்பட்டால் காங்கிரஸ் சமநிலை பாதிக்கப்படும் என்று வடமாநிலங்கள் அஞ்சின. இச்சமயம் அடிமைமுறைக்கு எதிராக கொண்டுவரப்பட்ட ஜான்பில்மட்ஜ் என்பவரின் தீர்மானம் நிராகரிக்கப்பட்டது.

இப்போது மெயின் என்ற பகுதியும் மாநில அந்தஸ்து கோரி விண்ணப்பித்தது. ஹென்றி கிளேயின் திட்டபடி ஒரு சமரசம் ஏற்பட்டது. இதுவே 1820 மிசௌரி சமரசமாகும். இதன்படி மிசௌரி அடிமை மாநிலமாகவும், மெயின் அடிமை முறை இல்லா மாநிலமாகவும் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும். மேலும் 36°, 30° பாகை வட அட்சரேகைக்கு வடபகுதியில் உள்ள பிரதேசங்களில் அடிமைமுறை இருக்கக்கூடாது. மிசௌரி மட்டும் இதற்கு விதிவிலக்கு அளிக்கப்பட்டது. இப்பிரச்சினை தற்காலிகமாக தீர்த்து வைக்கப்பட்டு விட்டது.

## *வெளிநாட்டுக் கொள்கை*

மன்றோ கடைப்பிடித்த வெளியுறவுக் கொள்கையே மன்றோ கோட்பாடு என அழைக்கப்பட்டது. அந்நிய நாடுகளின் தலையீடு அமெரிக்காவிற்கு இருக்கக்கூடாது என்ற நோக்கத்தில் மன்றோ செயல்பட்டார். இதற்கு சில சூழ்நிலைகள் ஒத்துவந்தன. அமெரிக்காவின் வடமேற்கு பகுதியில் உள்ள அலாஸ்கா நிலப்பகுதியை ரஷ்யா தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்தது. தனது எல்லைக்கோட்டை 50 டிகிரியிலிருந்து 51 டிகிரிக்குமாற்றி அப்பகுதியை சொந்தம் கொண்டாடினார் ரஷ்ய மன்னர் முதலாம் அலெக்ஸாந்தார். இந்த நடவடிக்கைகள் அமெக்கா ஓரிகன் பகுதி நோக்கி விரிவடைவதை தடுக்கும் முயற்சிகள் என எண்ணினார் மன்றோ.

இப்போது தென்அமெரிக்காவில் ஸ்பெயினுக்கு எதிராக குடியேற்ற நாடுகளில் உரிமைப்போர்கள் நடைபெற்று வந்தன. இவற்றை ஒடுக்குவதற்கு ஐரோப்பிய கூட்டமைப்பு நாடுகள் ஸ்பெயினுக்கு உதவ முன்வந்தன. மீண்டும் முடியாட்சியை தென்அமெரிக்காவில் நிறுவ முயற்சிகள் எடுக்கப்படுவது கண்டு அமெரிக்கா அஞ்சியது. ஆனால் தென்அமெரிக்க

குடியேற்றங்கள் விடுதலை பெறுவதை அமெரிக்கா ஆதரித்தது. மேலும் ஐரோப்பிய நாடுகளின் ஆதிக்கம் ஏற்பட்டுவிட்டால் அமெரிக்கா தென்அமெரிக்க நாடுகளுடன் வணிகத்தொடர்பு கொள்ளமுடியாது எனக் கருதியது. எனவே ஐரோப்பிய நாடுகளின் தலையீட்டைத் தடுத்து நிறுத்த வழிதேடியது. இங்கிலாந்தும், தென்அமெரிக்க விடுதலை இயக்கங்களை ஒடுக்குவதை விரும்பவில்லை. அதேசமயம் பழைய ஸ்பானிய குடியேற்றங்களை அமெரிக்கா கைப்பற்றிக்கொள்ளுமோ என்றும் கருதியது.

இச்சமயம் இங்கிலாந்தின் வெளியுறவு அமைச்சர் ஜார்ஜ் கானிங் பிரபு, அமெரிக்கத் தூதுவர் ரிச்சர்ட் ரஷ் என்பவரிடம் இங்கிலாந்தும் அமெரிக்காவும் சேர்ந்து தென்அமெரிக்க குடியரசுகளை ஆதரிக்கும் என்ற கூட்டறிக்கையை வெளியிடலாம் எனக்கூறினார். அமெரிக்க வெளியுறவுச் செயலர் ஜான் குவின்ஸ் ஆடம்ஸ் இங்கிலாந்துடன் சேர்ந்து கூட்டறிக்கை வெளியிடுவதை விரும்பவில்லை. அமெரிக்கக் கண்ட விவகாரத்தில் இங்கிலாந்து தலையிடுவதை விரும்பவில்லை. அமெரிக்க ஐக்கிய நாடுகள் தனியாகவே நடவடிக்கையில் இறங்க வேண்டுமென விரும்பினார். ஆடம்ஸின் கருத்துப்படியே இயங்குவது என மன்றோவும் விரும்பினார். 'அமெரிக்கக் கண்டத்தின் அரசியல் விவகாரங்களில், எந்த ஒரு ஐரோப்பிய நாடும் தலையிடக்கூடாது' என்ற செய்தியை காங்கிரசுக்கு 1823, டிசம்பர் 2ஆம் தேதி அனுப்பிய அறிக்கையில் வெளியிட்டார். இதுவே 'மன்றோ கோட்பாடு' என அழைக்கப்பட்டது.

### *மன்றோ கோட்பாடு*

அமெரிக்கக் கண்டத்தை எந்தவொரு ஐரோப்பிய நாடும் குடியேற்றத்திற்கான இடமாகக் கருதக்கூடாது.

இலத்தீன் அமெரிக்க நாடுகளின் உள்விவகாரத்தில் ஐரோப்பிய நாடுகள் தலையிடுவதை அமெரிக்க நட்பின் அடையாளமாக எடுத்துக் கொள்ளாது.

ஐரோப்பிய அரசியல்முறையை அமெரிக்கக் கண்டங்களின் எப்பகுதியில் திணிக்க நினைத்தாலும் அதனை அமெரிக்க ஐக்கிய நாடுகள் தனது சமாதானத்திற்கும், பாதுகாப்பிற்கும் தீங்கிழைக்க மேற்கொள்ளப்படும் முயற்சியாகவே கருதும்.

ஐரோப்பிய நாடுகளிடையே ஏற்படும் போர்களிலும், அரசியல் விவகாரங்களிலும் அமெரிக்கா தலையிடாது.

ஐரோப்பா எப்படி ஐரோப்பியர்களுக்காக உள்ளதோ அவ்வாறே அமெரிக்கா அமெரிக்கர்களுக்கே உரியது என்று அறிக்கையில் கூறப்பட்டது.

மன்றோ கோட்பாடு அறிக்கையை தனியே அமெரிக்கா அறிவித்து விட்டதால் இங்கிலாந்து அமைச்சர் கானிங் வருத்தம் அடைந்தார். ஆஸ்திரியாவின் சான்சலர் மெட்டர்நிக் இந்தக் கோட்பாட்டை, கண்ணியமற்றது, அநாகரிகமானது என்று வர்ணித்தார். ரஷ்யா இக்கோட்பாட்டை ஒரு பொருட்டாகவே கருதவில்லை. இலத்தீன் அமெரிக்க மக்கள், அமெரிக்கா தானாகவே இலத்தீன் அமெரிக்க நாடுகளுக்கு பாதுகாவலனாகச் செயல்படுவதை விரும்பவில்லை.

ஆரம்பத்தில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நலன்களைப் பாதுகாக்கும் கொள்கையாகக் கருதப்பட்டது. ஆனால் அமெரிக்காவின் வலிமை பெருகப் பெருக மன்றோ கோட்பாட்டின் எல்லையும் விரிவாக்கப்பட்டது. மன்றோ கோட்பாட்டின் மறுபக்கம் என்ன என்பது இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில்தான் விளக்கம் கிடைத்தது.

# அலகு 1.10
# ஜான் குவின்சி ஆடம்ஸ்
# 1825-1829

எல்லாத்துறைகளிலும் வல்லவரான இவரால் நல்ல நிர்வாகத்தை வழங்க முடியவில்லை.

அமெரிக்காவின் இரண்டாவது ஜனாதிபதியான ஜான் ஆடம்ஸின் மகன் ஜான் குவின்சி ஆடம்ஸ் ஆறாவது ஜனாதிபதியாக 1824 தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவரது ஆட்சிக்காலத்தில் குடியரசுக்கட்சியில் கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டு நிர்வாகம் ஸ்தம்பித்தது. நான்கு பிரிவுகள் இருந்தன. ஜான் குவின்சி ஆடம்ஸ் (மசாசூசெட்ஸ்), ஆண்ட்ரூஜாக்சன் (டென்னஸி), ஹென்றி கிளே (கெண்டகி), வில்லியம் H.கிராபோர்ட் (ஜியார்ஜியா) என நால்வர் தேர்தலில் போட்டியிட்டனர். ஜான்சன் 99, ஆடம்ஸ் 84, கிராபோர்ட் 47, கிளே 37 தேர்வாளர் குழு வாக்குகளைப் பெற்றனர். யாருக்கும் பெரும்பான்மை கிடைக்கவில்லை. இறுதியில் கிளே தன்னை ஆதரிப்பவர்கள் ஆடம்ஸீக்கு வாக்களிக்கக் கூறியதால் ஆடம்ஸ் வெற்றிபெற்றார். கிளே வெளியுறவுச் செயலர் ஆனார். இப்படி குழப்பங்கள் நிலவியதால் இவரது ஆட்சி 'பயனற்ற நிர்வாக' காலமாக கழிந்தது.

ஜான் ஆடம்ஸ் தனது மகன் ஜான் குவின்சி ஆடம்ஸை ஐரோப்பாவில் கல்வி கற்க வைத்தார். எனவே அவர்

பிரெஞ்சு, டச்சு மொழிகளில் தேர்ச்சி பெற்றார். தனது தந்தைக்கு செயலராக 1782இல் இலண்டன் சென்றார். இருபதாவது வயதில் ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் சட்டம் பயின்று வழக்கறிஞர் ஆனார். வாஷிங்டன் ஆட்சியில் தூதுவராக நெதர்லாந்திற்கு அனுப்பப்பட்டார். தனது தந்தையின் ஆட்சிக்காலத்தில் பிரஸ்யாவிற்கு தூதுவராக அனுப்பப்பட்டார். இங்கிலாந்துடன் கென்ட் உடன்படிக்கை ஏற்படக் காரணமானவர். 1817-1825 வரை ஜேம்ஸ் மன்றோவின் வெளியுறவுச் செயலராக பணியாற்றினார். புளோரிடாவை இணைத்ததும், மன்றோ கோட்பாட்டை உருவாக்கியதும் இவரின் திறமையாகும்.

இவரது ஆட்சியில் நிர்வாகம் இரு பிரிவுகளாக இயங்கின. ஆடம்ஸின் ஆதரவாளர்கள் தேசிய குடியரசு கட்சியினர் (National Republicans) என்று அழைக்கப்பட்டனர். ஜாக்சனின் ஆதரவாளர்கள் ஜனநாயகவாதிகள் Democrats என அழைத்துக் கொண்டனர். ஜாக்சன் அதிக வாக்குகள் பெற்றும் வெற்றிபெற முடியாமைக்கு ஆடம்ஸின் சூழ்ச்சிதான் காரணம் என ஜாக்சனின் ஆதரவாளர்கள் கூறினர்.

1826இல் சைமன் பொலிவர் பனாமாவில் கூட்டிய அமெரிக்க குடியரசுகளின் மாநாட்டிற்கு பிரதிநிதிகளை அனுப்புமாறு ஆடம்ஸைக் கேட்டுக்கொண்டார். ஆடம்ஸ் இரண்டு பிரதிநிதிகளை அனுப்ப முடிவு செய்தபோது செனட் மன்றம் அதனை நிராகரித்தது. இருந்தபோதும் இறுதியில் பிரதிநிதிகளை அனுப்பினார். ஜாக்சனின் ஆதரவானர்கள் முட்டுக்கட்டை போட்டனர்.

1791ஆம் ஆண்டு உடன்படிக்கையின்படி ஜார்ஜியாவில் வாழ்ந்த கிரீக் இன செவ்விந்தியர்களின் நிலங்களுக்கு அரசு உத்திரவாதம் அளித்திருந்தது. ஆனால் பருத்தி தோட்ட முதலாளிகள் அவர்களது நிலங்களை அபகரிக்க திட்டமிட்டனர். 1825இல் ஜியார்ஜியா அரசு செவ்விந்தியர்களை மிரட்டி ஒப்பந்தம் செய்து நிலங்களை பிடுங்கிக்கொண்டது. இதனை ஆடம்ஸ் விரும்பவில்லை. கூட்டாட்சி அரசு தங்கள் மாநில விவகாரத்தில் தலையிடுவதை ஜியார்ஜியா விரும்பவில்லை. இது மாநிலங்களின் உரிமைகளைப் பறிக்கும் செயல் எனக் கூறப்பட்டது. ஆடம்ஸ் கண்டிக்கப்பட்டார்.

1825ஆம் ஆண்டு ஆடம்ஸ் கொண்டு வந்த காப்புவரிகளை ஜாக்சனின் ஆதரவாளர்கள் எதிர்த்தனர். இதனால் தொழிலதிபர்களும், வணிகர்களும் பயன்பெறுவர் எனக் கருதப்பட்டது. வெப்ஸ்டர் என்பவர் காப்புவரிகளை கடுமையாக விமர்சித்தார். ஜாக்சனின் ஆதரவாளர்கள் இதனையே மையமாக வைத்து தேர்தல் பிரச்சாரத்தை தொடங்கி விட்டனர்.

ஆடம்ஸின் நிர்வாகம் எதையுமே வெற்றிகரமாக செய்து முடிக்க முடியவில்லை. பதவிக்காலம் வீணாகக் கழிந்தது. ஆனால் பல உள்நாட்டு சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. கால்வாய்கள் வெட்டுதல், சாலைகள் அமைத்தல் போன்றவற்றிற்கு அதிகம் செலவு செய்யப்பட்டது. 363 மைல்கள் நீளமுள்ள ஈரி கால்வாய் இவரது ஆட்சியில் வெட்டப்பட்டது குறிப்பிடத்தக்கது.

# அலகு 2
# ஆண்ட்ரு ஜாக்சன்

1. இளமைக்காலம்
2. 1828ம் ஆண்டுத் தேர்தல்
3. உள்நாட்டுக் கொள்கை
   - (a) வெற்றி பெற்ற கட்சி ஆதாயப் பங்கு பெறும் முறை
   - (b) வீட்டு அமைச்சரவை
   - (c) கால்கூனுடன் மோதல்
   - (d) தென்கரோலினாவுடன் மோதல்
   - (e) வெப்ஸ்டர்-ஹெயின்ஸ் விவாதம்
   - (f) வங்கியுடன் மோதல்
   - (g) இந்தியர்களுடன் மோதல்
   - (h) மேஸ்வில் சாலை சட்டவரைவு
   - (i) பணவீக்கமும் பீதியும் 1837
4. வெளிநாட்டுக் கொள்கை (அ) மிரட்டல் கொள்கை
5. மதிப்பீடு

## அலகு 2.1

# ஆண்ட்ரு ஜாக்சன் (1829-37)
# (Andrew Jackson)

ரோம் நகரை நோக்கி முரட்டுக் கூட்டத்தினர் படையெடுத்ததுபோல், தலைநகர் வாஷிங்டனை நோக்கி தெற்கு மற்றும் மேற்குப்பகுதி சாமானிய மக்கள் தங்கள் தலைவர் பதவியேற்பு விழாவைக் காண பயணமாயினர்.

நெவின்ஸ்.

அமெரிக்காவின் ஏழாவது குடியாட்சித் தலைவர். எல்லைப்புறங்களில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட முதல் குடியரசுத் தலைவர். "சாதாரண மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அசாதாரமானவர்" (Uncommon man elected by the common people) என்றழைக்கப்பட்டார். இவரது ஆட்சியினை "ஜாக்சனிய மக்களாட்சி" என்று வரலாற்றறிஞர்கள் கூறுகின்றனர். இவருக்கு 'ஓல்டு ஹிக்கரி' (Old Hickory) என்ற பெயரும் உண்டு. இவரது காலம் கடின உறவு காலம் (Era of Hard feeling) எனப்படுகின்றது.

### *1. இளமைக்காலம்*

ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர்; தந்தை இறந்துபடவே தாயார் வீட்டு வேலைகள் செய்து இவரைக் காப்பாற்றினார். இளம் வயதிலேயே அமெரிக்க சுதந்திரப் போரில் பங்கேற்றவர். தொடக்கத்தில் கல்வியறிவில்லாதவர். மனைவியின் தூண்டுதலால் கல்வி கற்றார்; சேணம் தைப்பவரின் உதவியாளராகவும், ஆசிரியராகவும்

பணியாற்றினார். சட்டம் பயின்று தென்னசி மாநிலத்தின் வழக்கறிஞராகவும், மாநில தலைமை நீதிபதியாகவும் பணியாற்றினார்.

வழக்கறிஞராக பணியாற்றிய போது கட்சிக்காரர்கள் பொருளாக கொடுத்தவற்றை விற்கும் பொருட்டு வணிகத்தில் ஈடுபட்டார்; அவ்வளவில் செல்வந்தர்கள் ஏழை மக்களை ஏமாற்றி பிழைப்பதை உணர்ந்தார். வங்கி அவர்களுக்கு உறுதுணையாக உள்ளதாக கருதினார். பிற்காலத்தில் வங்கிக்கு எதிராக செயல்பட இதுவே காரணமாயிற்று. பிரதிநிதிகள் சபையிலும் (1796) செனட் மன்றத்திலும் உறுப்பினராகும் வாய்ப்பினைப் பெற்றார். 1812ம் ஆண்டு போரில் 'நியூ ஆர்லியன்ஸ்' என்ற இடத்தில் சிறப்பாகப் போரிட்டு பெருமையினையும், புகழினையும் பெற்றார். 1824ம் ஆண்டு குடியாட்சித் தலைவர் தேர்தலில் தோலவியுற்றார்; 1828ம் ஆண்டு மிகுதியான வாக்குகளைப் பெற்று குடியாட்சித் தலைவரானார்.

## 2. 1828ம் ஆண்டுத் தேர்தல்

இத்தேர்தல் வரலாற்று முக்கியத்துவம் பெற்றதாகும். இதனை 'இரண்டாவது அமெரிக்கப் புரட்சி' என்போரும் உளர். இத்தேர்தலில் ஜான் குவின்சி ஆடம்ஸிற்கு 83 வாக்குகளும், ஜாக்சனுக்கு 178 வாக்குகளும் கிடைத்தன. ஜாக்சனின் வெற்றிக்கு பல காரணங்கள் துணைபுரிந்தன.

### (a) ஐரோப்பாவில் ஏற்பட்ட குடியாட்சி இயக்கங்கள்

வீயன்னா மாநாடு மன்னராட்சியை மீண்டும் திணிப்பதற்கான முயற்சியில் இறங்கியது; இதனை எதிர்த்து கிரேக்க நாட்டிலும், பெல்ஜியத்திலும், பிரான்சிலும் புரட்சிகள் வெடித்தன. இவ்வியக்கங்களின் போது வெளியான

குடியாட்சி கருத்துகள் அமெரிக்கர்கள் மனதில் நன்கு பதிந்தன.

### (b) எல்லைப்புற வாக்காளர்களின் ஆதரவு

1828ல் அமெரிக்க குடியேற்றங்களின் எண்ணிக்கை 24 ஆகும்; இதில் புதிதாக சேர்க்கப்பட்ட 11 மாநிலங்களும் எல்லைப்புறத்தைச் சார்ந்தவை ஆகும். அவர்கள் அரசாங்க சட்டதிட்டத்தையோ வரிவிதிப்பையோ விரும்பாது தங்களைத் தாங்களே ஆண்டு கொண்டனர்; இதனால் மக்களாட்சி உணர்வு அதிகமாயிருந்தது. மேலும் இம்மாநிலங்களில், சொத்தின் அடிப்படையில் இல்லாது, வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது. அவர்கள் அனைவரும் ஜாக்சனையே ஒருமுகமாக தேர்ந்தெடுத்தனர்.

### (c) தொழிலாளர்களின் ஆதரவு

1812ம் ஆண்டுப் போருக்குப் பிறகு தொழில் வளர்ச்சி ஏற்பட்டது; ஏராளமான தொழிற்சாலைகள் உருவாயின. அயல்நாடுகளிலிருந்தும் தொழிலாளர்கள் அமெரிக்காவில் குடியேறினர். இதனால் தொழிலாளர்கள் எண்ணிக்கையும், நடுத்தர மக்களின் எண்ணிக்கையும் மிகுதியாயிற்று. இவர்கள் அரசியலில் பங்குபெற முயன்றனர். பல மாநிலங்களில் இவர்களுக்கு வாக்குரிமை வழங்கப்பட்டது. இவர்கள் அனைவரும் ஜாக்சனின் மக்களாட்சி கருத்துகளால் கவரப்பட்டு அவருக்கே வாக்களித்தனர்.

### (d) ஜாக்சனின் புகழ்

1812ம் ஆண்டுப் போரில் நியூஆர்லியன்ஸில் பெற்ற வெற்றி இவரது பெருமையையும் புகழையும் உயர்த்தியது. அலபாமாவில் தொல்லை கொடுத்து வந்த இந்தியர்களை

விரட்டியடித்து பெரும் சிறப்பு பெற்றார். இவரது செயல்பாடுகளை போற்றிப் புகழ்ந்த பொதுமக்கள் இவருக்கே வாக்களித்தனர்.

ஜாக்சன் தேர்ந்தெடுக்கப்பட்டதை மக்கள் பெரிதும் வரவேற்றனர். அவரது பதவியேற்பு விழாவைக் காண ஏராளமான மக்கள் திரண்டு வந்தனர். தங்கள் சேறு படிந்த கால்களால் விலையுயர்ந்த இரத்தின கம்பளங்களை பாழாக்கினர். ஜாக்சன் சாதாரண மக்களின் நலனுக்கு பாடுபட உறுதி பூண்டார். "செல்வந்தர்களுக்கு கிடைத்து வந்த சலுகைகளையும் உரிமைகளையும் தடை செய்யவும்; ஏழை மக்களின் மீது விதிக்கப்பட்டிருந்த தடைகளை உடைத்தெறிந்து அவர்களது வளர்ச்சிக்கு வழிவகை செய்வதையுமே தனது குறிக்கோளாகக் கொண்டார்". இவையே 'ஜாக்சனின் மக்களாட்சியின்' (Jacksonian Democracy) அடிப்படைக் கருத்துகளாகும்.

### *3. உள்நாட்டுக் கொள்கை*

### *(a) வெற்றி பெற்ற கட்சி ஆதாயப் பங்கு பெறும் முறை* (Spoils system)

ஜாக்சன், 'வெற்றி பெற்ற கட்சி ஆதாயப் பங்கு பெறும் முறையைத்' துவக்கினார். உண்மையில் இதற்கான விதை தாமஸ் ஜெபர்சன் காலத்திலேயே ஊன்றப்பட்டுவிட்டது எனலாம். தனது வெற்றிக்குப் பாடுபட்ட தனது ஆதரவாளர்களுக்கு பதவி தரும்பொருட்டு பலரை பதவி நீக்கம் செய்தார். உயர் பதவிகளுக்கு மட்டுமல்லாது கீழ்நிலைப் பதவிகளிலும் இம்முறை செயல்படுத்தப்பட்டது. இவ்வாறு சுமார் 20% பதவிகளை தனது ஆதரவாளர்களுக்கு கொடுத்தார். இம்முறையினைத் தொடர்ந்து வந்த பல குடியரசுத் தலைவர்கள் பின்பற்றினர். இறுதியாக, கார்பீல்டு

(Garfield) என்ற குடியாட்சித் தலைவரை பதவி கிடைக்காத வெறியில் ஒருவன் சுட்டுக் கொன்றதையடுத்து இம்முறை கைவிடப்பட்டது.

**(b) *வீட்டு அமைச்சரவை* (Kitchen Cabinet)**

ஜாக்சன் முறையாக அமைக்கப்பட்ட அமைச்சரவையினைக் கலந்து ஆலோசிக்காமல் தனது நண்பர்கள், பத்திரிக்கையாளர்கள் போன்றவர்களுடன் கலந்து பேசி முக்கியமான முடிவுகளை மேற்கொண்டார்; இதனையே "வீட்டு அமைச்சரவை" எனக் கேலியாக அழைத்தனர். இதில் வேன்பியூரன் (Van Buren) என்பவர் ஆற்றிய பங்கு குறிப்பிடத்தக்கதாகும். 1831க்குப் பிறகு ஜாக்சன் முறையான அமைச்சரவையை கலந்து ஆலோசிக்கும் வழக்கத்தை மேற்கொண்டார்.

**(c) *கால்கூனுடன் மோதல்***

துணைத்தலைவரான ஜான்.சி.கால்ஹூனுக்கும் (John.C.Calhoun) ஜாக்சனுக்குமிடையே மோதல்கள் ஏற்பட்டன. வான்பியூரனின் வளர்ச்சி கால்கூனுக்கு எரிச்சலையூட்டியது. ஜாக்சனின் அமைச்சரவையைச் சார்ந்த ஈட்டன் (Eaten) சம்பிரதாய முறைப்படி திருமணம் செய்யாததால் ஒதுக்கி வைக்கப்பட்டார். ஜாக்சன் இதில் தலையிட்டு அவரை முன்புபோல் நடத்தச் செய்தார்; இச்செயல் கால்கூனுக்கு பிடிக்கவில்லை. மேலும் வான்பியூரன் இங்கிலாந்தின் தூதராக நியமிக்கப்பட்டதை கால்கூன் எதிர்த்தார். இச்சமயத்தில், நியூஆர்லியன்ஸ் போரின்போது இரண்டு ஆங்கிலேயர்களைக் கொன்ற குற்றத்திற்காக ஜாக்சன் தண்டிக்கப்பட்ட வேண்டும் என கால்கூன் செனட்டில் பேசிய இரகசிய செய்தி வெளிப்பட்டது. இந்நிகழ்ச்சி இருவரது உறவுகளையும் நலியச்செய்தது.

கால்கூன் துணைத்தலைவர் பதவியை விட்டு விலகினார். தென்கரோலினா மாநில செனட்டர் தேர்தலில் போட்டியிட்டு செனட்டரானார்.

## (d) தென்கரோலினாவுடன் மோதல்

1828ல் பாதுகாப்பு வரி விதிக்கப்பட்டது. இதனால் இறக்குமதியாகும் பொருட்களின் மீது கூடுதலான வரி விதிக்கப்பட்டது. இதனை தென்கரோலினா மாநிலம் எதிர்த்தது. இம்மாநிலத்தில் பெரும் தொழில்கள் ஏதும் கிடையாது, அப்பகுதிக்கு வேண்டிய பொருட்கள் அனைத்தும் இறக்குமதி செய்யப்பட்டது என்பதே இதற்குக் காரணமாகும். தென்கரோலினா மாநிலம் "செல்லுபடியற்றதாக்கும் கோட்பாட்டை" (Doctrine of Nullification) வலியுறுத்தியது. இதன்படி கூட்டாட்சி அரசால் செய்யப்படுகின்ற சட்டங்கள் மாநில அரசிற்கு எதிராக இருக்குமேயானால், அந்தச் சட்டம் செல்லாது எனச் சொல்லும் அதிகாரம் மாநில அரசிற்கு உண்டு எனக் கூறியது. இச்சமயத்தில் கால்ஹீன், 'தென்கரோலினா விளக்கங்கள்' (South Carolina expositions) என்ற அறிக்கையில் மாநிலங்களின் உரிமைகளை (state rights) வலியுறுத்தினார். மாநிலங்களின் ஒப்புதல் பெற்று அமைக்கப்பட்டதே கூட்டாட்சி எனவும்; மாநிலங்களின் உரிமைகளுக்கு புறம்பாக கூட்டாட்சி சட்டமியற்றினால் அதைச் செல்லாது எனக் கூறும் அதிகாரம் மாநிலத்திற்கு உண்டு எனவும்; அவசியம் ஏற்பட்டால் கூட்டாட்சியலிருந்து பிரிந்து செல்லவும் முடியும் என்றும் கூறினார்.

## (e) வெப்ஸ்டர்-ஹெயின்ஸ் விவாதம் 1830

வெப்ஸ்டர் (Webster) என்பவருக்கும் தென்கரோலினாவைச் சார்ந்த இராபர்ட்.ஒய்.ஹெய்ன் (Hayne)

என்பவருக்குமிடையே பிரிந்து செல்வது குறித்து விவாதம் எழுந்தது. "மாநிலங்கள் ஒன்றுபட்டு உருவாக்கிய கூட்டாட்சியிலிருந்து மாநிலங்கள் பிரிந்து செல்ல முடியும்" என ஹெய்ன் கூறினார். ஆனால் வெப்ஸ்டரின் கருத்துப்படி "மாநிலங்களிலுள்ள மக்களின் விருப்பப்படிதான் கூட்டாட்சி அமைக்கப்பட்டுள்ளது. எனவே மாநிலங்களுக்கு பிரிந்து செல்லும் அதிகாரம் இல்லை" என்றும் கூறினார். இதனால் தென்கரோலினாவின் எதிர்ப்பு அதிகமாயிற்று.

இந்நிலையில் 1832ல் ஹென்றிகிளே (Henry clay) புதியதோர் பாதுகாப்பு வரிச்சட்டத்தை கொண்டு வந்தார். இதன் மூலம் பாதுகாப்பு வரிச்சட்டத்தில் உள்ள சில குறைபாடுகளைக் களையவும்; அதிகப்படியான வரி விதிக்கவும் முயன்றார். இச்சட்டம் வேண்டுமென்றே தனக்கெதிராக இயற்றப்பட்டதாகக் கருதி தென்கரோலினா மாநிலம் எதிர்நடவடிக்கையில் ஈடுபட்டது. மாநிலத்தின் சிறப்பு மன்றத்தினைக் கூட்டி செல்லுபடியற்றதாக்கும் கோட்பாட்டை நிறைவேற்றியது. அதன்படி புதிய பாதுகாப்பு வரிச்சட்டம் தங்கள் மாநிலத்திற்குப் பொருந்தாது எனக் கூறியது; வரி செலுத்தவும் மறுத்தது. தனக்கு எதிரான நடவடிக்கைகளில் ஈடுபட்டால் கூட்டாட்சியிலிருந்து பிரிந்து செல்லவும் தயங்காது எனக் கூறியது. ஜாக்சன் இதனை தனக்கு விடுக்கப்பட்ட சவாலாகக் கருதி அடக்குமுறையை பயன்படுத்த எண்ணினார். இராணுவ உதவியைக் கோரும் அடக்குமுறை சட்டமும் (Force Act) நிறைவேற்றப்பட்டது.

நல்வினையாக 1833ல் ஹென்றிகிளே, புதியதோர் சட்டவரைவினைக் கொண்டுவந்தார். அதன்படி படிப்படியாக பாதுகாப்பு வரியினைக் குறைப்பதற்கு வழிவகை செய்யப்பட்டது. இதனாலும், வேறு தென்மாநிலங்கள் ஆதரவாகச் செயல்படாததாலும் தென்கரோலினா

செல்லுபடியற்றதாக்கும் கோட்பாட்டை விலக்கிக் கொண்டது. இந்நிகழ்ச்சி பிற்காலத்தில் உள்நாட்டுப் போரின்போது தென்மாநிலங்கள் பிரிந்து செல்வதற்கு முன்மாதிரியாக அமைந்தன.

### (f) *வங்கியுடனான மோதல்*

அமெரிக்காவின் இரண்டாவது தேசிய வங்கி 1816ல் தோற்றுவிக்கப்பட்டது. இருபது ஆண்டுகளுக்கு வழங்கப்பட்ட அதன் சாசனம் 1836ல் முடிவடைவதாய் இருந்தது. தனிப்பட்ட காரணங்களின் அடிப்படையில் வங்கியினை அழிப்பதற்கான முயற்சியில் ஜாக்சன் ஈடுபட்டார். ஜான்சன் வணிகராயிந்தபோது பெரும் செல்வந்தர்களால் ஏமாற்றப்பட்டார். அவர்களுக்கு வங்கி துணையிருப்பதாய் நம்பினார். வங்கியின் தலைவரான நிக்கோலஸ் பிடில் (Nicholas Biddle) தேர்தலில் ஜாக்சனுக்கு எதிராக செயல்பட்டார். மேலும் தனியார் கட்டுப்பாட்டில் இருந்த வங்கியின் லாபம் முழுவதும் ஒரு சிலருக்கே கிடைப்பதை எதிர்த்தார். 1832ல் வங்கியின் சாசனத்தை புதுப்பிக்க 'ஹென்றிகிளேவால்' கொண்டுவரப்பட்ட சட்டவரைவினை தடுப்பாணையின் மூலம் தடுத்து நிறுத்தினார்.

1832ல் நடைபெற்ற குடியரசுத் தலைவர் தேர்தலில் வங்கியை புதுப்பிக்க மறுத்து அதனடிப்படையில் தேர்தலில் நின்று வெற்றி பெற்றார். இதனைத் தொடர்ந்து 'தேசிய வங்கியில்' முதலீடு செய்யப்பட்டிருந்த அரசாங்கப் பணத்தை திரும்பப் பெற்று மாநில வங்கிகளில் முதலீடு செய்தார்.

தேசிய வங்கியிலிருந்த குறைகளைக் களைவதை விடுத்து அதனை அழித்தது தவறு என அறிஞர்கள் கருதுகின்றனர். நிக்கோலஸ் பிடிலின் தலைமையில் வங்கி

சிறப்பாக பணிபுரிந்தது என்று கூறலாம். தேசிய வங்கி அழிக்கப்பட்டதையடுத்து மாநில வங்கிகள் மிகுதியாகத் தோன்றின. அவை மிகுதியான கடன்களை வழங்கியதுடன், ஏராளமான காகிதப் பணத்தையும் வெளியிட்டன. இதனால் 1837ல் பணவீக்கமும், பொருளாதார பீதியும் ஏற்பட்டன.

### (f) இந்தியர்களுடனான மோதல்

பழங்குடியினரை அச்சுறுத்தியும், ஆசை வார்த்தை காட்டியும் மிசிசிபி ஆற்றுக்கு அப்பால் விரட்டினார். இதன்பொருட்டு சுமார் 94 உடன்படிக்கைகளையும் மேற்கொண்டார்.

ஜார்ஜியா மாநிலத்தில் 'செரோக்கிகள்' என்ற நாகரீகப் பழங்குடியினர் வாழ்ந்து வந்தனர். அவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பு ஒரு உடன்படிக்கையின்படி, கூட்டாட்சி அரசாங்கத்திடம் கொடுக்கப்பட்டது. பழங்குடியினர் வாழ்ந்த இடத்தில் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டதை அடுத்து ஜார்ஜியா அவ்விடத்தை பெற்றிட முயன்றது; பழங்குடியினரை பாதுகாக்க கூட்டாட்சி இராணுவம் அனுப்பி வைக்கப்பட்டது. செரோக்கிகளுக்கும் ஜார்ஜியாவிற்குமிடையேயான வழக்கு தலைமை நீதிமன்றத்தின்முன் வைக்கப்பட்டது. வழக்கினை விசாரித்த தலைமை நீதிபதி ஜான்மார்ஷல் தீர்ப்பு கூறினார். "ஜார்ஜியா, பழங்குடியினர் விவகாரத்தில் தலையிடக்கூடாது" என்றார். இதனையடுத்து ஆண்ட்ருஜாக்சன் கூட்டாட்சிப் படைகளை விலக்கிக் கொண்டதுடன், மார்ஷலின் தீர்ப்பையும் கேலி செய்தார். "மார்ஷல் தீர்ப்பு கூறிவிட்டார், அதனை அவரே நிறைவேற்றட்டும்" என்றார். பின்னர் பழங்குடியினரை நயத்தாலும், பயத்தாலும் அகற்றினார்.

### (g) மேஸ்வில் சாலை சட்டவரைவு (Maysville Road Bill)

1830ல் கென்டகியில், லெக்சிங்டனிலிருந்து மேஸ்வில் வரை ஒரு சாலை அமைக்க நிதி ஒதுக்கி கூட்டாட்சி அரசு

ஒரு சட்டவரைவை நிறைவேற்றியது. அதனையே 'மேஸ்வில் சாலை சட்டவரைவு' என்றழைத்தனர். இதனை ஆண்ட்ரு ஜாக்சன் எதிர்த்தார்; கூட்டாட்சி நிதியினை மாநிலங்களின் வளர்ச்சிக்கு பயன்படுத்தக்கூடாது என்றும் கூறினார். இதனால் மேற்கு மாநிலங்களில் இவரது செல்வாக்கு குறைந்தாலும் கிழக்கு மற்றும் தெற்கு மாநிலங்கள் இதனை வரவேற்றன.

### (i) *பணவீக்கமும் பீதியும் 1837*

தேசிய வங்கியில் முதலீடு செய்யப்பட்டிருந்த அரசாங்கப் பணத்தை மாநில வங்கிகளில் முதலீடு செய்தார். இதனால் தேசிய வங்கிகள் மூடப்பட்டன; அவை பொதுமக்களிடம் கொடுத்திருந்த கடன் தொகையை வசூலித்தனர். மக்கள் மாநில வங்கிகளில் கடன்பெறலாயினர். இதனால் பணப்புழக்கத்தில் சுணக்கம் ஏற்பட்டது. மாநில வங்கிகளின் எண்ணிக்கை பெருகியது; அவை தங்கள் விருப்பிற்கேற்ப காகித நாணயங்களை அச்சிட்டு வெளியிட்டனர். காகித நாணயத்தின் மதிப்பு குறைந்தது. வெளிநாட்டவர்கள் வாங்க மறுத்தனர். பொருளாதாரமந்தம் ஏற்பட்டது; விலைகள் வீழ்ந்தன. தொழிற்சாலைகள் மூடப்பட்டன, வேலையில்லாத் திண்டாட்டமும் எழுந்தது. இந்நிலையில் இவரது இரண்டாவது பதவிக்காலம் முடிவுற்றது.

### *வெளிநாட்டுக் கொள்கை (அ) மிரட்டல் கொள்கை* (Shirt sleeve policy)

நெப்போலியனின் கண்டத் திட்டத்தால் அமெரிக்கக் கப்பல்கள் அழிக்கப்பட்டன. இதற்கு ஈடாக 25 மில்லியன் பிராங்குகளை வழங்க பிரான்ஸ் ஒப்புக் கொண்டது.

இத்தொகையை வழங்குவதில் பிரான்சு காலதாமதம் செய்து வந்தது. எனவே பிரான்சுக்கு எதிராக போர் நடவடிக்கைகளை மேற்கொண்டார். அமெரிக்காவில் வாழும் பிரெஞ்சுக்காரர்களின் சொத்துக்களையும், பிரெஞ்சு நாட்டுப் பொருட்களையும் பறிமுதல் செய்யுமாறு காங்கிரஸிற்கு அறிவுரை கூறினார். இதனையடுத்து பிரான்சு அத்தொகையினை வழங்க முன்வந்தது; ஆனால் ஜாக்சன் மன்னிப்புக் கோரவேண்டும் என்ற நிபந்தனையையும் விதித்தார். இறுதியில் இங்கிலாந்தின் தலையீட்டால் இப்பிரச்சனை தீர்ந்தது.

### *மதிப்பீடு*

மக்களால் பெரிதும் மதிக்கப்பெற்ற தலைவர்களில் ஆன்ட்ரு ஜாக்சனும் ஒருவராவார். இவர் தனது செயல்பாடுகளால் குடியாட்சித் தலைவர் பதவியினை வலிமையானதோர் அங்கமாக உருவாக்கினார்; தடுப்பாணை உரிமையினை பன்னிரு முறைகள் பயன்படுத்தினார்; தேசிய வங்கியினை அழித்ததை பொருளாதார வல்லுநர்கள் குறை கூறுகின்றனர்.

# அலகு 2.2
# மேற்கு நோக்கி விரிவடைதல்
# (1750-1850)

1. காரணங்கள்
2. டெக்சாஸ் கைப்பற்றப்படுதல்
3. ஓரீகன் கைப்பற்றப்படுதல்
4. மெக்ஸிகோ போர் (1846-48)
5. விளைவுகள்

# அலகு 2.2
# மேற்கு நோக்கி விரிவடைதல் (1750-1850)

"Go West, young man, and group up with the country"

Horace Greeley

மேற்கே செல் இளைஞனே. அந்தப் பகுதியோடு நீயும் வளர்வாய்.

ஹோராஸ் கிரீலே

கிழக்கில் அட்லாண்டிக் கடற்கரையோரம் அமைக்கப்பட்ட குடியேற்றங்கள் படிப்படியாக வளர்ந்து மேற்கில் பசிபிக் கடற்கரையை அடைந்த நிகழ்வையே மேற்கு நோக்கி விரிவடைதல் என்று கூறுகின்றனர். இதனால் அரசியல், பொருளாதார, சமூக, சமய வாழ்வில் பெருத்த மாற்றங்கள் எழுந்தன. மேற்குப்பகுதி இறுதி எல்லையாக அமைந்தாலும் இடையில் அமைந்த மூன்று எல்லைகள் குறிப்பிடத்தக்கவையாகும். முதல் எல்லையாக அட்லாண்டிக் கடற்கரை அமைந்தது. பதிமூன்று குடியேற்றங்களும் இங்குதான் அமைந்தன; இரண்டாவது எல்லையாக அப்பலோச்சியன் மலையிலிருந்து கீழ்நோக்கிச் செல்லும் ஆற்றுப்பகுதிகள் அமைந்தன; மூன்றாவது எல்லையாக மிச்சிபி பள்ளத்தாக்கும் ஒகையோ நதி பள்ளத்தாக்கும் அமைந்தன. தொடக்கத்தில் வேடர்களும், துணிச்சல் மிக்க வீரதீரச் செயல்களைச் செய்வதில் ஆர்வம் உள்ளவர்களும் முதல் குடிமக்களாக அமைந்தனர்; அவர்களை

பின்தொடர்ந்து விவசாயிகளும், வணிகர்களும் குடியேறினர்; அவர்களுக்குப்பின் வழக்கறிஞர்கள், மருத்துவர்கள் என பலரும் குடியேறலாயினர். மேற்கு நோக்கி வரிவடைதலுக்கான காரணங்களாவன:-

### *1. காரணங்கள்*

அமெரிக்க இளைஞர்களிடையே காணப்பட்ட வீரதீரச் செயல்களைச் செய்வதற்கான ஆர்வமே மேற்கில் புதிய இடங்களைக் கண்டறியவும், குடியேறவும் காரணமாயின.

1812ம் ஆண்டுப் போரின்போது இப்பகுதிகளின் செழுமையினை நேரில் கண்டறிந்த இராணுவ வீரர்கள், போர் முடிவுற்றபின் இப்பகுதிகளில் விரும்பி குடியேறலாயினர்.

சமுதாய மற்றும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளால் பாதிக்கப்பட்ட கிழக்குப் பகுதிகளில் வாழ்ந்து வந்த மக்கள் அதிலிருந்து விடுபடவும், புதிய வாழ்வை அமைத்துக் கொள்ளவும் மேற்கில் குடியேறினர்.

நெப்போலியனது இடைவிடாத போர்களால் பாதிக்கப்பட்ட ஐரோப்பிய மக்கள் நிலையான அமைதியைத் தேடி மேற்கு நிலங்களில் தஞ்சம் புகலாயினர்.

செவ்விந்தியர்கள் மிசிசிபி நதிக்கு அப்பால் விரட்டப்பட்டதால் அச்சமின்றி பெருவாரியான மக்கள் மேற்கு நிலங்களில் குடியேறினர்.

கிழக்கையும் மேற்கையும் இணைக்கும் வகையில் சாலைகளும், கால்வாய்களும், இரயில்பாதைகளும் உருவாயின; இவ்வாறு போக்குவரத்து வசதி எளிமைப்படுத்தப்பட்டது, மேற்கில் குடியேற்றங்கள் அமைய வசதியாயிற்று.

கூட்டாட்சி அரசின் நடவடிக்கைகள் குடியேற்றங்கள் அமைந்திர உறுதுணையாக அமைந்தன. குறைந்த விலைக்கு நீண்டகால தவணையில் நிலங்கள் குத்தகைக்கு விடப்பட்டது. உதாரணமாக 1787 வடமேற்கு எல்லைப்புற ஆணையின்படி ஏக்கர் இரண்டு டாலர் வீதம் தலைக்கு 320 ஏக்கர் ஒதுக்கப்பட்டது. பின்னர் ஏக்கர் 1.25 டாலர் வீதம் தலைக்கு 160 ஏக்கர் வீதம் ஒதுக்கப்பட்டதைக் கூறலாம்.

கலிபோர்னியாவில் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டதை அடுத்து ஏராளமான மக்கள் குடியேறலாயினர். ஒரே வருடத்தில் 90,000 மக்கள் குடியேறியதைக் கூறலாம்.

விநோதமான பழக்க வழக்கங்களைப் பின்பற்றிய "மார்மன்கள்" (Mormans) என்ற சமயத்தவர்கள் மக்களால் இகழப்பட்டனர்; இவர்கள் தனித்து வாழவிரும்பி மேற்கில் குடியேறலாயினர். உதாரணமாக ஒருவன் எத்துணைப் பெண்களை வேண்டுமாயினும் மணந்து கொள்ளலாம் என்பது அவர்களது வழக்கமாகும்.

இராபர்ட். ஓ. சல்லிவன் என்பவர் "அமைதி காட்டும் மெய்மை வழிக் கோட்பாடு" (Manifest destiny) என்ற கருத்தினை வெளியிட்டார். இதன்படி எங்கெல்லாம் நிலப்பகுதி உள்ளதோ அங்கெல்லாம் மக்கள் குடியேற வேண்டும் என்பது இறைவனின் விருப்பம் என்று கூறினார். இதனடிப்படையிலும் மக்கள் மேற்கில் குடியேறலாயினர்.

## *எல்லைப்புற வாழ்க்கை முறை*

மேற்கு நோக்கி விரிவடைதல் மூன்று படிகளில் அமைந்தது; முதல்படியாக டெக்சாஸீம்; இரண்டாவதுபடியில் ஓரிகனும்; மூன்றாவது கலிபோர்னியாவும் நியூமெக்ஸிகோவும் கைப்பற்றப்பட்டன.

மேற்கு நோக்கி நகர்தலில் 'எல்லைப்புற வாழ்க்கை முறை' என்ற ஒரு வாழும்முறை உருவாயிற்று. மேற்கு நோக்கி முதலில் சென்றவர்கள் 'முன்னோடிகள்' (Pioneers) என அழைக்கப்பட்டனர். இவர்களது வாழ்க்கை முறையை ஆங்கிலப் பயணி போர்தம் (Fordham) விரிவாக விவரிக்கின்றார். இம்மக்கள் மரத்தால் ஆன வீடுகளில் (Log Cabin) மிகவும் சிரமத்துடன் வாழ்ந்தனர். சிவப்பிந்தியர்களின் தாக்குதல்களிலிருந்து காத்துக்கொள்ளக்கூடிய வகையில் வீடுகள் கட்டியிருந்தனர். கரடுமுரடான தோற்றமுடையவர்கள். ஆனால் நல்லமுறையில் உபசரிப்பார்கள். வழிப்போக்கர்களிடம் அன்புடன் நடந்து கொள்வார்கள். நேர்மையானவர்கள். இவர்களை நம்பலாம். இவர்கள் சிறிதளவு சோளம் பயிரிட்டனர். பூசணிக்காய் மற்றும் பன்றிகள் வளர்த்தனர். சிலசமயம் ஒன்று அல்லது இரண்டு பசுக்கள், குதிரைகள் ஒவ்வொரு குடும்பத்தினரும் வளர்த்தனர். ஆனால் எப்போதும் துப்பாக்கிகளை பாதுகாப்பிற்காக வைத்திருந்தனர். பக்கத்தில் துப்பாக்கி வெடிச்சத்தம் கேட்டால் உடனே நகர்வதற்கு தயாராகி விடுவார்கள்.

இரண்டாவதாக வரக்கூடியவர்கள் வேட்டைக்காரர்களும் விவசாயிகளும் அடங்குவர். மரவீட்டுக்குப் பதிலாக இவர்கள் சற்று பெரிய வீடுகளை மரங்களைக் கொண்டே கட்டிக்கொண்டனர். கண்ணாடி ஜன்னல்கள், சமையலறை புகைபோக்கிகள், தனிஅறைகளுடன் கூடிய வீடுகள் அமைத்தனர். இவைகள் இங்கிலாந்து நாட்டு பண்ணைவீடுகள் போல் இருந்தன. கிணறுகள் வெட்டி அதிலிருந்து தண்ணீர் எடுத்தனர். மரங்களை வெட்டி நிலத்தைச் சரிசெய்தனர். சொந்தமாக தானியங்கள், காய்கறிகள், பழங்கள் பயிரிட்டனர். வான்கோழிகள் காடுகளிலிருந்து பிடிக்கப்பட்டன. தேன்

சேகரித்தல், மீன் பிடித்தல், மாடுகள், பன்றிகள் வளர்த்தல் போன்ற பணிகளில் ஈடுபட்டனர். இவர்கள் தயார் செய்த நிலங்களை யாராவது கேட்டால் விற்பனை செய்துவிட்டு இன்னும் மேற்கே நகர்ந்து விடுவார்கள்.

மூன்றாவதாக வருபவர்கள் முழுமையாக விவசாயம் செய்ய விரும்புகிறவர்கள். இவர்களுடன் மருத்துவர்கள், வழக்கறிஞர்கள், கடைக்காரர்கள், பத்திரிக்கையாளர்கள், மதபோதகர்கள், வணிகர்கள், அரசியல்வாதிகள், நிலபேர வணிகர்கள் என பலதரப்பட்டவர்கள் வந்தனர். அனைவரிலும் விவசாயிகளே நிரந்தரமாகத் தங்கினர். மிகப்பெரிய வீடுகள் கட்டினர். வேலி அமைத்தனர். நிறைய கால்நடைகள் வளர்த்தனர். திறமையுடன் வேளாண்மை புரிந்தனர். மாவு ஆலைகள், சாராய வடிப்பாலைகள் அமைத்தனர். நல்ல சாலைகள் அமைத்தனர். ஆலயங்கள் எழுப்பினர். நகர்ப்புறம் உருவாயிற்று. வியாபாரிகளும், வங்கியாளர்களும், நிலபேர வியாபாரிகளும் வந்தனர். இவர்கள்தான் அமெரிக்க கலாச்சாரத்தை பிரதிபலித்தவர்கள். 1830இல் இப்படி உருவாக்கப்பட்ட ஒரு சிறு வர்த்தக கிராமம்தான் சிகாகோ, இன்று உலகின் தலைசிறந்த நகரங்களில் ஒன்றாகத் திகழ்கின்றது.

தெற்கு மற்றும் மேற்குப்பகுதிகளில் இவ்வாறு பலதரப்பட்ட மக்கள் வந்து குடியேறினர். ஆப்ரஹாம் லிங்கன் ஒரு சிறு மரவீட்டில் (Log Cabin) கெண்டகி மாநிலத்தில் பிறந்தவர். ஜெபர்சன் டேவிஸீம் இங்குதான் பிறந்தார். இங்கு வாழ்ந்த மக்களிடம் அரசியலிலும், சமுதாயத்திலும் சமநிலை மனப்பான்மை (Equality) உருவாயிற்று. தனித்தன்மை மிக்க சுதந்திரத்தை விரும்புகிறவர்களாகவும்,, மக்களாட்சி பண்புமிக்கவர்களாகவும் விளங்கினர். பழைய உலக பழக்கவழக்கங்களும், பண்பாடுகளும் மறைந்தன.

பொருளாதார வாழ்க்கை ஏற்றத்தாழ்வற்றதாக இருந்தன. எனவேதான் ஹோராஸ் கிரீலே இளைஞர்களே மேற்கே சென்று வாழ்வை வளமாக்குங்கள் என அறைகூவல் விடுத்தார். எல்லைப்புற வாசிகள் கட்டுப்பாடு அற்றவர்களாகவும், பொறுமை அற்றவர்களாகவும், அமைதியின்றியும் காணப்பட்டனர். அவசரமாகவும், அனுபவமற்ற முறையிலும் இயங்கினர். இவர்களிடம் இருந்த ஒரு தீயபண்பு எதற்கெடுத்தாலும் துப்பாக்கிகளை தூக்குவதுதான்.

## 2. டெக்சாஸ் கைப்பற்றப்படுதல்

டெக்சாஸ், மெக்சிகோவின் ஒருபகுதியாக இருந்தது. 1813ல் மோசஸ் ஆஸ்டின் (Moses Austin) என்பவர் ஒரு சாசனம் பெற்று 300 குடும்பங்களுடன் டெக்சாஸில் குடியேறினார். அவரது மகன் ஸ்டிபன்.எப்.ஆஸ்டின் (Stephen.F.Austin) தந்தையின் முயற்சியைத் தொடர்ந்து குடியேற்றத்தை வளரச் செய்தார்; சுமார் 20,000 அமெரிக்கக் குடும்பங்கள் வாழ்ந்து வந்தன. இவர்கள் அனைவரும் அமெரிக்காவுக்கு விசுவாசமாக இருந்தனர்; இதனை மெக்ஸிகோ விரும்பவில்லை.

மெக்ஸிகோ பல கட்டுப்பாடுகளை விதித்தது. அமெரிக்காவிற்கு ஏற்றுமதியாகும் அல்லது இறக்குமதியாகும் பொருட்களின் மீது வரிவிதித்தது; அடிமை முறைக்கு தடைவிதித்து அமெரிக்க பண்ணை முதலாளிகளைத் தொல்லைகளுக்குள்ளாக்கியது; சீரமைப்பு என்ற பெயரால் டெக்சாஸை, கோஹீலியா (Coahulia) மாநிலத்தின் ஒரு பகுதியாக அறிவித்தது. இதனை விரும்பாத அமெரிக்கர்கள், வணிகச்சுதந்திரம் கோரி மெக்ஸிகோவின் அதிபரான சாண்டா அன்னா (Santa Anna)விடம் முறையீடு செய்தனர். அவர் இதனை ஏற்க மறுத்தார்.

டெக்சாஸ் மக்கள் கிளர்ந்தெழுந்தனர்; தங்கள் தலைவர் சாம் ஹூஸ்டன் (Sam Houston) தலைமையில் மெக்ஸிகோ படைகளை சான்ஜெசிண்டோ (San Jacinto) என்ற இடத்தில் முறியடித்தனர். தங்களை சுதந்திரமானவர்களாக அறிவித்துக் கொண்டதுடன், அமெரிக்க மாநிலமாக சேரவும் விருப்பம் தெரிவித்தனர். ஏழாவது குடியாட்சித் தலைவரான ஆன்ட்ரு ஜாக்சன், இதனால் சிக்கல்கள் எழும் என அஞ்சி வாளாயிருந்தார். டெக்சாஸ் தன்னை ஒரு குடியரசாக அறிவித்துக் கொண்டதுடன் இங்கிலாந்துடன் நெருக்கமான உறவினையும் வளர்த்துக் கொண்டது. 1844ம் ஆண்டு குடியாட்சித் தலைவர் தேர்தலில், டெக்சாஸை அமெரிக்க கூட்டாட்சியுடன் இணைப்பதை மையமாக வைத்து பிரச்சாரம் மேற்கொள்ளப்பட்டது. ஜேம்ஸ்.கே.போக் (James.K.Polk) தான் வெற்றிபெற்றால் டெக்சாஸை அமெரிக்காவுடன் இணைப்பதாக வாக்குறுதி அளித்தார். இவரை எதிர்த்து போட்டியிட்ட ஹென்றி கிளே தோல்வியுற்றார். இந்நிலையில் பதவியை விட்டு விலக மூன்று நாட்களே இருந்த நிலையில், குடியாட்சித் தலைவரான ஜான்டெய்லர் (John Taylor) டெக்சாஸை இணைப்பதற்கான ஒப்பந்தத்தை மேற்கொண்டார். 1845ல் டெக்சாஸ் அமெரிக்காவின் பகுதியாயிற்று.

### *3. ஓரிகன் கைப்பற்றப்படுதல்*

ஆடம்-ஒனீஸ் உடன்படிக்கையின்படி ஸ்பெயின் $42^0$ க்குமேல் தனது எல்லையை நீட்டிப்பதில்லை என உறுதி கூறியது. ரஷ்யா $42^0.40''$ க்கு கீழ் அலாஸ்காவின் எல்லையை நீட்டிப்பதில்லை என உறுதி அளித்தது. இந்நிலையில் இடைப்பட்ட பகுதியின்மீது பிரிட்டன் உரிமை கொண்டாடியது. 1818ல் பிரிட்டனும் அமெரிக்காவும்

கூடிப்பேசி கூட்டாக அப்பகுதியை ஆண்டுவந்தனர். தொடக்கத்தில் அமெரிக்கா ஓரீகனில் குடியேற்றங்களை அமைக்க முயலவில்லை.

1824ல் ஓரீகனில் வாழ்ந்த இந்தியப் பழங்குடியினர் "செயின்ட் லூயி" (St.Louis) நகரத்திற்கு சென்று அங்கிருந்த அமெரிக்க சமயப்பரப்பாளர்களை கிருத்துவ சமயத்தை பரப்ப வருமாறு அழைத்தனர். அவர்களுடன் ஆய்வுப்பயண வீரர்களும் உடன்சென்றனர். அவர்கள் அப்பகுதியின் இயற்கை வளத்தையும், பருவநிலைகளையும் எடுத்துரைத்தனர். அதன் தொடர்ச்சியாக பலர் குடியேறலாயினர்.

1844ம் ஆண்டு தேர்தலின்போது மக்கள் கட்சியினர் ஓரீகனை சுதந்திர எல்லையாக இணைக்க திட்டம் தீட்டினர்; டெக்சாஸ் அடிமை மாநிலமாக இணைந்திருந்தது. இதனைத் தொடர்ந்து நடைபெற்ற தேர்தலில் ஜேம்ஸ்.கே.போக் வெற்றி பெறவே அத்திட்டம் செயல்படுத்தப்பட்டது.

இவர் ஓர் அறிக்கையை இங்கிலாந்திற்கு அனுப்புமாறு காங்கிரசைத் தூண்டினார்; அதில் ஓரீகன் மீதான கூட்டு உரிமையை இங்கிலாந்து நிறுத்திக் கொள்ள வேண்டும்; அப்பகுதியில் அமெரிக்க சட்டங்கள் செயல்படுத்தப்படும்; குடியேறும் அமெரிக்கர்களுக்கு அரசு பாதுகாப்பளிக்கும் எனப்பட்டது.

இதனையொட்டி போர் ஏற்படுவதை விரும்பாத இங்கிலாந்து ஒரு உடன்படிக்கையினை 1847ல் மேற்கொண்டது. அதன்படி, $49^0$ அட்சரேகையை இருநாடுகளும் எல்லையாக ஏற்றன; வான்கூவர் தீவும், கொலம்பியா ஆற்றினை போக்குவரத்துக்கு பயன்படுத்தும் உரிமையும் இங்கிலாந்திற்கு வழங்கப்பட்டது. ஓரீகன் அமெரிக்கா வசமாயிற்று.

### *4. மெக்ஸிகோ போர்* (Mexico war) *(1846–48) (அல்லது) கலிபோர்னியாவும், நியூமெக்ஸிகோவும் கைப்பற்றப்படுதல்*

கலிபோர்னியாவும், நியூமெக்ஸிகோவும், மெக்ஸிகோவுக்கு சொந்தமாய் இருந்தன. தொலைவில் இருந்த இப்பகுதிகளை, மெக்ஸிகோவால் திறமையாக ஆட்சிபுரிய முடியவில்லை. கலிபோர்னியாவில் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டதைத் தொடர்ந்து பெருவாரியாக அமெரிக்கர்கள் அங்கு குடியேறலாயினர்; ஒரே ஆண்டில் 90,000 மக்கள் குடியேறினர். அமெரிக்க மக்கள்தொகை பெருகவே அப்பகுதியை அமெரிக்காவுடன் இணைப்பதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அமெரிக்க பேராளரின் தூண்டுதலால், அமெரிக்கர்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டனர்; ஆனால் ஒடுக்கப்பட்டனர்.

அமெரிக்க கலிபோர்னியாவை விலைக்கு வாங்க முன்வந்தது. குடியரசுத் தலைவரான ஜேம்ஸ் போக், 'ஜான்சிலிடல்' (John Silidel) என்பவரை சிறப்புத் தூதராக அனுப்பி வைத்தார். அவர் கலிபோர்னியா, மெக்சிகோ ஆகிய இரு பகுதிகளுக்கும் 25 மில்லியன் டாலர்கள் தருவதாகக் கூறினார். மேலும் மெக்ஸிகோ புரட்சியில் உயிரையும், உடமைகளையும் இழந்த அமெரிக்கர்களுக்கு நஷ்டஈடு கேட்பதில்லை என்றும் வாக்குறுதி அளித்தார். அரசு தூதரை சந்திக்க மறுத்ததுடன் டெக்சாஸை திருடிக் கொண்டதாக பழித்தது; தவிர மெக்சிகோவின் ஒற்றுமையை குலைப்பதாகவும் குறைகூறியது.

குடியரசுத் தலைவர் போக் போர் செய்வதென முடிவு செய்தார். டெக்ஸாஸின் தென்எல்லையை நியூஸெஸ் (Newces) ஆற்றிலிருந்ததை மாற்றி 'ரியோ கிராண்டு' (Riogrand) வரை உள்ளதாக அறிவித்தார். இப்பகுதியினை

கைப்பற்ற தளபதி டெயலர் (Zachary Taylor) தலைமையில் ஒரு படையை அனுப்பி வைத்தார். போர் மூண்டது. காங்கிரஸ் குடியாட்சித் தலைவரின் தீர்மானத்தை ஏற்று 50,000 வீரர்கள் கொண்ட படையினைத் திரட்ட 10 மில்லியன் டாலர்கள் நிதியுதவி அளித்தது. இப்போரினை வடமாநிலங்கள் எதிர்த்தன, மேற்கு மாநிலங்கள் வரவேற்றன.

டெய்லரின் தலைமையிலான படை 'பியூனா விஸ்டா' (Buena vista) என்ற இடத்தில் மெக்ஸிகோ படைகளை முறியடித்து அமோக வெற்றி பெற்றது. தளபதி கியர்னியின் (S.W.Kearney) தலைமையிலான சாண்டாபீ (Santafe) லாஸ்ஏஞ்சல்ஸ் (Los Angels) ஆகிய இடங்களில் வெற்றி பெற்றது. இதற்கிடையில் கலிபோர்னியாவில் வாழ்ந்த அமெரிக்கர்கள் 'கலிபோர்னியக் குடியரசு' ஒன்றினை அமைத்தனர். வின்பீல்டு ஸ்காட் (Winfield Scott) தலைமையிலான கப்பற்படை மெக்ஸிகோவின் துறைமுகமான வீராகுருஸை (Vera cruz) கைப்பற்றியது. மெக்ஸிகோ நகரமும் முற்றுகையிடப்பட்டது. மெக்ஸிகோ இராணுவம் முறியடிக்கப்பட்டு 1847ல் சரணடைந்தது.

### கூடலுப் ஹிடால்கோ உடன்படிக்கை (Cuadaluph Hidalgo treaty) *1848*

அமெரிக்க பிரதிநிதியான "நிக்கோலஸ் டிரிஸ்ட்" (Nicholas.P.Trist) மெக்ஸிகோவுடன் ஓர் உடன்படிக்கையினை மேற்கொண்டார். அதன்படி, ரியோகிராண்டு நதி டெக்ஸாஸின் தென்எல்லையாக ஏற்கப்பட்டது; 15 மில்லியன் டாலருக்கு கலிபோர்னியாவையும், நியூமெக்ஸிகோவையும் தர மெக்ஸிகோ ஒப்புக்கொண்டது; அமெரிக்க மக்களுக்கு தரவேண்டிய நஷ்டஈட்டினை அமெரிக்கா தானே வழங்க ஒப்புக்கொண்டது.

இதனால் அமெரிக்காவின் எல்லை பெரிதும் விரிவடைந்தது; அமெரிக்காவின் மேற்கு எல்லை பசிபிக்கடலை அடைந்தது. அமைதி காட்டும் மெய்மை வழிக் கோட்பாடு உச்சத்தை அடைந்தது; வணிகம் பெருகியது; கிழக்கேயிருந்து துரத்தப்பட்டு இப்பகுதியில் குடியேறிய பழங்குடியினர் மிகவும் பாதிக்கப்பட்டனர். ஒதுங்கி வாழ்ந்து வந்த மார்மானியர்களும் மிகுந்த தொல்லைகளுக் குள்ளாயினர். இப்புதிய பகுதிகளில் எத்தகைய குடியேற்றங்களை அமைப்பது அடிமை முறையா? சுதந்திரமானதா? என்ற சிக்கல் உள்நாட்டுப் போருக்கு காரணமாயிற்று.

## *காட்ஸ்டன் வாங்கிய நிலம்* (Gadsden Purchase)

நியூமெக்ஸிகோவையும், கலிபோர்னியாவையும் இணைத்து தென்எல்லை ஓரமாக ஓர் இரயில்பாதை அமைக்கப்பட்டது. இதற்கு தேவைப்பட்ட நிலப்பகுதியில் ஒரு சிறுபகுதி மெக்ஸிகோவுக்கு சொந்தமாயிருந்தது. இதனை 1853ல் மெக்ஸிகோவில் அமெரிக்க பிரதிநிதியாகப் பணியாற்றிய ஜேம்ஸ்காட்ஸ்டன் (James Gadsden) என்பவர் மெக்ஸிகோவிடமிருந்து 54,000 சதுரமைல்களை 10 மில்லியன் டாலருக்கு வாங்கினார். இதற்கு 'காட்ஸ்டன் வாங்கிய நிலம்' எனப் பெயரிடப்பட்டது.

## *5. விளைவுகள்*

மேற்கு நோக்கி விரிவடைதல் பல அரிய விளைவுகளைத் தோற்றுவித்தது என பிராடரிக் ஜாக்சன் டர்னர் (Frederick Jackson) என்ற அறிஞர் கூறுகின்றார்.

ஐரோப்பிய நாகரீகத்திலிருந்து மாறுபட்ட "அமெரிக்க நாகரீகம்" வளரலாயிற்று; மூன்று எல்லைப்புறங்கள் இதற்குக் காரணமாய் இருந்தன. மேலும் எல்லைப்புறத்தில் குடியேறிய

மக்கள் பல நாட்டவராயிருந்தனர். இவர்கள் தங்கள் நாட்டுடன் கொண்டிருந்த தொடர்வை குறைத்துக் கொண்டு அமெரிக்க நாட்டையே பெரிதும் நம்பலாயினர். இதனால் "புதிய தேசிய உணர்வு" எழலாயிற்று. இதனால் கூட்டாட்சியின் வலிமை பெருகலாயிற்று. அதே சமயத்தில் எல்லைப்புற வாழ்க்கையினால் தனித்தன்மையை வளர்த்ததுடன் மக்களாட்சி மீது பற்றுக்கொண்டு குடியாட்சி நிறுவனங்களையும் வளர்த்தனர்.

கிழக்குப் பகுதியில் வாழ்ந்த அடிமைகளும், மக்களும் புதிய வாழ்க்கையை தேடிக்கொள்ள வசதியாக மேற்குநோக்கி விரிவடைதல் அமைந்தது.

மேலும் மேற்கு நோக்கி விரிவடைந்ததால் சமூக வாழ்க்கையில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. இதுகுறித்து இரண்டு வகையான கருத்துகள் உள்ளன. புதிய குடியேற்றங்களில் லஞ்சம், ஊழல் போன்ற கொடுமைகள் இல்லை. ஒரு புதிய மேம்பட்ட சமுதாயம் உருவாயிற்று என ஒரு சாரார் புகழ்ந்து கூறுகின்றனர். மற்றொர சாரார் அங்கு உயர்ந்த பண்பாடுகள் இல்லை எனவும் தனிதன்மையை பெரிதும் விரும்பி சட்டத்தை மீறும் வன்முறைகளில் ஈடுபட்டார்கள் எனவும் குறைகூறுகின்றனர். இரண்டாவது கருத்து அவ்வளவாக ஒப்புக்கொள்ள முடியாது; குடியேற்றத்தின் தொடக்கத்தில் அப்படி இருந்திருக்கலாம் என அறிஞர்கள் கூறுகின்றனர்.

# அலகு 2.3
# அமெரிக்க குடியரசுத் தலைவர்கள் 1837-1861

ஆண்ட்ரு ஜாக்சனுக்குப் பிறகு ஆப்ரகாம் லிங்கன் வரை பதவிக்கு வந்த குடியரசு தலைவர்களின் சாதனைகள் அவ்வளவாக இல்லை. 1837-1860க்குட்பட்ட ஆண்டுகளில் வடபகுதி தொழிற்துறைக்கும், தென்பகுதி வேளாண்மைத் துறைக்கும் இடையே ஒரு ஆதிக்கப்போட்டி நடைபெற்றது. இறுதியில் அது உள்நாட்டுப் போராக முடிவுற்றது.

***மார்டின் வான் பியுரன் - 1837-1841***

1836ஆம் ஆண்டு ஜனாதிபதி தேர்தலில் ஜனநாயகக் கட்சியின் சார்பாக போட்டியிட்டு தேர்ந்தெடுக்கப்பட்டவர் வான்பியுரன் ஆவார். ஜான்சன் கடைப்பிடித்த பொருளாதாரக் கொள்கையினால் மந்தநிலை ஏற்பட்டது. வங்கிகள் நசுக்கப்பட்டன. நிலங்களின் விலை உயர்ந்தது. காகித நாணயம் வெளியிட்டதால் வசதியானவர்களே வளம் பெற்றனர். வெளிநாட்டவர்கள் தங்கத்தை வாங்கினர். விற்பனை குறைந்துவிட்டதால் வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட்டது. எனவே ஜாக்சனின் திட்டங்களை நிறுத்திவிட 1837, செப்டம்பரில் முடிவு செய்யப்பட்டது.

இங்கிலாந்து அமெரிக்க வெளியுறவுச் சிக்கல் ஏற்பட்டது. கனடாவிலிருந்த புரட்சிப்படை வீரர்களுக்கு அமெரிக்கர்கள் பயிற்சியளித்தனர், படைக்கருவிகள் வழங்கினர். இதற்கு 'கரோலின்' என்ற கப்பல் பயன்படுத்தப்பட்டது. இதனை கனடாவின் அரசாங்க வீரர்கள்

கைப்பற்றி எரித்துவிட்டனர். இதற்காக இங்கிலாந்துடன் போர்புரிய விரும்பவில்லை. கரோலின் நிகழ்ச்சிக்குக் காரணமான கனடா துணை ஷெரிப் அலக்சாந்தா மெல்லியட் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார். இதற்கு இங்கிலாந்து எதிர்ப்பு தெரிவித்தது.

நாட்டில் அடிமை முறையை ஒழிக்க வேண்டும் என்ற பிரச்சாரம் செய்யப்பட்டது. அடிமை ஒழிப்பு வாதிகளின் குரலுக்கு எதிராக கால் ஹீன் என்பவர் அடிமை ஒழிப்பு மனுக்களை காங்கிரஸ் ஏற்கக் கூடாது என வாதிட்டார். மேலும் மக்களின் வாழ்கைத்தரம் மிகவும் பாதிப்பு அடைந்தது. வான் பியுரனின் முயற்சிகள் முழுவதும் வெற்றிபெற முடியவில்லை. 1840 தேர்தலில் தோல்வியடைந்தார்.

## *வில்லியம் ஹென்றி ஹாரிசன் – 1841*

நாட்டில் குடியரசு கட்சியினர் விக்கட்சி என்ற புதிய கட்சியை உருவாக்கினார்கள். இதற்கு நியு இங்கிலாந்து தொழிலதிபர்கள், தென்மாநில பண்ணையார்கள் ஆதரவு தந்தனர். 1840 தேர்தலில் வான் பியுரனுக்கு எதிராக வில்லியம் ஹென்றி ஹாரிசனை நிறுத்தினார்கள். வெற்றிபெற்ற இவர் பதவியேற்ற ஒரு மாதத்திலேயே காலமானார். எனவே துணை ஜனாதிபதி ஜான்டைலர் பதவியேற்றார்.

## *ஜான்டைலர் – 1841-1845*

இவர் பிறருடைய கருத்தை ஏற்க மறுப்பவர். தனது திட்டங்களை யாரும் குறை சொல்ல அனுமதிப்பதில்லை. இவரது குணநலன்களைப் பிடிக்காத அனைவரும் இராஜினாமா செய்தனர். வெளியுறவுச் செயலர் வெப்ஸ்டர் மட்டும் பதவியில் இருந்தார். விக்கட்சியின் தலைவர்

ஹென்றி கிளேயின் கருத்துக்களையும் ஏற்க மறுத்ததால் கட்சியைவிட்டு வெளியேற்றப்பட்டார். கட்சியைவிட்டு வெளியேற்றப்படும் முதல் ஜனாதிபதி இவரேயாவார்.

இங்கிலாந்திற்கும் அமெரிக்காவிற்கும் இடையே வெப்ஸ்டர்-ஆஸ்பர்ட்டன் உடன்படிக்கை 1842, ஆகஸ்டில் ஏற்பட்டது. கனடாவுடன் அமெரிக்காவின் வடஎல்லை நிர்ணயிக்கப்பட்டது.

## *ஜேம்ஸ் நாக்ஸ் போல்க் – 1845-1849*

இவர் ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்தவர். ஹென்றி கிளே விக்கட்சியின் சார்பாக 1844ஆம் ஆண்டு தேர்தலில் போட்டியிட்டார். தேர்தல் வாக்குறுதியாக டெக்ஸாஸையும், ஆரிகானையும் மீட்போம் என்றதினால் நாக்ஸ் போல்க் வெற்றி பெற்றார். இவரது குறிக்கோள் புதிய நிலப்பரப்புகளைச் சேர்ந்து நாட்டின் எல்லைகளை விரிவடைய செய்ய வேண்டும் என்பதே. ஆரிகான் பிரிவினை மற்றும் மெக்ஸிகோ போர் முக்கிய நிகழ்வுகளாகும் டெக்ஸாஸ், கலிபோர்னியா, ஆரிகான், நியுமெசிக்கோ ஆகிய பகுதிகள் கூட்டாட்சியில் இணைக்கப்பட்டன.

## *ஜக்காரி டெய்லர் – 1849-1850* **(Zachary Taylor)**

1848ஆம் வருட தேர்தலில் விக்கட்சியைச் சேர்ந்த ஜக்காரி டெய்லர் வெற்றி பெற்றார். காரணம் மெக்ஸிகோ போரில் பெற்ற வெற்றியாகும். 1850ஆம் ஆண்டு ஏற்பட்ட கிளேடன்-புல்வார் ஒப்பந்தப்படி இங்கிலாந்திற்கும் அமெரிக்காவிற்கும் இடையே நட்புறவு ஏற்பட்டது மத்திய அமெரிக்கா பகுதியில் ஒரு கால்வாய் வெட்ட ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆனால் இருதரப்பினரும் இங்கு ஆதிக்கம் செலுத்தக்கூடாது எனவும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

கலிபோர்னியா பகுதியில் தங்கம் கிடைக்கும் செய்தி நாடெங்கும் பரவவே மக்கள் கலிபோர்னியா நோக்கி வரலாயினர். தங்க வேட்டைக்காரர்கள் தங்களுக்குள்ளே தங்கத்தை பிரித்துக் கொண்டனர். அங்குள்ள நிலங்களில் தேடுதல் வேட்டை நடந்தது. 1850, ஜனவரியில் கலிபோர்னியாவின் மக்கள்தொகை ஒன்றரை லட்சமாக உயர்ந்தது. தங்கம் தோண்டி எடுப்பது சம்மந்தமாக எந்த ஒரு சட்டமும் இல்லை. எனவே வலிமையுள்ளவர்கள். தங்கம் வைத்திருந்தவர்களிடம் கொள்ளையடித்தனர். இப்பகுதி முழுவதும் குழப்பமாகவே இருந்தது. 1850, ஜனவரியில் டெய்லர் உடல்நலக் குறைவால் மரணமடைந்தார்.

## *மில்லர்டு பில்மோர் – 1850-1853*

டெய்லர் காலமானதும் துணை ஜனாதிபதியாக இருந்த மில்லர்டு பில்மோர் ஜனாதிபதியானார். இவரது அமைச்சரவையில் ஹென்றிகிளே, டேனியில் வெப்ஸ்டர் போன்ற அறிவாளிகள் பணியாற்றினர். இவர்கள் இருவரிடையே ஏற்பட்ட வாதங்கள் புகழ் பெற்றவை. கியுபாவை கைப்பற்ற எடுத்த முயற்சிகள் தோல்வியடைந்தன. இங்கிலாந்தும் பிரான்சும் அமெரிக்கா இனிமேல் கியுபாவை கைப்பற்றாது என உத்தரவாதம் தரவேண்டும் என கோரிக்கை வைத்தது. அதனை மறுத்ததுடன் அமெரிக்காவின் பாதுகாப்பிற்கு கியுபா தேவவைப்படலாம் என பதிலளிக்கப்பட்டது. மற்றொரு முக்கியமான நிகழ்ச்சி 1850ஆம் ஆண்டு சமரசம் ஆகும். அடிமைகள் தப்பித்துச் சென்றால் அவர்களைப்பிடித்து உரிமையாளர்களிடம் ஒப்படைக்க வழி செய்தது அந்த ஒப்பந்தம். எனவே இவரை மறுமுறை தேர்தலில் நிறுத்த விக்கட்சி மறுத்துவிட்டது.

### பிராங்களின் பியர்ஸ் – 1853-1857

ஜனநாயகக் கட்சியின் சார்பில் வெற்றி பெற்றவர். கேட்ஸ்டனின் பிரதேசம் என்ற பகுதி 1853இல் வாங்கப்பட்டது. இவரது ஆட்சிகாலத்தில் ஜப்பானுடன் தொடர்பு ஏற்பட்டது. கமோடர் மாத்யூ பெர்ரி என்பவர் ஏழு கப்பல்களுடன் ஜப்பான் சென்றார். அமெரிக்கத் தொழில்நுட்பங்கள் ஜப்பானியர்களுக்கு அறிமுகப்படுத்தப் பட்டது. 1854, மார்ச்சில் கனகாவா ஒப்பந்தத்தின்படி, ஷிமோடா, ஹகோஅடட் என்ற இரண்டு துறைமுகங்கள் அமெரிக்கர்களுக்கு திறந்துவிடப்பட்டன. டவுன்ஷெண்டு ஹாரிஸ் என்பவர் அமெரிக்க பிரதிநிதியாக நியமிக்கப்பட்டார்.

பியர்ஸ் அடிமை முறைக்கு ஆதரவு அளித்தார். கான்சாஸ்-நெப்ராஸ்கா சட்டத்தை இவர் ஆதரித்தார். அது 1820, மிசௌரி சமரசத்தை செல்லுபடியற்றதாக்கியது. ஸ்பானியர்களிடமிருந்து கியுபாவைப் பிரிக்க நினைத்ததை வடமாநிலங்கள் எதிர்க்கவே கைவிட்டார். நிகாராகுவா கைப்பற்றப்பட்டது. ஹவாய் தீவுகளில் உள்ள சிற்றரசர்கள் பலரை ஏமாற்ற நினைத்ததை செனட் மன்றம் ஏற்றுக்கொள்ளவில்லை.

### ஜேம்ஸ் புக்கானன் – 1857-1861

உள்நாட்டுப் போர் நடைபெறும் முன்பு ஜனாதிபதியாக பதவி வகித்தார். உண்மையான தேசபக்தரான இவரால் கூட்டாட்சியை காப்பாற்ற முடியவில்லை. அடிமை பற்றிய விவாதம் தீவிரமடைந்தது. லிங்கன்-டக்ளஸ் வாதங்கள் நடைபெற்றன. டிரட்-ஸ்காட் வழக்கும் முக்கியமான நிகழ்ச்சியாகும். அடிமைமுறை பற்றி முடிவெடுக்க வேண்டிய சூழ்நிலையில் உள்நாட்டுப் போர் தவிர்க்க முடியாததாகிவிட்டது.

# அலகு 2.4

# வடக்கு - தெற்கு மாநிலங்கள் மோதல் - உள்நாட்டுப் போர்

"தென் மாநிலங்களின் தோட்டப் பொருளாதாரத்திற்கும், வட மாநிலங்களின் தொழில்துறை பொருளாதாரத்திற்கும் இடையில் ஏற்பட்ட உராய்தலே இந்த உள்நாட்டுப்போர்".

பால்கனர்.

அமெரிக்க உள்நாட்டுப் போரானது இரு வேறுபட்ட கலாச்சாரங்களுக்கு இடையே ஏற்பட்ட மோதலாகும்.

C.P.ஹில்.

உள்நாட்டுப் போர் ஒரு இரண்டாவது அமெரிக்கப் புரட்சியாகும்.

சார்லஸ் A.பியர்ட்.

வடக்கு தெற்கு மாநிலங்களுக்கிடையே ஏற்பட்ட மோதல்கள் முடிவில் உள்நாட்டுப் போரில் முடிந்தது. அடிமை முறையை ஒழிக்க வேண்டும் என வடமாநிலங்கள் விரும்பின. தென்மாநிலங்களோ இம்முறையை ஒழிக்க விரும்பவில்லை. இதுதான் உள்நாட்டுப் போருக்கு முக்கிய காரணம் எனப் பலர் கருதுகின்றனர். இது தவறு என்கிறார் பேராசிரியர் C.P.ஹில். உண்மை என்னவென்றால் உள்நாட்டுப் போர் என்பது இரண்டு வேறுபட்ட வாழ்வியல் முறைகளுக்கு இடையே ஏற்பட்ட மோதல்கள் தான் என்றும் அவை ஒன்றுக்கொன்று எதிர்மறையாக விளங்கின என்றும் கூறுகின்றார். வடக்கே அடிமைமுறை இல்லை. ஆனால் தெற்கே அது தேவைப்பட்டது என்றாலும் வட, தென்

மாநிலங்கள் அரசியல், பொருளாதாரம், சமுதாயம் ஆகியவற்றில் அடிப்படையிலே வேறுபட்டு இருந்தனர்.

## வட, தென் மாநிலங்களுக்கிடையே வேறுபாடுகள்

### புவியியல் வேறுபாடுகள்

அமெரிக்க மாநிலங்கள் புவியியல் அடிப்படையில் இரு பகுதிகளாக பிரிந்து இருந்தன. வடபகுதி என்பது நியு இங்கிலாந்து - மெய்ன், நியுஹாம்ஷயர், வெர்மாண்ட், மசாசுசெட்ஸ், கானக்டிகட், ரோடுஐலண்டு - நியுயார்க், நியுஜெர்ஸி, பென்சில்வேனியா, ஒஹையோ, இந்தியானா, இல்லினாய்ஸ், மிச்சிகன், ஐயோவா, விஸ்கான்சின் ஆகிய மாநிலங்கள் அடங்கியது. இப்பகுதிகளில் மழை குறைந்தும், குளிர் அதிகமாகவும், விவசாயத்திற்கு மண்வளம் ஏற்றதாகவும் இல்லை. மக்கள் தொகையும் அதிகம். 1850இல் 13 மில்லியன் மக்கள் வாழ்ந்தனர். வளர்ந்துவரும் தொழிற்துறையில் இவர்கள் பங்குபெறலாயினர். தொழிற்சாலைகள், மில்கள், எந்திரத்தொழில்கள் போன்ற பலவகையான தொழில்கள் வளர்ந்தன. கல்விச்சாலைகள், பத்திரிகைகள், ஜனநாயக உணர்வு, தேசபக்தி உணர்வு இங்குள்ள மக்களுக்கு உண்டு. தொழிலதிபர்கள், வணிகர்கள், நடுத்தரவர்க்க செல்வந்தர்கள், தொழிலாளர்கள் என பலதரப்பட்ட மக்கள் இங்கு வாழ்ந்தனர். எனவே இப்பகுதி கலாச்சாரமே வேறுதான். இங்கு பணம் திரட்டுவது எளிதாக இருந்தது. விக் கட்சி இங்கு வளர்ந்தது. இதைக் கட்டுப்படுத்தியது செல்வந்தர்கள்தான். இங்கு தொழிலதிபர், தொழிலாளர்களுக்கிடையே அரசியல் சமத்துவம் நிலவியது. வடபகுதி மக்கள் எதிர்கால பொருளாதார வளர்ச்சி என்ற நம்பிக்கையுடன் சுறுசுறுப்பாக காணப்பட்டனர். ஹர்வர்டு, யேல் பல்கலைக்கழகங்கள் இருந்தன. கிறிஸ்தவ மடாலயங்கள் பள்ளிகளை நடத்தின. பால்டிமோர்சன் மற்றும் நியுயார்க் டிரிப்யூன் என்ற புகழ்பெற்ற பத்திரிகைகள் பிரசுரிக்கப்பட்டன. கவிஞர்கள், கட்டுரையாளர்கள்,

சிந்தனைவாதிகள் எனப் பலர் இப்பகுதியில் வாழ்ந்தனர். இப்பகுதி ஒரு நகர்ப்புற, தொழிற்துறை வாழ்க்கைமுறையைக் கொண்டிருந்தது.

## *தென்பகுதி*

எங்கெல்லாம் அடிமை முறை நிலவியதோ அதுவெல்லாம் தென்பகுதி எனலாம். மேரிலாந்த், டிலேவர், கென்டகி, வர்ஜீனியா, தென்னசி, மிசௌரி ஆகிய மாநிலங்கள் தென்பகுதியைக் குறிக்கும். இதுதவிர பருத்தி பிரதானப் பயிரான விளைவிக்கும் தென்கரோலினா, ஜியார்ஜியா, புளோரிடா, அலபமா, மிசிசிபி, லூசியானா, அர்கான்சாஸ், டெக்ஸாஸ் மாநிலங்களும் அடங்கும். நல்ல நிலவளம், போதுமான வெப்பம் இருந்ததினால் பருத்தி, புகையிலை அபரிதமாக விளைந்தது. இந்தக் கடுமையான வேளாண்பணிகளுக்கு அடிமைகள் தேவைப்பட்டனர். எனவே அடிமை முறையின்றி இங்கு வேளாண்மை செய்ய இயலாது. மிகப்பெரிய வெள்ளை பண்ணையாளர்கள், அவர்களிடம் அடிமைகளாக பணியாற்றும் நீக்ரோ இன மக்கள் இங்கு வாழ்ந்தனர்.

வெள்ளையர்களில் தென்பகுதியில் 6 சதவீதம் பேர் அடிமை சொந்தக்காரர்களாக இருந்தனர். மூன்று இலட்சத்து ஐம்பதாயிரம் பேர் வெள்ளை பண்ணையாளர்கள். 30 முதல் 35 இலட்சம் கறுப்பர்களை பணிக்காக வைத்திருந்தனர். இவர்களில் 8000 பேர்கள் ஒவ்வொருவரும் 50 அடிமைகளை வைத்திருந்தனர். இங்கு ஒரு வகையான மேட்டுக்குடித்தன்மை Aristocracy நிலவியது. பெரும் வெள்ளை பண்ணையார்கள் பிரபுக்கள் வாழ்க்கைமுறையைக் கொண்டிருந்தனர். இங்கு வேளாண்மையை விட்டால் வேறு தொழில்கள் இல்லை. பருத்தி அரசன் (King Cotton) சில சமயங்களில் அழிவைத் தேடித்தருவதும் உண்டு. வேறு தொழில்கள் இல்லை. இங்குள்ள பொருளாதாரம் நிலையற்றதாக இருந்தது. தென்பகுதியில் போக்குவரத்து

வசதிகள் குறைவு. சாலைகள் மோசமாக இருந்தன. வாழ்க்கைத்தரம் திருப்திகரமாக இல்லை. கல்வியறிவு குறைவு. எல்லாவகையிலும் வடபகுதியைவிட தென்பகுதி பிற்போக்குத்தன்மை படைத்ததாக இருந்தது. உடல்உழைப்பு என்பது நீக்ரோக்களைச் சார்ந்தது என்ற எண்ணம் நிலவியது. அடிமைகளின் உழைப்பின் மூலமே ஆதாயம் பெற்றனர். சமய சகிப்புத்தன்மை குறைவு. நகரங்கள் வளர்ச்சிபெறவில்லை. கிராமியத்தன்மை இங்கு நிலவியது. இவ்விதமாக இரண்டு வேறுபட்ட வாழ்க்கைமுறைகளினால் வடக்கும் தெற்கும் பிளவுபட்டு இருந்தது.

### அடிமைப்பிரச்சனை

அமெரிக்காவில் குடியேற்றங்கள் ஏற்பட்ட காலத்திலேயே அடிமைகளும் கொண்டுவரப்பட்டனர். வடபகுதி வியாபாரிகள் இந்தத் தொழிலில் ஈடுபட்டனர். வடஆப்பிரிக்கா பகுதிகளில் அடிமைகள் பிடிக்கப்பட்டு அமெரிக்காவிற்கு கொண்டுவரப்பட்டு தென்பகுதி தோட்ட முதலாளிகளுக்கு பண்ணை வேலைகளுக்காக விற்கப்பட்டார்கள். தென்பகுதி விவசாயம் அடிமைகளை நம்பியே இருந்ததினால் அடிமை முறையை விரும்பினார்கள். வடமாநிலங்களுக்கு அடிமைகள் தேவையில்லை. மனிதாபிமான அடிப்படையில், ஒரு சுதந்திர நாட்டில், உரிமைப் பிரகடனத்தில் கூறப்பட்ட சமத்துவக் கோட்பாடுகளுக்கு எதிராக அடிமைமுறை உள்ளது எனவும் எனவே அதனை ஒழிக்க வேண்டும் என்றும் கூறிவந்தனர்.

"அடிமைமுறையை ஒழித்துச் சுதந்திர பூமிக்காகப் போராடுபவர்கள், மனிதாபிமான உணர்ச்சியினால் தூண்டப்பெற்று அடிமைகளைப் பாதுகாப்பது அவர்கள் நோக்கமல்ல. தென்பகுதியினரின் செல்வாக்கை ஒடுக்குவதற்காகத்தான் அவ்வாறு கூறுகிறார்கள்" என ஜெபர்சன்டேவிஸ் கூறுவார்.

## அடிமைமுறை ஒழிப்பு இயக்கங்கள்

அடிமைகளை வைத்துக் கொள்ளக்கூடாது என ஆரம்ப முதலே சில இயக்கங்கள் எதிர்ப்பைக் காட்டி வந்தன. முதல் ஜனாதிபதி ஜார்ஜ் வாஷிங்டனும், ஜெபர்சனும் தங்கள் பண்ணைகளில் அடிமைகளை வைத்திருந்தனர். அரசியலமைப்புச் சட்டத்தில் அடிமை முறையைப் பற்றி ஒன்றுமே கூறப்படவில்லை. 1816இல் American Colonisation Society என்ற அமைப்பு அடிமைகளை விலைகொடுத்து வாங்கி அவர்களை விடுதலை செய்து மீண்டும் ஆப்பிரிக்காவிற்கு கொண்டுசென்று குடியேற்றுவதை குறிக்கோளாகக் கொண்டிருந்தது. ஆப்பிரிக்காவில் 'லைபீரியா' என்ற பிரதேசத்தை வாங்கி அடிமைகளை அங்கு அனுப்பினார்கள். 1831இல் Anti Slavery Society என்ற அமைப்பை கேரிசன் என்பவர் தொடங்கினார். அடிமைமுறையை எதிர்த்து செய்தித்தாள்களும் ஆரம்பிக்கப்பட்டன. பெஞ்சமின் லண்டி என்பவர் Genius of Universal Emancipation என்ற பத்திரிகையையும், காரிசன் என்பவர் Liberator என்ற பத்திரிகையையும் ஆரம்பித்தனர். இதேபோல் சில நூல்களும் வெளியிடப்பட்டன. அவற்றில் முக்கியமானது ஹாரியட் பீச்சர் ஸ்டோவ் என்ற பெண்மணி 'Uncle Tome's Cabin' என்ற நூலை எழுதி 1825இல் வெளியிட்டார். அடிமைகளின் அவல வாழ்க்கையை இந்நூல் வெளியிட்டது. இதைப்படித்தவர்கள் அடிமைகள் மீது அனுதாபம் கொண்டனர். பாமர மக்களின் மனதைக் கவரும் வகையில் எழுதப்பட்டிருந்தது. ஹின்டன் ரோவன் ஹெல்ப்பர் என்பவர் எழுதிய 'The impending crisis of the South. How to meet it' என்ற நூல் அடிமை முறையினால் ஏற்படும் தீய விளைவுகளை எடுத்துக்கூறியது.

### 1850ஆம் வருட சமரசம்

மேற்கு நோக்கி விரிவடைதலின் காரணமாக பல புதிய மாநிலங்கள் கூட்டாட்சியில் சேர்ந்தன. அப்படிச் சேரும்போது

அங்கு அடிமைமுறையை வைத்துக்கொள்வதா? இல்லையா? என்பது ஒரு பிரச்சனையாக அமைந்தது. 1820ஆம் ஆண்டு மிசௌரி சமரசம் அடிமைமுறைக்கு நிரந்தர தீர்வு காணவில்லை. மெக்ஸிகோ போரின் விளைவாக கிடைத்த புதிய பகுதிகளில் ஒன்றான கலிபோர்னியா மாநில அந்தஸ்து கோரி விண்ணப்பித்தபோது பழையபடி பிரச்சனைகள் எழுந்தன.

1848ஆம் ஆண்டு பென்சில்வேனியாவைச் சேர்ந்த டேவிட்வில்மாட் காங்கிரசில் ஒரு மசோதாவை அறிமுகப்படுத்தினார். அதுவே வில்மோட் தீர்மானம் என்று அழைக்கப்படும். "போர் மூலமாக புதிதாகச் சேர்த்துக் கொள்ளப்படும் பகுதிகளில் அடிமைமுறையைத் தடை செய்ய வேண்டும்" எனக் கோரியிருந்தார். இதனால் இரு பகுதியினரிடையே கொந்தளிப்பு ஏற்பட்டது. இத்தீர்மானம் பிரதிநிதிகள் சபையில் நிறைவேற்றப்பட்டது. செனட்டில் தோற்கடிக்கப்பட்டது.

ஓரிகான் பகுதியில் அடிமைமுறை ஒழிக்கப்பட்டது. கலிபோர்னியா, நியுமெக்ஸிகோ போன்ற இடங்களில் அடிமைமுறை தேவைப்படாது. ஆனால் தென்பகுதியினர் வில்மாட் தீர்மானம் தங்களை அவமானப்படுத்துவதாகக் கருதினர். ஐகாரி டைலர் 1849இல் கல்போர்னியா, நியுமெக்ஸிகோவை அடிமைகளற்ற மாநிலங்களாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறினார். ஆனால் ஆத்திரமடைந்த ஜார்ஜியாவைச் சேர்ந்த ராபர்ட் டூம்ஸ், அவ்வாறு அம்மாநிலங்களை ஆக்கினால் தான் பிரிவினைக்குத் தயாராக இருப்பதாகக் கூறினார். மேலும் இவ்விரு பகுதிகளில் அடிமைமுறை ஒழிக்கப்பட்டால் செனட் மன்றத்தில் சமநிலை பாதிக்கப்படும் என்று தென்பகுதியினர் அச்சமடைந்தனர்.

இந்த சிக்கலான பிரச்சனையைத் தீர்க்க ஹென்றி கிளேயின் உதவி நாடப்பட்டது. 1850இல் அவர் சில

தீர்மானங்களை சமர்ப்பித்தார்.

1. கலிபோர்னியா அடிமைமுறை இல்லாத மாநிலமாக சேர்த்துக் கொள்ளப்படும்.
2. நியுமெக்ஸிகோ, யுட்டா பற்றி தற்போது முடிவு எடுக்கவில்லை.
3. டெக்ஸாசின் மேற்கு எல்லை நிர்ணயிக்கப்பட வேண்டும்.
4. வாஷிங்டன் அமைந்துள்ள கொலம்பியா மாவட்டத்தில் அடிமைமுறை ஒழிக்கப்படும்.
5. தப்பி ஓடும் அடிமைகளை திரும்பப்பெற சட்டங்கள் இயற்றப்பட வேண்டும்.
6. மாநிலங்களுக்கிடையிலான அடிமை வியாபாரம் நடப்பதில் தலையிட காங்கிரசுக்கு அதிகாரம் இல்லை.

இந்த தீர்மானங்கள் மீது விவாதம் நடைபெற்றது. தென்பகுதியினர் அதிருப்தி அடைந்தனர். ஜான் கால்ஹீன் வடமாநிலங்களுக்கும், தென்மாநிலங்களுக்கும் தனித்தனியே குடியரசுத் தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என கூறினார். இந்நிலையில் இருபகுதியினரையும் சமரசம் செய்ய 1850ஆம் வருடம் சமரசத் திட்டம் கொண்டுவரப்பட்டது. அது பெரும்பாலும் கிளே அவர்களின் தீர்மானங்களை அமல்படுத்துவதாக இருந்தது.

கலிபோர்னியா அடிமைமுறை இல்லாத மாநிலமாக அனுமதிக்கப்பட்டதால் செனட்டில் வடமாநிலங்களின் பலம் 16 ஆகவும், தென்மாநிலங்களின் பலம் 15 ஆகவும் இருந்தது. இந்த சமரசத்தில் வடமாநிலங்கள் லாபமடைந்தன. அதேசமயம் தென்மாநிலங்கள் 'அகதிகள் அடிமைச் சட்டம்' (The Fugitive Slave Act) ஒன்றைப் பெற்றனர். தப்பி ஓடும் நீக்ரோவிற்கு யார் உதவி செய்தாலும் அது குற்றமாகக் கருதப்படும் என்று கூறப்பட்டது.

## *கான்சாஸ் நெப்ராஸ்கா சட்டம் 1854*

கான்சாஸ்-நெப்ராஸ்கா நிலப்பகுதி வழியாக புதிய ரயில்பாதைகள் அமைக்கப்பட்டபோது மீண்டும் அடிமைகள் பிரச்சனை எழுந்தது. செனட்டர் ஸ்டீவன்டக்ளஸ் கான்சாஸ் நெப்ராஸ்கா மசோதாவை அறிமுகப்படுத்தினார். இதன்படி அடிமைமுறை குறித்த எல்லா பிரச்சனைகளையும் அம்மாநில மக்களே தீர்மானித்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டனர். லூயிசியானா பகுதியில் 40 டிகிரி அட்சரேகைக்கு தென்பகுதி கான்சாஸ் என்றும், வடபகுதி நெப்ராஸ்கா என்றும் அழைக்கப்படும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

## *குருதி கொட்டும் கான்சாஸ்* (BLEEDING KANSAS)

கான்சாஸ் பகுதியில் வட, தென் பகுதியினர் தங்களது பெரும்பான்மையை அதிகப்படுத்த அங்கு சென்று குடியேறினர். இவ்விரு தரப்பினரும் மோதல்களில் ஈடுபட்டனர். படுகொலைகள் நடந்தன. 1856இல் ஜான் பிரவுன் என்ற அடிமை ஒழிப்பு வாதி தனது சகாக்களுடன், அடிமை ஆதரவு பகுதியான பொட்டாவாடோமி என்ற இடத்தை அடைந்து அங்குள்ள ஐந்து பேரை கொலை செய்தனர். இதுவே 'பொட்டாவாடோமி படுகொலை' எனப்படும். கான்சாஸில் நடந்த இக்கலவரங்கள் உள்நாட்டுப்போருக்கு வழிவகுத்தன. கான்சாஸில் அடிமைமுறை வைத்துக்கொள்ளலாம் என தீர்மானிக்கப்பட்டது. செனட் ஏற்றுக்கொண்டது. ஆனால் மக்களின் தீர்ப்புப்படி அடிமைமுறை இல்லா மாநிலமாக 1861இல் கான்சாஸ் கூட்டாட்சியில் இணைந்தது.

கான்சாஸ் நெப்ராஸ்கா சட்டத்தை வடபகுதியினர் வெறுத்தனர். புதிய குடியரசுக் கட்சி ஒன்று உதயமாயிற்று. இதில் வடமாநில விக்குகள், மத்திய, மேற்கு மாநிலங்களைச் சேர்ந்த சுதந்திரப்பிரியர்கள், அடிமைமுறையை எதிர்த்த ஜனநாயகக் கட்சியினர் இணைந்தனர். 1854, பிப்ரவரியில்

விஸ்கான்சில் இக்கட்சி உருவாயிற்று. கான்சாஸ் நெப்ராஸ்கா சட்டத்தை ரத்து செய்தல், தப்பி ஓடும் அடிமைகள் சட்டத்தை நீக்குதல், கொலம்பியா மாவட்டத்தில் அடிமைமுறையை அகற்றுதல் ஆகிய கொள்கைகளைக் கொண்டிருந்தனர். வடமாநிலங்களில் இக்கட்சி பெரும் செல்வாக்குப் பெற்றது. 1856 தேர்தலில் இவ்விரு கட்சிகளும் மோதின. அடிமைமுறையின் காரணமாக நாடு இரண்டாகப் பிரிந்தது.

### *அன்தனி பர்ன்ஸ்* (ANTHONY BURNS)

காங்கிரசில் கான்சாஸ் நெப்ராஸ்கா சட்டம் நிறைவேற்றப்பட்ட அன்று பாஸ்டன் நகர மக்கள் கூட்டம் நீக்ரோ கைதியைக் காப்பாற்ற முயற்சி செய்தது. அன்தணி பர்ன்ஸ் என்ற அடிமை விர்ஜினியாவிலிருந்து தப்பி ஓடியவன். மசாசூசெட்ஸ் மாநிலத்தில் பிடிபட்டான். ஏற்கனவே உள்ள தப்பி ஓடும் அடிமைகள் சட்டப்படி அவனை அவனது சொந்தக்காரனிடம் ஒப்படைக்க வேண்டும். பாஸ்டனில் அடிமை ஒழிப்பு வாதிகள் அவனைக் காப்பாற்ற நினைத்தனர். அவனது சொந்தக்காரனுடன் அவனை ஒரு கப்பலில் ஆயிரம் வீரர்களுடன் பாதுகாப்புடன் வர்ஜீனியாவுக்கு அனுப்ப அரசாங்கத்திற்கு 40000 டாலர்கள் செலவு பிடித்தது. இந்நிகழ்ச்சி வடபகுதியினரை ஆத்திரமடையச் செய்தது.

### *டிரெட் ஸ்காட் வழக்கு*

மற்றொரு அடிமை டிரெட்ஸ் ஸ்காட் மீது நடந்த வழக்கின் தீர்ப்பு அமெரிக்கர்களை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. டிரட்ஸ் ஸ்காட் மிசௌரியைச் சேர்ந்த ஒரு அடிமை. தனது எஜமானன் எமர்சன் என்பவருடன் இல்லினாய் பகுதிக்கு பிரயாணம் செய்து விஸ்கான்சின் மின்னசோட்டா மாநிலங்களில் தங்கியிருந்து விட்டு மீண்டும் மிசௌரிக்கே திரும்பினான். அடிமைமுறை எதிர்ப்பாளர்களின் ஆதரவுடன் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தான். அடிமைமுறை இல்லாத பகுதிகளில் பல காலம் குடியிருந்ததால் மிசௌரி

சமரசத்தின்படி தான் சுதந்திரம் பெற்று வாழ உரிமையுண்டு என வழக்குத் தொடுக்கப்பட்டது. இதனை விசாரித்த உச்சநீதிமன்றம் தனது தீர்ப்பில் 'நீக்ரோக்கள் அமெரிக்க ஐக்கிய நாட்டின் உரிமையைப் பெற முடியாது. எனவே டிரெட் ஸ்காட் வழக்குத் தொடுக்கவே உரிமையற்றவன்' என தீர்ப்பு கூறப்பட்டது. நீதிபதி மேரிலாந்தைச் சேர்ந்த ரோஜர் பிடேனி ஆவார். இதன்படி அடிமைகள் ஒரு முதலாளியின் சொத்தாகக் கருதப்பட்டனர். இது ஒரு சர்ச்சையை உருவாக்கி விட்டது. வட, தென் மாநிலங்களில் மீண்டும் அடிமைகள் பிரச்சனை எழுந்தன. விவாதங்கள் நடந்தன. இதில் குடியரசுக் கட்சியைச் சேர்ந்த ஆபிரகாம் லிங்கனும், ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த ஸ்டீபன் டக்ளசும் நடத்திய விவாதங்கள் புகழ் பெற்றவையாகும்.

### *லிங்கன் – டக்ளஸ் விவாதங்கள் 1858*

1858ஆம் ஆண்டு இல்லினாய்ஸ் செனட் உறுப்பினர் தேர்தலில் லிங்கனுக்கு எதிராக ஜனநாயகக் கட்சியின் சார்பாக ஸ்டீபன் டக்ளஸ் நிறுத்தப்பட்டார். அடிமைமுறை பற்றி ஏழு மாவட்டங்களில் விவாதங்கள் நடைபெற்றன. "ஒரு வீடு பிளவுபட்டு இருந்தால் நிலைத்து நிற்க முடியாது. பாதி அடிமையாகவும், பாதி சுதந்திரமாகவும் உள்ள இந்த ஆட்சி நின்று நிலைக்காது. ஒன்று எல்லோரும் அடிமைகளாக இருக்க வேண்டும் அல்லது எல்லோரும் சுதந்திரமாக இருக்க வேண்டும்" என்ற லிங்கனது பேச்சு மக்களின் சிந்தனையைத் தூண்டுவதாக இருந்தது. இறுதியில் அடிமைமுறை ஒழிக்கப்பட வேண்டிய ஒன்று என்று கூறினார். டக்ளஸோ, மக்களிடம் வாக்கெடுப்பு நடத்தி அடிமைமுறையை முடிவு செய்யலாம் என்றார். லிங்கன் குடியரசுக் கட்சியின் சிறந்த பேச்சாளர் ஆனார்.

### *ஜான் பிரவுனின் தாக்குதல் – 1859*

ஜான் பிரவுன் கனெக்டிகட் மாநிலத்தைச் சேர்ந்தவர். அடிமைமுறையை அகற்ற வேண்டும் என்ற இலட்சியம்

கொண்டவர். ஒரு புரட்சி மூலம் தென்மாநில அடிமைகளை விடுவிக்க திட்டமிட்டார். 1859, அக்டோபர் 19இல் வர்ஜீனியாவிலுள்ள ஹார்ப்பர்ஸ் பெர்ரி என்ற இடத்தில் உள்ள அரசாங்க வெடிமருந்து கிடங்கை சூறையாடினார். ஆனால் இவரை கைது செய்து தூக்கிலிட்டனர். வடமாநிலத்தினரின் தூண்டுதலினால்தான் இவர் இவ்வாறு நடந்து கொண்டார் என தென்மாநிலத்தினர் ஆத்திரமடைந்தனர்.

### *1860ஆம் வருட தேர்தல்*

1860ஆம் ஆண்டு ஜனாதிபதி தேர்தலில் குடியரசுக்கட்சியின் சார்பாக ஆப்ரகாம் லிங்கன் நிறுத்தப்பட்டார். தென்பகுதி ஜனநாயகக் கட்சியின் சார்பாக ஜான்பிரிக்கின்ட்ஜியும், வடபகுதி ஜனநாயகக் கட்சியின் சார்பாக டக்ளசும் போட்டியிட்டனர். நாடு முழுவதும் அடிமைமுறையை அகற்றி, தென்மாநிலங்களின் பிரிவு மனப்பான்மையை நீக்கி ஒற்றுமை ஏற்படுத்தப் போவதாக குடியரசுக் கட்சியின் சார்பாகக் கூறப்பட்டது.

தேர்தலில் லிங்கன் வெற்றிபெற்றால் தென்மாநிலங்கள் கூட்டாட்சியிலிருந்து பிரிந்து சென்றுவிட முடிவு செய்தனர். லிங்கன் வெற்றி பெற்றார். 1860, டிசம்பர் 20ஆம் தேதி தென்கரோலினா கூட்டாட்சியிலிருந்து பிரிந்து செல்ல முடிவு செய்தது. 1861, பிப்ரவரிக்குள் டெக்ஸாஸ், லூசியானா, மிசிசிபி, அலபாமா, புளோரிடா, ஜார்ஜியா, அர்கான்சாஸ், டென்னசி, வடகரோலினா, வர்ஜீனியா ஆகிய மாநிலங்கள் கூட்டாட்சியை விட்டு பிரிந்து செல்வதாக அறிவித்தன.

இந்தப் பதினோரு மாநிலங்கள் அமெரிக்க கூட்டமைப்பு நாடுகள் (Confederation of States of America) என்ற அமைப்பை உருவாக்கின. ரிச்மாண்ட் தலைநகராகவும், ஜெபர்சன்டேவிஸ் தலைவராகவும், அலக்ஸாந்தர் ஸ்டீபன் துணைத்தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

அமைதியை விரும்பும் புக்கனான் பிரிந்து செல்லும் மாநிலங்களை வன்முறையால் தடுக்க முடியாது என்று கூறினார்.

இறுதி முயற்சியாக கெண்டகியைச் சேர்ந்த செனட்டர் ஜான் கிரிட்டன்டன் மேற்கொண்ட சமரச முயற்சிகள் தோல்வியின் முடிந்தன. லிங்கன் 1861, மார்ச் 4ஆம் தேதி பதவியேற்றார். தென்மாநிலங்களில் உள்ள அரசாங்கக் கோட்டைகள், அலுவலகங்கள், கூட்டமைப்பினர் கைப்பற்றிக் கொண்டனர். சம்டர் கோட்டையைக் கைப்பற்ற தென்கரோலினா முயற்சித்தது. தளபதி ஆண்டர்சனுக்கு போர்க்கருவிகளை லிங்கன் அனுப்பி வைத்தார். தென்கை தளபதி ஜார்ஜ்ஜேம்ஸ் 1861, ஏப்ரல் 12இல் கோட்டையைத் தாக்கினார். ஏப்ரல் 14இல் ஆண்டர்சன் சரணடைந்தார். ஜனாதிபதி லிங்கன் படையைத் திரட்டினார். ஆக உள்நாட்டுப்போரை தென்மாநிலங்கள் துவக்கின. கூட்டாட்சியைக் காப்பது லிங்கனின் கடமையானது. போர் நான்கு ஆண்டு காலம் நடைபெற்றது. ஆறு இலட்சம் அமெரிக்க பிரஜைகள் பலியாயினர். எல்லோரும் இளைஞர்கள். போரினால் கூட்டாட்சி காப்பாற்றப்பட்டது. ஆனால் அதற்குப்பின் பல பிரச்சனைகளை தோற்றுவித்தது. இருபது ஆண்டு கால ஊழல் ஆட்சி தொடர்ந்தது.

போர் தொடங்கிய போது வடபகுதியில் 20 மில்லியன் மக்களும், தென்பகுதியில் 9 மில்லியன் மக்களும் இருந்தனர். இதில் 3.5 மில்லியன் நீக்ரோக்கள் இருந்தனர். வடபகுதி முழுவதும் ரயில்வே மூலம் இணைக்கப்பட்டிருந்தது. தென்பகுதி வடபகுதியில் உற்பத்திப் பொருள்களை நம்பித்தான் இருந்தது. வடக்கே திறமையான தலைவர் ஆப்ரகாம் லிங்கன் இருந்தார். தென்பகுதித் தலைவர் ஜெபர்சன் டேவிசுக்கு லிங்கனின் திறமை கிடையாது. வடபகுதியினர்தான் வெற்றிபெற முடியும் என்பது தெளிவான விசயம்.

தென்பகுதி படையினருக்கு ராபர்ட் லீ தலைமை ஏற்றார். மற்றொரு தளபதி ஸ்டோன்வால் ஜாக்சன் உடனிருந்தார். கூட்டாட்சிப் படைகளுக்கு யுனைசைஸ் கிராண்ட் தலைமையேற்றார். வடக்கே பென்சில்வேனியாவில் இருந்து தெற்கே நியுஆர்லியன்ஸ் வரையிலும், கிழக்கே அட்லாண்டிக் கடற்கரையிலிருந்து மேற்கே கான்சாஸ் வரையிலும் போர்நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

வடமாநில கூட்டாட்சிப் படைகள் ரிச்மாண்ட் நகரைத் தாக்கியது. புல்ரன் என்ற இடத்தில் நடந்த போரில் தென்கை படைகள் வெற்றி பெற்றன. தென்கை தளபதி லீ வடக்கு நோக்கி வாஷிங்டன் நகரை தாக்க விரைந்தார். அச்சமயம் அவரை மேரிலாந்தில் இடைமறித்து கூட்டாட்சிப்படை தளபதி மெக்லலன் வெற்றி பெற்றார். ஆண்டீட்டம் என்ற இடத்தில் வெற்றி கண்டார்.

கடற்பகுதி; கரோலினாவிலிருந்து புளோரிடா வரை முற்றுகையிடும்படி லிங்கன் ஆணையிட்டார். தென்மாநில மெர்ரிமாக் என்ற கப்பலை வடமாநில மானிட்டர் கப்பல் தாக்கியது. வெற்றிபெற்றது.

1863இல் மேற்குப்பகுதியில், யுலைசெஸ் கிராண்ட் மிசிசிபி சமவெளியில் உள்ள டென்னசி பகுதியைக் கைப்பற்றினார். விக்ஸ்பர்க், நியுஆர்லியன்ஸ் கைப்பற்றப்பட்டது. மேற்கு மாநிலங்கள் தென்கை கூட்டமைப்புடன் கொண்ட தொடர்பு துண்டிக்கப்பட்டது.

அடிமைகளின் விடுதலைப் பிரகடனத்தை ஆப்ரகாம் லிங்கன் 1863, ஜனவரி 1இல் வெளியிட்டார். அடிமைகள் அனைவரும் சுதந்திரம் பெற்றவர்களாக அறிவிக்கப்பட்டனர். 1863, ஜூலையில் கெட்டிஸ்பர்க் என்ற இடத்தில் நடந்த போரில் லீ தோல்வியடைந்தார். நவம்பரில் கெட்டிஸ்பர்க் போரில் உயிர்நீத்தவர்களுக்கு நினைவுச்சின்னம் திறந்து வைத்து லிங்கன் உரையாற்றினார். அதுவே புகழ்பெற்ற

கெட்டிஸ்பர்க் உரையாகும். இவ்வுரையில்தான் மக்களாட்சி பற்றி அவர் கூறிய கருத்துக்கள் இன்றளவும் உலகம் முழுவதும் போற்றப்படுகின்றது. "மக்களால், மக்களுக்காக, அமையும் மக்களாட்சி அரசு உலகில் நிலைக்க வேண்டும்" என எடுத்துரைத்தார்.

யுலைசெஸ் கிராண்ட் 1864இல் வில்டர்னஸ், ஸ்பாட்சில்வேனியா, சட்டனூகா ஆகிய இடங்களில் நடந்த போரில் வெற்றிபெற்றார். 1865, பிப்ரவரியில் சார்லஸ்டன் கைப்பற்றப்பட்டது. 1865, ஏப்ரலில் பீட்டர்ஸ்பர்க், ரிச்மாண்ட்டை விட்டு லீ வெளியேறினார். ஏப்ரல் 9ஆம் தேதி அப்பாமட்டாக்ஸ் என்ற இடத்தில் கிராண்ட்டிடம் லீ சரணடைந்தார். மே, 26இல் போர் முடிவுற்றது.

## விளைவுகள்

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஒற்றுமை பாதுகாக்கப்பட்டது. கூட்டாட்சியின் இறைமை நிலைநாட்டப்பட்டது.

நீக்ரோ அடிமைகள் விடுதலை செய்யப்பட்டனர்.

தென்பகுதி பண்ணை நிலங்கள் பாழாயின. ரயில்பாதைகள், நகரங்கள் நாசமாக்கப்பட்டன. இதை புனரமைப்பு செய்ய பொருட்செலவு ஏற்பட்டது.

அரசியலில் வடபகுதி செல்வாக்குப் பெற்றது. போர் நிவாரணப்பணிகள் செய்யவேண்டியிருந்ததால் தொழிற்சாலைகள் உற்பத்திப் பெருக்கம் ஏற்படலாயிற்று.

உள்நாட்டுப் போர் வடக்கு-தெற்கு மாநிலங்கள்



முழுமை பெற்ற அமெரிக்கா மாநிலங்கள்



வெள்ளி வேட்டைக்குச் செல்லும் கூட்டம்

*Drawn by the discovery of silver mines in the Rocky Mountains in the 1870's, thousands of pioneers traveled westward. Here a caravan struggles up a perilous log road to the mining town of Leadville, Colorado.*



# அலகு 2.5
# ஆப்ரகாம் லிங்கன் 1861-1865

"ஒரு நாடு தனக்குள்ளே பிளவுபட்டால் நிலைத்து நிற்க முடியாது. இந்த அரசாங்கம் பாதி அடிமைமுறை உடையதாகவும், பாதி சுதந்திரம் பெற்றதாகவும் எப்போதும் இருக்க முடியாது என்று நம்புகிறேன்".

ஆப்ரகாம் லிங்கன்.

அமெரிக்க வரலாற்றில் ஆப்ரகாம் லிங்கனின் ஆட்சிக்காலம் மிக முக்கியமான காலகட்டமாகும். நாட்டின் ஐக்கியத்தைக் காப்பாற்றிய பெருமை அவருக்கு உண்டு. அதற்காக தனது உயிரை பணயம் வைத்தார். Log Cabin எனப்படும் மர வீட்டில் பிறந்த இவர் தனது திறமையினாலும், உழைப்பினாலும் ஒரு உயர்ந்த நிலைக்கு உயர்ந்தவர். இவரது பேச்சுக்கள், எழுத்துக்கள் என்றென்றும் மனித இனத்திற்கு பயன்படக்கூடியதாக உள்ளது. இவர் அமெரிக்கத் தலைவர் மட்டுமல்ல. ஒரு உலகத் தலைவர் ஆவார்.

1809ஆம் ஆண்டு கெண்டகியில் பிறந்தவர். இவரது தந்தை தாமஸ் லிங்கன் ஒரு எல்லைப்புறவாசி. லிங்கன் பள்ளிக்கல்வியை ஒழுங்காக கற்க முடியவில்லை. இவரது பெற்றோர் முதலில் இண்டியானாவுக்கும், பின்னர் இல்லினாய்ஸ் மாநிலத்திற்கும் குடிபெயர்ந்தனர். முதலில் ஒரு கடையில் குமாஸ்தாவாக பணிபுரிந்தார். பின்னர் தானே ஒரு கடை நடத்தினார். 1832இல் செவ்விந்தியர்களுக்கு எதிரான போரில் கேப்டனாக பணியாற்றினார். சர்வேயராகவும், போஸ்ட்மாஸ்டராகவும் பணிபுரிந்தார். பகுதிநேரம் மாணவராக சட்டம் பயின்றார். பின்னர் வழக்கறிஞர் ஆனார்.

லிங்கன் சுயநலமற்றவர், நேர்மையானவர், புத்தி கூர்மையானவர். சிறந்த பேச்சாளர். எப்போதும் பழங்கதைகளைக் கூறி மக்களை கவரும் ஆற்றல் உடையவர். சுதந்திரத்தின் மீது அளவிலா பற்றுதலும், மற்றவர்களின் கருத்துக்களை ஏற்றுக்கொள்வதில் பொறுமையும் உடையவர். வெள்ளையரானாலும் சரி, கறுப்பரானாலும் சரி யாருக்கு அநீதி இழைக்கப்பட்டாலும் அதை பொறுத்துக் கொள்ள மாட்டார். அதனால்தான் இவர் அடிமைமுறையை எதிர்த்தார். அடிமைகள் சுரண்டப்படுவதையும் கண்டித்தார். இவர் ஒரு அடிமைஒழிப்பு வாதி அல்லர். ஆனால் நீக்ரோக்களின் சமநிலையை ஏற்றுக்கொண்டார். தென்மாநிலங்களின் அடிமைமுறைபற்றி தாங்களே முடிவுசெய்து கொள்ளலாம் என கருத்துத் தெரிவித்தார். ஆனால் போரின்போது இவரது கருத்து மாறியது. கூட்டாட்சி ஐக்கியத்தை காப்பாற்ற வேண்டும் என நினைத்தபோது தனது கருத்துக்கள் மாறியது. அடிமைகளை விடுவித்து கூட்டாட்சி ஐக்கியத்தை பாதுகாக்க முடியும் என்று நம்பினார்.

லிங்கனின் அரசியல் வாழ்க்கை முதன்முதலில் இல்லினாய் மாநில சட்டமன்ற விக்கட்சியின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதிலிருந்து ஆரம்பமாகிறது. 1834 முதல் எட்டு ஆண்டுகள் அப்பதவி வகித்தார். பின்னர் 1846ஆம் ஆண்டு கூட்டாட்சி சட்டமன்றம் காங்கிரஸ் சபைக்கு தேர்ந்தெடுக்கப்பட்டார். இக்காலகட்டத்தில் அடிமை முறையை அகற்ற வேண்டும் என்று கருத்து தெரிவித்தார். இக்கருத்தை வலியுறுத்தும் குடியரசுக் கட்சியில் தன்னை இணைத்துக் கொண்டார். 1858இல் இல்லினாய் மாநில செனட் உறுப்பினர் பதவிக்கு டக்ளசை எதிர்த்து போட்டியிட்டார். டக்ளசுடன் மேடைகளில் விவாதங்களில் ஈடுபட்டார். இந்த விவாதங்களில் அவரது பேச்சாற்றல் இவரை ஒரு தேசியத் தலைவராக்கியது. எனவே 1860ஆம் ஆண்டு ஜனாதிபதி தேர்தலில் வெற்றி பெற்றார். 1864ஆம் ஆண்டு தேர்தலிலும் வென்றார்.

ஆப்ரகாம் லிங்கன் 1861இல் பதவி ஏற்கும் முன்பே 1860 டிசம்பர் மாதம் தென்கரோலினா மாநிலத்தின் தலைமையில் தென்மாநிலங்கள் கூட்டாட்சியிலிருந்து பிரிந்து சென்றன. நியுயார்க்கைச் சேர்ந்த வில்லியம் சீவார்ட்டை தனது வெளியுறவுச் செயலராக நியமித்தார். தென்மாநிலங்களுக்கு அவகாசம் கொடுத்தும் பிரிந்துசென்ற அம்மாநிலங்கள் கூட்டாட்சியை ஏற்க மறுத்தன. எனவே 1863 ஜனவரி முதல் தேதி அடிமைகள் விடுதலைப் பிரகடனத்தை வெளியிட்டார். தென்பகுதி அடிமைகள் விடுதலை பெற்றனர். அவர்கள் கூட்டாட்சிப் படைகளுக்கு உதவியும் புரிந்தனர்.

"ஒரு வீடு தனக்குள்ளே பிளவுபட்டால் நிலைத்து நிற்க முடியாது. இந்த அரசாங்கம் பாதி அடிமைமுறை உடையதாகவும், பாதி சுதந்திரம் பெற்றதாகவும் எப்போதும் இருக்க முடியாது என்று நம்புகிறேன்" என்று 1858இல் அவர் கூறியது கூட்டாட்சியை எப்படியும் காப்பாற்றியாக வேண்டும் என்ற எண்ணத்தில்தான். லிங்கன் அடிமை ஒழிப்பு சம்மந்தமாக விரைந்து செயலாற்றவில்லை என நியுயார்க் டிரிப்யூனியன் பத்திரிக்கையின் ஆசிரியர் ஹோராஸ் கிரீலி (Horace Greely) பத்திரிக்கையில் எழுதியபோது அவருக்குப் பதில் எழுதினார் லிங்கன்.

"என்னால் ஒரு அடிமையைக் கூட விடுவிக்காமல் கூட்டாட்சியை காப்பாற்ற முடியும். அதை நான் செய்யமாட்டேன். எல்லா அடிமைகளையும் விடுதலை செய்துவிட்டு கூட்டாட்சியை காப்பாற்ற முடியும். இதை என்னால் செய்ய முடியும். பலரை விடுதலை செய்துவிட்டு மீதி பேரை அப்படியே விட்டுவிடலாம். இதையும் என்னால் செய்ய முடியும்" என்று லிங்கன் கூறியது அவரது உறுதித்தன்மையை எடுத்துக்காட்டுவதாக உள்ளது. அவர் இரண்டாம்முறை பதவி ஏற்கும்போது கூறிய கருத்துக்கள். "யாரிடமும் துவேஷம் வேண்டாம். அனைவரிடத்தும் அறவழியில் நடப்போம்" (With Malice toward none, with

charity for all) என்ற அவரது கருத்து அவரது சகிப்புத்தன்மையை வெளிப்படுத்துவதாக உள்ளது. அதேபோல் மக்களாட்சியின் மகத்துவத்தை எடுத்துக் கூறும்போது 'அது மக்களுடைய மக்களால், மக்களுக்காக அமைக்கப்படும் ஆட்சி' ("a government of the people, by the people as for the people") எனக் கூறுவது உலகம் முழுமைக்கும் கூறப்பட்டுள்ள உண்மையாகும்.

உள்நாட்டுப்போர் தவிர்க்க முடியாததாகி விட்டது. அமெரிக்க ஐக்கியத்தைக் காக்க இறுதி வரை முயற்சித்தார். போரின் மத்தியில் அடிமை ஒழிப்பு பிரகடனத்தை வெளியிட்டு தென்பகுதி நீக்ரோ அடிமைகள் அனைவரையும் விடுதலை செய்தார். இறுதியில் கூட்டாட்சிக்கே வெற்றி. அமெரிக்க ஐக்கியத்தைக் காப்பாற்றி விட்டார். அமெரிக்க வரலாற்றில் லிங்கன் அழியாப் புகழ் பெற்றார்.

போரில் தோல்வியடைந்த தென்பகுதி பல வழிகளிலும் சீரழிந்தது. யாரிடமும் காழ்ப்புணர்ச்சி காட்டாமல் பரிவுடன் நடந்தார். தென் மாநிலங்களை புனரமைப்பதற்கு தனது திட்டத்தை வெளிப்படுத்தினார். அதுவே அவரது 10 சதவீத திட்டமாகும். 1863, டிசம்பரில் பொது மன்னிப்பு மற்றும் புனரமைப்பு பேரறிக்கையினை வெளியிட்டார். 1860ஆம் வருட வாக்காளர் பட்டியலில் உள்ள வாக்காளர்களில் பத்து சதவீதம் பேர் கூட்டாட்சிக்கு விசுவாசமாக நடந்து கொள்வதாக வாக்குறுதி அளித்ததால் அந்த மாநிலங்களில் புதிய அரசு நிறுவப்படும், கூட்டாட்சியுடன் இணைத்துக் கொள்ளப்படும் என்பதே பத்து சதவீத திட்டமாகும்.

லிங்கன் ஒரு வெற்றி பெற்றவர் போல் நடந்து கொள்ளவில்லை. ராபர்ட் லீ சரணடைந்த இரண்டு நாட்களுக்குப் பிறகு லிங்கன் பொதுமக்களிடம் உரையாற்றியதுதான் அவரது கடைசிப்பேச்சாக இருந்தது. ஏப்ரல் 13, வியாழக்கிழமை இரவு லீ சரணடைந்ததைக்

கொண்டாட வாஷிங்டன் விழாக்கோலம் பூண்டிருந்தது. ஏப்ரல் 14இல் தனது கடைசி அமைச்சரவை கூட்டத்தைக் கூட்டினார். கடல் முற்றுகையை எடுத்துவிட முடிவு செய்யப்பட்டது. அமைதிவழியில் மனதைச் செலுத்தி புனரமைப்புப் பணிகளை மேற்கொள்ள வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டார். குடியரசு கட்சியைச் சேர்ந்த தீவிரவாதிகள் தென்பகுதியை தண்டித்து ஆக வேண்டும் என்ற எண்ணத்தில் இருந்தனர். குடியரசுக் கட்சியின் முக்கியத் தலைவர்கள் தேடியஸ் ஸ்டீவன்சும், பெஞ்சமின் வேடும் பத்து சதவீத திட்டத்திற்கு மாற்றாக வேறு ஒரு சட்டத்தைக் கொண்டு வந்தனர். இதற்கு லிங்கன் தனது மறுப்பாணையைப் பயன்படுத்தி ஒப்புதல் அளிக்க மறுத்து விட்டார். ஏப்ரல் 14 இரவு தனது குடும்பத்தாருடன் வாஷிங்டன் நகரில் உள்ள போர்டு நாடக அரங்கில் அமெரிக்கன் கஸின் நாடகம் பார்த்துக் கொண்டிருக்கும் போது ஜான்வில்க்ஸ் பூத் என்ற வெறியனால் சுட்டுக் கொல்லப்பட்டார். மனிதகுலத்திற்கு, நல்வாழ்விற்கு உழைத்த ஒரு மாபெரும் மனிதர் கொல்லப்பட்டு விட்டார். உலகம் ஒரு மாபெரும் மனிதரை இழந்துவிட்டது.

இவரது மனைவி பெயர் மேரி. இவர் மறைந்த போது அவருடைய இரண்டு குழந்தைகள் ராபர்ட் 21 வயது, டேட் 12 வயது உடையவர்களாக இருந்தனர். ராபர்ட் அமெரிக்க ராணுவத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தார்.

லிங்கன் தான் ஒரு ஜனாதிபதி என்று எப்போதும் நடந்து கொண்டதில்லை. எந்த நேரமும் யாரும் அவரை சுலபமாகச் சந்திக்கலாம். வெள்ளை மாளிகையில் இருந்த கடைசிச் சிப்பந்தியின் பெயர் வரைக்கும் அவருக்குத் தெரியும். தமது வசீகரம் மிக்க எளிமையாலும், புத்திக்கூர்மையாலும் அவர் மக்களை கவர்ந்திருந்தார். குறிப்பாக அமெரிக்க நீக்ரோ சமூகத்தின் நடமாடும் கடவுளாகவே அவர் இருந்தார்.

# அலகு 2.6

# புனரமைப்புத் திட்டங்கள் 1865-1877

## *ஆண்ட்ரு ஜான்சன்*

ஆப்ரகாம் லிங்கன் மறைந்தவுடன் துணைஜனாதிபதி ஆண்ட்ரூ ஜான்சன் ஜனாதிபதியாக பதவிப்பிரமாணம் செய்து வைக்கப்பட்டார். இவருக்கு மக்கள் ஆதரவு கிடையாது. இவர் பதவியேற்ற போது காங்கிரஸ் கூடவில்லை. 1864, டிசம்பரில் தான் சபை கூடுவதாக இருந்தது. அதற்குள் லிங்கனின் பத்து சதவீத திட்டதை அமல்படுத்த நினைத்தார். இவர் தென்பகுதியைச் சேர்ந்த டென்னஸி மாநிலத்தவர். இவர் சொந்தமாக அடிமைகளை வைத்திருந்தார். வெள்ளையர்களையும், கறுப்பர்களையும் என்றுமே இவர் சமமாக நினைத்ததும் இல்லை. நீக்ரோ பிரச்சினையில் அவ்வளவு ஆர்வம் காட்டியதும் இல்லை. ஆனால் லிங்கன் மரணத்தினால் இவர் துணை ஜனாதிபதியான பின்னர் லிங்கனின் திட்டத்தை நிறைவேற்ற நினைத்தார். இவர் ஏற்கனவே ஜனநாயகக் கட்சியிலிருந்து குடியரசுக் கட்சிக்கு வந்தவர். இவருக்கு இருகட்சியிலும் செல்வாக்கு இல்லை.

குடியரசுக் கட்சிக்கு காங்கிரசில் நல்ல பெரும்பான்மை இருந்தது. மேலும் குடியரசுக் கட்சியில் தீவரவாதிகளின் செல்வாக்கு நிறைந்திருந்தது. ஜான்சனின் கொள்கைகளை தடுத்து நிறுத்தி தங்கள் திட்டத்தை நிறைவேற்ற காங்கிரசைப் பயன்படுத்திக் கொண்டனர். தேடியஸ் ஸ்டீவன்ஸ், சார்லஸ் சம்னர் என்ற இரண்டு புகழ் பெற்ற குடியரசு கட்சியின் தலைவர்கள் ஜான்சனின் திட்டத்திற்கு முட்டுக்கட்டை போட்டனர்.

ஜான்சன் பொது மன்னிப்பு அறிக்கை ஒன்றை வெளியிட்டார், தென்மாநில தீவிரவாதத் தலைவர்கள், உயர் அதிகாரிகள், செல்வந்தர்கள் போன்றவர்கள் தவிர ஏனைய அனைவருக்கும் பொது மன்னிப்பு வழங்கப்பட்டது. வாக்குரிமையும் வழங்கப்பட்டது.

லிங்கனின் பத்து சதவீத திட்டப்படி நடந்து கொண்ட வர்ஜினியா, டென்னசி, அர்கான்சாஸ், லூயிசியானா அரசுகளை ஜான்சன் அங்கீகரித்தார். தென்மாநிலங்களில் இராணுவ ஆளுநர்கள் நியமிக்கப்பட்டனர். அந்த மாநிலங்களில் அரசியலமைப்புப் பேரவை உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க தேர்தல் நடத்த திட்டமிடப்ட்டது. கூட்டாட்சிக்கு விசுவாசமாக நடந்து கொள்வதாக வாக்குறுதியளித்த வெள்ளையர்களுக்கு வாக்குரிமை வழங்கப்பட்டது. தென்மாநில சட்டமன்றங்கள் பிரிவினைவாதத் தீர்மானத்தை ரத்து செய்வதற்கும், பதின்மூன்றாவது அரசியலமைப்பு திருத்தத்தை ஏற்றுக்கொள்வதற்கும் சம்மதித்தன. டெக்சாஸைத் தவிர அனைத்து மாநிலங்களும் இந்த ஏற்பாட்டிற்குச் சம்மதித்தன. இதன்படி தேர்தல்கள் நடத்தப்பட்டன. பிரதிநிதிகள் சபைக்கும், செனட் மன்றத்திற்கும் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவர்கள் 1865, டிசம்பரில் சபை கூடியபோது இவர்களை ஏற்றுக்கொள்ள குடியரசுக் கட்சியினர் மறுத்துவிட்டனர். ஜான்சனின் புனரமைப்புத் திட்டங்களையும் ஏற்றுக்கொள்ள மறுத்தனர். ஏனென்றால் உள்நாட்டுப் போரில் தீவீரமாகச் செயல்பட்ட பல தலைவர்கள் புதிதாக கூட்டாட்சி காங்கிரஸ் சபைக்கு உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு இருந்தனர்.

தென்மாநிலங்களில் புதிய சட்டமன்றங்கள் அமைக்கப்பட்டன. ஆட்சி அதிகாரம் வழங்கப்பட்டது. ஆனால் அவர்கள் நீக்ரோக்களை சமமாக நடத்தாமல் சில சட்டங்கள் மூலம் பல கட்டுப்பாடுகளை விதித்தார்கள். இந்தச்

சட்டங்களுக்குக் 'கருப்புச்சட்டங்கள்' எனப் பெயர். நீக்ரோக்கள் உயர்பதவி வகிக்க முடியாது. ஜீரிகளாகப் பணிபுரிய முடியாது. ஆயுதம் வைத்துக் கொள்ளக்கூடாது. வாக்குரிமையையும் பயன்படுத்தக்கூடாது என்பதுதான். மேலும் நீக்ரோக்கள் வேலையில்லாமல் இருக்கக்கூடாது என்றும், அப்படி சோம்பேறியாகத் திரிந்தால் கைது செய்யப்பட்டு மீண்டும் பண்ணைகளுக்கு அடிமைகளாக அனுப்பப்படுவர். இந்த கருப்புச் சட்டங்கள் மறைமுகமாக அடிமைமுறையை கொண்டுவருவதுபோல் இருந்தன.

காங்கிரசில் பெரும்பான்மை பலம் பெற்றுள்ள குடியரசு கட்சியினர் ஜான்சனின் திட்டத்திற்குப் பதிலாக தாங்களே புதிய புனரமைப்புத் திட்டத்தைத் தயாரித்தனர். தேடியஸ் ஸ்டீவன்ஸ் இத்திட்டங்களை தயாரித்தார். நீக்ரோக்களைப் பாதுகாக்க சில திட்டங்கள் கொண்டுவரப்பட்டன. இதற்காக 15 பேர் அடங்கிய குழுவினர் தங்கள் திட்டங்களை தயாரித்து காங்கிரசுக்கு அனுப்பினார்கள். அதை ஜான்சன் ஏற்க மறுத்தார்.

பதினான்காவது அரசியல் சட்டத்திருத்த மசோதா கொண்டு வரப்பட்டது. அதன்மூலம் தென்மாநிலங்கள் இயற்றிய கருப்புச் சட்டங்கள் யாவும் ரத்து செய்யப்பட்டன. நீக்ரோக்களுக்கு வாக்குரிமையை மறுத்தால் அம்மாநிலங்கள் காங்கிரசுக்கு அனுப்பும் பிரதிநிதிகள் குறைக்கப்பட வேண்டியிருக்கும். சிவில் உரிமை சட்டம் ஜான்சனால் மறுக்கப்பட்டது. ஆனால் அது மீண்டும் நிறைவேற்றப்பட்டது. நீதிமன்றங்களில் வெள்ளையர்களையும் நீக்ரோக்களையும் சமமாகக் கருத வேண்டும். எந்த மாநிலமும் குடிமக்களின் உரிமைகளைப் பறிக்கும் வகையில் சட்டங்கள் இயற்றக்கூடாது. தென்மாநிலத் தலைவர்கள் மீண்டும் எந்தப்பணியிலும் நியமிக்கப்படமாட்டார்கள். தென்மாநிலங்களின் கடன்களுக்கு கூட்டாட்சி பொறுப்பேற்காது என்று தெரிவிக்கப்பட்டது.

இந்த பதினான்காவது சட்டத்திருத்தத்தை டென்னசி தவிர பிற தென்மாநிலங்கள் ஏற்றுக்கொள்ள மறுத்தன. டென்னசி 1866இல் கூட்டாட்சியில் சேர்த்துக் கொள்ளப்பட்டது. ஆனால் இத்திருத்தத்திற்கு மொத்தத்தில் நான்கில் மூன்று பங்கு மாநிலங்கள் ஆதரவு தெரிவித்ததால் 1868 முதல் அமுலுக்கு வந்தது.

## *புனரமைப்புச் சட்டங்கள் 1867*

டென்னசி தவிர பிற தென்மாநில அரசுகள் கலைக்கப்பட்டன. ராணுவ ஆளுநர்கள் நியமிக்கப்பட்டனர். அவருக்கு உதவ கூட்டாட்சிப்படையும் அனுப்பப்பட்டது. புதிய வாக்காளர்கள் பட்டியலில் நீக்ரோக்கள் இடம் பெற்றனர். அதன்படி தேர்தல் நடத்த அனுமதிக்கப்படும். 14வது அரசியலமைப்புத் திருத்தத்தை புதிய அரசுகள் ஏற்றுக் கொள்ள வேண்டும் என அறிவிக்கப்பட்டது. இதன்படி ஆறு மாநிலங்கள் வட, தென் கரோலினா, லூசியானா, அலபாமா, புளோரிடா, 1868 ஜூன் மாதத்தில் கூட்டாட்சியில் சேர்த்துக் கொள்ளப்பட்டன. 1870இல் மீதியுள்ள ஜார்ஜியா, மிசிசிபி, டெக்ஸாஸ், வர்ஜீனியாவும் சேர்த்துக் கொள்ளப்பட்டன.

ஜான்சனை பழி வாங்குவதற்காக குடியரசுக் கட்சியினர் இரண்டு சட்டவரைவுகளைக் கொண்டுவந்தனர். செனட்டின் அனுமதியின்றி உயர் அதிகாரிகளை பதவிநீக்கம் செய்ய ஜனாதிபதியால் முடியாதபடி 'பதவிக்காலச் சட்டம்' கொண்டுவரப்பட்டது. மேலும் ஜனாதிபதி தனது இராணுவத்திற்கான ஆணைகளை படைத்தளபதி கிராண்ட் மூலமே அனுப்ப வேண்டும் என்பதற்காக 'படைத்தலைமைச் சட்டம்' கொண்டுவரப்பட்டது.

ஜான்சன் தனக்கு எதிராகச் செயல்பட்ட தளபதி எட்வின் ஸடென்டன் என்பவரை 1867, ஆகஸ்டில் பதவிநீக்கம் செய்தார். இதனை செனட் ஏற்றுக்கொள்ளவில்லை. பதவிக்காலச் சட்டத்தை மீறியதாக ஜான்சன் மீது துரோக

குற்ற விசாரணை நடத்த தீர்மானிக்கப்பட்டது. நீதிபதி சேஸ் விசாரணை நடத்தினார். வாக்கெடுப்பிற்கு விடப்பட்டது. வெற்றிபெற 3 வாக்குகள் தேவை. ஒரு வாக்கு குறைந்ததால் துரோக குற்ற விசாரணை தோல்வியடைந்தது. ஜான்சனின் பதவி தப்பியது. 1868, ஜனாதிபதி தேர்தலில் படைத்தளபதி யுலைசங் கிராண்ட் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## கருப்புப் புனரமைப்பு

தென்மாநிலங்களில் தீவிர குடியரசுக்கட்சியினர் அமைத்த அரசாங்கங்கள் சில புனரமைப்புச் சட்டங்களை கொண்டுவந்தன. அவற்றிற்கு கருப்புப் புனரமைப்புச் சட்டம் எனப்படும். புனரமைப்புப் பணிகளை மேற்கொள்ளவும், மேற்பார்வையிடவும் வடமாநிலங்களிலிருந்து அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். இவர்களை 'கம்பளபையினர்' (Carbet Baggers) என்று தென்மாநிலத்தவர்கள் அழைத்தனர். இவர்கள் பெரும்பாலும் பழைய இராணுவத்தினர். இவர்கள் தென்பகுதியை விரும்பினார்கள் மற்றும் ஆசிரியர்கள், மதபோதகர்கள், நீக்ரோக்களுக்கு கல்வி கற்பிக்க விரும்பியவர்கள், கூட்டாட்சி அதிகாரிகள், வணிகர்கள் அடங்குவர். ஒரு கம்பளப்பையினுள் தங்கள் உடமைகளை அடைத்து சுமந்து கொண்டுவந்த இவர்களை 'கம்பளபையினர்' என அழைத்தனர். மற்றொரு பிரிவு 'ஸ்காலாவாக்ஸ்' (Scalawags) என அழைக்கப்பட்டனர். இவர்கள் புனரமைப்புப் பணிகளில் கம்பளபையினருக்கு ஒத்துழைத்த தென்பகுதி பண்ணையார்கள், வியாபாரிகள் போன்றவர்கள் இவர்களை உதவாக்கரைகள் என்று தென்மாநிலத்தவர்கள் அழைத்தனர். சந்தர்ப்பவாதிகள் பணத்துக்காகவும், பதவிக்காகவும் வடமாநில வெள்ளையர்களுக்கு ஆதரவாக செயல்பட்டவர்கள்.

கார்பெட் பேக்கர்களும், ஸ்காலாவாக்குகளும் தென்மாநில அரசியலில் செல்வாக்கு பெற்றிருந்தனர். இவர்களுக்கு ஆதரவாக 'விடுதலை பெற்றோர்

பணிமனையும்', கூட்டாட்சி சங்கமும் செயல்பட்டனர். போரில் பாதிக்கப்பட்ட விளைநிலங்கள் மீட்கப்பட்டன. இருப்புப் பாதைகள், பாலங்கள், சாலைகள் செப்பனிடப்பட்டன. மருத்துவமனைகளும், பள்ளிக்கூடங்களும் கட்டப்பட்டன. கட்டாயக்கல்வி அமுலாக்கப்பட்டது. பல புதிய தொழில்கள் தொடங்கப்பட்டன.

தென்பகுதி வெள்ளையர்கள் தங்கள் அதிகாரம், ஆதிக்கம் மறைந்தது குறித்து சகித்துக் கொள்ள முடியாமல் தவித்து வந்தனர். வெள்ளை இளைஞர்கள் நீக்ரோக்களை அச்சுறுத்துவதற்காக ரகசியமாக கூ கிளக்ஸ் கிளான் (Ku Kluk Klan) என்ற இயக்கத்தைத் தொடங்கினர். வெள்ளைஉடை தரித்து, முகமூடி அணிந்துகொண்டு கம்பளப் பையினர் தங்கியிருக்கும் முகாம்களைத் தாக்கினர். நீக்ரோக்களை வாக்களிக்க விடாமல் தடுத்தனர். நீக்ரோக்களை அச்சுறுத்தினர். வீடுகள் கொளுத்தப்பட்டன. வன்முறையில் நீக்ரோக்கள் கொள்ளப்பட்டனர். இந்த ரகசிய சங்கத்தை ஒடுக்க இராணுவத்தைப் பயன்படுத்த ஜனாதிபதி அதிகாரம் வழங்கினார். 1872இல் ஜனாதிபதி கிராண்ட் பொது மன்னிப்பு சட்டத்தை வெளியிட்டு சிலரைத் தவிர தென்மாநிலத்தவர் அனைவருக்கும் அரசியல் உரிமைகள் வழங்கப்பட்டன. 1876 தேர்தலில் ஜனநாயகக் கட்சியினர் தென்மாநிலங்களில் மீண்டும் அதிகாரத்தைக் கைப்பற்றினர்.

ஆட்சிக்கு வந்ததும் நீக்ரோக்களை ஒடுக்குவதற்காக 'ஜிம்குரோ சட்டங்கள்' கொண்டுவந்தனர். ஜிம்குரோ என்பது நீக்ரோக்களுக்கு வெள்ளையர்கள் வைத்த பெயராகும். தலைவரி (Pool Tax) கட்டினால்தான் வாக்குரிமை என கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. நீக்ரோக்கள் குடியிருக்க தனி தெருக்களும், பள்ளிகளும் அமைக்கப்பட்டன.

1876 தேர்தலில் ஜனநாயகக் கட்சியினர் சாமுவேல் டில்டென்னை நிறுத்தினார்கள். குடியரசுக்கட்சியினர்

ரூதர்போர்டு ஹேய்ஸ்சை நிறுத்தினார்கள். தேர்வாளர் குழு வாக்குகளில் 185 பெற்றால் வெற்றி பெறலாம். டில்டன் 184, ஹேய்ஸ் 165 பெற்றனர். ஆனால் டல்டன் 2.5 இலட்சம் மக்கள் வாக்குகள் பெற்றார். 20 தேர்வாளர் குழு வாக்குகள் குழப்பத்தில் இருந்தன. 1877இல் இச்சிக்கலைத் தீர்க்க ஒரு குழு அமைக்கப்பட்டது. இக்குழு 20 வாக்குகளையும் ஹேய்ஸ் வெற்றிபெற அளித்தன. இதற்கு சில திரைமறைவு வேலைகள் நடைபெற்றன. அதுவே 1857 சமரசம் ஆகும். வடபகுதி குடியரசுக் கட்சியினர் சமாதானத்தை விரும்பினர். தென்பகுதி ஜனநாயகக் கட்சியினர் வடபகுதி முதலீடுகளை எதிர்பார்த்தனர். எனவே ஜனாதிபதி பதவியை இப்போது குடியரசுக் கட்சியினருக்கு விட்டுக்கொடுத்தனர். கூட்டாட்சிப் படைகள் விலக்கிக் கொள்ளப்பட்டனர். புனரமைப்பு முடிந்தது. மீண்டும் தென்பகுதியில் வெள்ளையர்கள் ஜனநாயகக் கட்சி செல்வாக்குப் பெற்றது. நீக்ரோக்கள் கைவிடப்பட்டனர்.

## *யுலைசெஸ் கிராண்ட் 1869-77*

உள்நாட்டுப்போரின் வெற்றிக்குக் காரணமான கூட்டாட்சி படைகளின் தளபதி கிராண்ட் ஒரு திறமையான தளபதி. ஆனால் மோசமான நிர்வாகி என்று பெயர் எடுத்தார். இவர் அரசியல் விவகாரங்களில் அவ்வளவு அக்கறை காட்டியதில்லை. ஒரே ஒரு தடவைதான் ஜனாதிபதி தேர்தலில் வாக்களித்திருக்கிறார். மனிதர்களை எடைபோடுவதில் திறமையற்றவர். தன்னை புகழ்கிறவர்களை எளிதில் நம்பிவிடுவார். தன்னைச் சுற்றி என நடக்கிறது என்று தெரியாமல் இருப்பார். இவர் குடியரசுக் கட்சியின் பெரும் பணக்காரர்களினால் நியமிக்கப்பட்டவர். எனவே இந்தக் காலகட்டத்தில் தங்களுடைய தொழிற்துறை, பொருளாதாரத்தை வளர்த்துக் கொள்ள விரும்பினார்கள்.

கிராண்ட்டின் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவரது நண்பர்கள் ஊழல் மூலம் பணம் திரட்டலாயினர். ஜேகௌல்ட், ஜிம்பிஸ்க் என்ற இரண்டு பணக்காரர்கள் 1869ஆம் ஆண்டு தங்கத்தை வாங்கி விற்பதில் பெரும் பணம் சேர்த்தனர். கிரிடிட் மொபிலியர் என்ற ஒரு நிறுவனம் யூனியன் பசிபிக் ரயில்பாதை நிறுவன பங்குதாரர்களால் உருவாக்கப்பட்டது. ரயில்பாதைகள் அமைக்கும் பணிணை இந்நிறுவனம் அரசிடம் எடுத்தது. ஆனால் அப்பணியைச் செய்ய கிரிடிட் மொபிலியர் கம்பெனிக்கு வழங்கினார். தங்களுக்குள்ளே பணத்தை எடுத்துக்கொண்டு யூனியன் பசிபிக் ரயில்வே கம்பெனியை திவாலாக்கி விட்டனர். ஆனால் கிரிடிட் மொபிலியர் கம்பெனியோ 23 மில்லியன் டாலர்கள் லாபம் சம்பாதித்தது. இதற்காக காங்கிரசின் பிரதிநிதிகள், அரசு அதிகாரிகள் அனைவருக்கும் கையூட்டு வழங்கப்பட்டது கண்டறியப்பட்டது. இவ்விசயத்தில் துணை ஜனாதிபதி கால்பாக்ஸ் சம்மந்தப்பட்டிருந்தது தெரியவந்தது.

இரண்டாம்முறையும் குடியரசுக்கட்சியின் பெரும் செல்வந்தர்களின் உதவியினால் கிராண்ட் ஜனாதிபதியானார். இம்முறையும் அவரது நண்பர்கள் ஊழலில் திளைத்தனர். 1873இல் பாராளுமன்ற உறுப்பினர்களுக்கும், ஜனாதிபதிக்கும் சம்பள உயர்வு தரும் மசோதாவை நிறைவேற்றினார். இந்த சம்பள உயர்வையும் பின்தேதியிட்டு எடுப்பது என்பதை பொதுமக்களால் சகித்துக்கொள்ள முடியவில்லை. இதனை திரும்பப்பெற வலியுறுத்தி வெற்றி பெற்றனர்.

இருந்தபோதும் ஊழல்கள் வளர்ந்து கொண்டேயிருந்தன. ட்வீடு ரிங் நிறுவனத்தின் தலைவர் 100 மில்லியன் டாலர்கள் நியுயார்க் நகரில் கொள்ளையடித்துச் சென்றுவிட்டு ஐரோப்பாவிற்குத் தப்பிச்சென்று விட்டார். சில நேர்மையான அரசியல்வாதிகளால் இந்த ஊழல்கள் வெளிக்கொணரப்பட்டன. இப்படி நியாயமாக நடந்து கொண்டதற்காக பதவியிழந்தவர் நிதித்துறை செயலர்

பென்ஜமின் பிரிஸ்டோ ஆவார். விஸ்கிக்கு தீர்வை வரி செலுத்தாமல் கோடிக்கணக்கான டாலர்கள் சுருட்டப்பட்டன. இதனை விசாரிக்க குழு அமைத்து விசாரித்த போது கிராண்டின் தனிச்செயலர் பாப்காக் சம்மந்தப்பட்டிருந்தது தெரியவந்தது. அதேபோல் படைத்துறைச் செயலர் பெல்நாப் சிவப்பிந்தியர் வாழும் ஒதுக்கப்பட்ட இடங்களை வர்த்தகம் செய்ய சிலருக்கு அனுமதியளித்திருந்தார்.

வெளியுறவுச் செயலர் ஹாமில்டன்பிஸ் கியுபாவுடன் ஒரு மோதல் ஏற்படுவதை தவிர்த்தார். அதேபோல் இங்கிலாந்துடன் சுமூகமாக பிரச்சனையைத் தீர்த்தார். அமெரிக்காவிலிருந்து கொண்டு கனடா மீது தாக்குதல் நடத்திய ஐரீஸ் தேசியவாத குழுவினரின் நடவடிக்கைகளினால் இங்கிலாந்து அதிருப்தி கொண்டிருந்தது. உள்நாட்டுப் போரின்போது தென்பகுதியினர் சில தனியார் கப்பல்களை பிரிட்டனிடமிருந்து பெற்று தாக்குதல் நடத்தியதில் ஏற்பட்ட சேதங்களுக்கு நஷ்டஈடு தருவது தொடர்பாக வாஷிங்டனில் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது. இரண்டு நாடுகளும் ஜெனிவாவில் உள்ள ஒரு நடுவர் குழு விசாரணைக்குச் சம்மதித்தனர். இதில் 15 மில்லியன் டாலர்கள் அமெரிக்காவிற்கு நஷ்டஈடாக இங்கிலாந்து தர வேண்டும் என தீர்ப்பு வழங்கப்பட்டது. பிரிட்டிஷ் பிரதமர் கிளாட்ஸ்டோன் இதனை ஏற்றுக் கொண்டார். வெளிவிவகாரத்துறையில் இப்படி சில வெற்றிகள் கிராண்ட்டின் ஆட்சிக்காலத்தில் ஏற்பட்டன.

# அலகு 3

3.1. வேளாண்மைப் புரட்சி

3.2. விவசாயிகள் புரட்சி

3.3. தொழில் வளர்ச்சி

3.4. தொழிலாளர் நல இயக்கங்கள்

3.5. 1877 முதல் 1897 வரை அரசியல் நிலவரம்

## அலகு 3.1

# வேளாண்மைப் புரட்சி

தொழிற்புரட்சியும், வேளாண்மைப் புரட்சியும் ஒன்றையொன்று சார்ந்துதான் இருக்கின்றது. இயந்திரங்களும், ரயில்பாதைகளும் இல்லாமல் வேளாண்மை புரட்சி சாத்தியமில்லை. அதேபோல் நகரத்தின் சேமிப்பு கிடங்குகளில் உணவு தானியங்கள் நிரப்பப்படவில்லை யென்றால் தொழிற்புரட்சியும் சாத்தியமில்லை.

ஆவன் நெவின்ஸ் மற்றும் H.S.கொம்மகெர் - P.328.

வேளாண்மையில் உற்பத்தி பெருகாமல் தொழில்வளர்ச்சியோ, நகர நாகரிகமோ வளர்ச்சியடைவதில்லை. ஆனால் எப்போதும் இல்லாத அளவு இப்பொழுது விவசாயிகள் அதிக உற்பத்தி செய்தும் அவர்களுக்குக் கிடைத்ததோ மிகச் சொற்பமே.

ரிச்சர்ட்கரண்ட்.

உள்நாட்டுப் போரின் விளைவாக விவசாயத்திலும், தொழிற்துறையிலும் மாபெரும் புரட்சி ஏற்பட்டது. வேளாண்மையில் புதுமுறைகள் புகுத்தப்பட்டு உற்பத்தி பெருகியது. 1860-1910 முடிய உள்ள காலங்களில் விவசாயப் புரட்சியினால் விளைச்சல் அதிகமாகியது. 1860இல் பண்ணைகளின் எண்ணிக்கை 20 இலட்சங்கள் ஆகும். 1910இல் 60 இலட்சங்களாக உயர்ந்தது. 50 கோடி ஏக்கர்களுக்குமேல் புதுநிலம் சாகுபடிக்குக்

கொண்டுவரப்பட்டது. அப்புது நிலப்பரப்பு மேற்கு ஐரோப்பாவின் பரப்பளவிற்குச் சமமாகும்.

உள்நாட்டுப் போரினால் தென்பகுதி சீரழிந்தது. அதற்குப் பதிலாக மேற்குப்பகுதி விரிவடைந்தது. மேற்குநோக்கிப் புறப்பட்டவர்கள் கூட்டம் பெருகியது. தென்பகுதியின் விவசாயப் பொருளாதாரத்தின் உயிர்நாடியாக விளங்கிய நீக்ரோ அடிமைகள் விடுதலை செய்யப்பட்டனர். இனி இவர்கள் பண்ணை முதலாளிகளிடம் பணியாற்ற வேண்டியதில்லை. சுதந்திரம் வழங்கப்பட்டது. இந்தச் சுதந்திரம் அவர்களுக்கு ஒரு நீண்ட விடுமுறையாகத் திகழ்ந்தது.

வேளாண்மை வளர்ச்சிக்காக கூட்டாட்சி அரசாங்கம் ஒரு தனி துறையை 1862இல் உருவாக்கியது. அமைச்சரவையில் காபினட் அந்தஸ்து 1889ஆம் ஆண்டு வழங்கப்பட்டது. 1868ஆம் ஆண்டு (Morrill Land Grant Act)-ன் படி வேளாண்மைக் கல்லூரி தொடங்குவதற்கு அரசு நிலம் வழங்கப்பட்டது. 1887ஆம் ஆண்டு ஹட்ச் (HATCH ACT) சட்டப்படி ஒவ்வொரு மாநிலத்திலும் வேளாண்மை பரிசோதனை நிலையங்களை நிறுவ வகை செய்யப்பட்டது. 1850இல் 15 இலட்சம் பண்ணைகள் 29 கோடி ஏக்கர் நிலங்களில் இருந்தன. 10 கோடி புஷல்கள் கோதுமையும், 59 கோடி புஷல்கள் மக்காச்சோளமும், 45.9 இலட்சம் பேல்கள் பருத்தியும் உற்பத்தி செய்திருந்தனர். 1900ஆம் ஆண்டில் 57 இலட்சம் பண்ணைகள் 84 கோடி ஏக்கர் நிலங்களில் வியாபித்து இருந்தன. இப்போது 60 கோடி புஷல்கள் கோதுமையும், 266.2 கோடி புஷல்கள் மக்காச்சோளமும், 20 கோடி பேல்கள் பருத்தியும் உற்பத்தி செய்தனர். பண்ணைகளின் வளர்ச்சியும், விளைச்சலின் வளர்ச்சியும் அபரிதமாக இருந்தன.

## புதிய பண்ணைக் கருவிகள்

மேற்குப்பகுதி பண்ணை நிலங்களில் நீக்ரோ அடிமைகள் பண்ணைத் தொழிலுக்கு அதிகம் கிடைக்காததால் புதுப்புதுக் கருவிகளின் தேவை அதிகரித்து, உழைப்பைச் சேமிக்கும் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டன. விவசாயம் நவீனமயமாக்கப்பட்டது. மனிதனை நம்பி விவசாயம் செய்வது குறைந்து, இயந்திரங்களை நம்பி இயங்க வேண்டியிருந்தது. கோதுமையை அறுவடை செய்ய 'மார்ஷ்ஹார்வெஸ்டர்' என்ற கருவி ஒன்று C.W.மார்ஸ் என்பவர் கண்டுபிடித்தார். இதனால் இருமடங்கு பயிர் அறுவடை செய்ய முடிந்தது. ஜான் F. ஆப்பிள்பை 1878இல் 'டுவைன்பைண்டர்', என்ற கருவியை கண்டுபிடித்தார். இதனால் அறுவடை எட்டு மடங்கு உயர்ந்தது. கோதுமை உற்பத்தி பெருக்கத்திற்கு முக்கிய காரணமாக இருந்தது டுவைன்பைண்டர்தான் என்று கூறப்பட்டது.

1860இல் நாட்டின் தலா உற்பத்தி 5.6 புஷல்களாக இருந்தது. 1880இல் 9.2 புஷல்களாக உயர்ந்தது. கட்டுதூக்கும் கருவியும், வறட்சியான சீதோஸ்ண நிலைக்கு வேண்டிய ஹெட்டர் எனும் கருவியும் கண்டுபிடிக்கப்பட்டன. மேற்கு பகுதிகளில் இருபது குதிரைகளைக் கொண்டு இழுத்துச் செல்லப்படும் 'கம்பைன்ஸ்' என்னும் இயந்திரங்கள் பயன்படுத்தப்பட்டன. இவைகள் முதலில் குதிரைகளால் இழுத்துச் செல்லப்பட்டன. பின்னர் டிராக்டர்களால் இழுக்கப்பட்டன.

தங்கள் கைகளையே பயன்படுத்தாமல் உழைப்பாளிகள் டிராக்டர்கள் மூலம் பயிரினை அறுத்துப் போரடித்துத் தூய்மைப்படுத்தி, கோணிப்பைகளில் அடைந்துக்கட்டி நிறுத்தி அனுப்பும் பழக்கம் வந்தது.

1880இல் நிலத்தை உழுது விதை விதைக்கும் 'லிஸ்டர்' எனும் கருவி உபயோகத்திற்கு வந்தது. கைகளின் மூலம் உமி நீக்கும் முறை மாறி இயந்திரத்தின் மூலம் உமி நீக்கும் முறை தோன்றியது. புல் அறுக்கும் கருவி ஒன்றின் மூலம் தனி மனிதன் ஒரு நாளில் ஆறு முதல் பத்து ஏக்கர் நிலம் வரையிலும் புல் அறுத்துக் கட்டுக்கட்ட இயலும். இதனால் சாறு நிறைந்த பசுமையான புல்லினை விவசாயி அறுத்துச் சேமித்து வைத்து மழைக்காலங்களில் கால்நடைகளுக்கு உணவாக வழங்க முடிந்தது.

பண்ணைத் தொழிலை இயந்திரமயமாக்குதல் 1860 முதல் 1910 முடிய நடைபெற்றது. குதிரை சக்திக்குப் பதிலாக இயந்திரசக்தி பயன்படுத்தப்பட்டது. 1910இல் பண்ணை இயந்திரங்களை 'காசோலைன்' கொண்டு இயக்க முற்பட்டனர். அடுத்த பத்து ஆண்டுகளில் நீராவிசக்தியும், குதிரை சக்தியும் முற்றிலும் கைவிடப்பட்டது. மின்சாரம் கிடைக்கக்கூடிய பகுதியில் இருந்த பண்ணையில் பால் பிரித்தெடுக்கும் கருவி, வெண்ணெய் எடுக்கும் கருவி, கழுவும் கருவி முதலான கருவிகள் பயன்படுத்தப்பட்டன. விவசாயத்தை இயந்திரமயமாக்கியதன் விளைவாக பண்ணை இயந்திரங்களின் மதிப்பு 1860 முதல் 1890 முடிய உள்ள ஆண்டுகளில் இரண்டு மடங்கு பெருகியது. இயந்திரமயத்தினால் ஒரு தொழிலாளியின் உற்பத்தி திறன் சுமார் 400 சதவீதமாக உயர்ந்தது. இயந்திரமயமாதலின் காரணமாக செல்வத்தின் பெரும்பகுதி நிலஉடமையாளர்களின் கைகளிலே குவியும் சூழ்நிலை ஏற்பட்டது. ஏழ்மை நிலையில் வசித்த விவசாயி குத்தகையாளனாகவோ அல்லது விவசாயத் தொழிலாளியாகவோ மாறும்நிலை ஏற்பட்டது. விவசாயப்புரட்சியின் விளைவாக நிலமற்ற விவசாயத் தொழிலாளிவர்க்கம் உருவாகியது. இது விவசாயப்புரட்சியின் துரதிஷ்டம் என்கிறார் பேராசிரியர் ஃபால்கரை.

# அலகு 3.2
# விவசாயிகளின் புரட்சி

விவசாயத்தில் புரட்சி ஏற்பட்டதினால் வேளாண் உற்பத்தி பெருகியது. ஆனால் விவசாயிகளின் பொருளாதாரம் மிகவும் வீழ்ச்சியடைந்து இருந்தது. "வேளாண்மையில் உற்பத்தி பெருகாமல் தொழில் வளர்ச்சியோ, நகர நாகரிகமோ வளர்ச்சியடைவதில்லை. ஆனால் எப்போதும் இல்லாத அளவு இப்பொழுது விவசாயிகள் அதிக உற்பத்தி செய்தும் அவர்களுக்குக் கிடைத்தது சொற்பமே" என பேராசிரியர் ரிச்சர்ட் கரண்ட் கூறுவார்.

### *நிதி நிலைமை:*

போரின் காரணமாக தென்பகுதியின் நிதிநிலைமை நொடித்துப் போயிருந்தது. தென்பகுதி கூட்டாட்சி அரசு 40 கோடி டாலர்களுக்கு பத்திரங்களை வழங்கியது. காகிதப்பணம் அதிக அளவில் அடிக்கப்பட்டதினால் பணத்தின் உண்மையான மதிப்பு குறைந்தது.

விவசாயத்திற்கு முதலீடு செய்ய பணம் தேவைப்பட்டது. பயிரிடப்போகும் பயிர்களை அடமானம் வைத்து கடன்பெறும் சூழ்நிலை இருந்தது. நகரத்து வியாபாரிகள் வங்கிகளின் ஏஜெண்டுகளாக இருந்து விவசாயிகளுக்கு கடன் வழங்கினர். கடன் பணமாகத்

தரப்படாமல் விவசாயத்திற்கு வேண்டிய இடுபொருட்களாகத் தரப்பட்டன. பயிர் அறுவடையின்போது கடன் கொடுத்த வியாபாரிக்கே குறைந்த விலைக்கு விற்க வேண்டியிருந்தது. ஒரே பயிர் மட்டும் பயிரிடும் வழக்கம் இருந்தது. மத்திய மேற்குப்பகுதியில் கோதுமையும், சோளமும், தென்பகுதியில் பருத்தி மட்டுமே பயிரிடப்பட்டன.

விளைபொருட்களுக்குச் சரியான விலை கிடைக்காமல் விவசாயிகள் அவதிப்பட்டனர். ஒரு புஷல் தானியம் உற்பத்தி செய்ய 21 சென்ட் செலவு ஆகிறது. ஆனால் விற்பதோ 8 சென்ட்கள். ஓட்ஸ் 10 சென்ட்கள், மாமிசம் 2 சென்ட், வெண்ணெய்க்கும், முட்டைக்கும் விலையில்லை. இதற்கு என்ன காரணம் என்றால் அதிக உற்பத்தி செய்து விட்டனர் எனக் கூறப்பட்டது. இதை விவசாயிகள் ஏற்கத் தயாராக இல்லை.

## *இரயில்பாதை நிறுவனங்கள்*

உற்பத்தி பொருட்கள் சந்தைகளுக்கு எடுத்துச் செல்ல விவசாயிகள் இரயில்பாதை நிறுவனங்களை நம்பவேண்டியிருந்தது. மத்திய மேற்குப் பகுதியிலிருந்து கிழக்குப் பகுதிகளுக்கு தானியம் ஒரு மூட்டை அனுப்புவதற்கு ரயில் கட்டணமாக ஒரு மூட்டை தரவேண்டியிருந்தது. இரயில்பாதை நிறுவனங்கள் தனியார்வசம் இருந்ததினால் அவர்கள் விதித்ததுதான் கட்டணம். அரசாங்கம் இவர்களைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அரசின் உயர் அதிகாரிகள், நீதிபதிகள், பாராளுமன்ற உறுப்பினர்கள் போன்றோர் பயணம் செய்ய இலவச கூப்பன்கள் இரயில்பாதை நிறுவனங்களால் வழங்கப்பட்டிருந்தன.

விலை வீழ்ச்சியால் பாதிக்கப்பட்ட விவசாயிகளுக்கு மேலும் புதிய வரிவிதிப்புகள் விதிக்கப்பட்டன. பண்ணைக் கருவிகள் மீது வரி விதிக்கப்பட்டன. உள்நாட்டுப் போருக்குப்பின் விவசாயிகளின் சமூக அந்தஸ்தும் மாறிவிட்டது. சட்டமன்றங்களில் விவசாய பிரதிநிதிகளின் எண்ணிக்கை 7 சதம்தான். ஆனால் மக்கள் தொகையில் 47 சதவீதம்பேர் விவசாயிகள்.

## கிராஞ்சுகள் தோற்றம்

தென்பகுதி விவசாயிகளின் நிலையை அறிய அரசாங்கம் ஆலிவர் ஹட்சன் கெல்லி என்பவரை நியமித்தது. பாஸ்டன் நகரில் பிறந்த இவர் வாஷிங்டன் நகரில் வேளாண்மைத்துறையில் அதிகாரியாகப் பணிபுரிந்தார். எனவே இவரால் விவசாயிகளின் பிரச்சனைகளை நன்கு அறியமுடிந்தது. அரசிடம் அறிக்கையை சமர்ப்பித்த பின்னர் அவதியுறும் விவசாயிகளுக்கு ஏதேனும் நன்மை புரிய வேண்டும் என்ற எண்ணத்தில் தனது நண்பர்களுடன் 1867, டிசம்பர் 4ஆம் தேதி கிராஞ்ச் (Grange) என்ற ஒரு அமைப்பை உருவாக்கினார். 'சமூக ரீதியாகவும், அறிவுபூர்வமாகவும் விவசாயிகளுக்கு உதவி புரிவதே தங்களது நோக்கம்', என தெரிவித்தனர். கிராஞ்சின் தலைவர் 'மாஸ்டர்' எனப்பட்டார். செயலர் ஒருவர், பொருளாளர் மற்றும் விரிவுரையாளர் அல்லது போதகர் என நிர்வாகிகள் இருந்தனர். ஒவ்வொரு கூட்டத்திலும் கூட்டுவிருந்து நடைபெற்றது. 1867இல் 37 கிராஞ்சுகள் அமைக்கப்பட்டன. 1870இல் 9 மாநிலங்களில் கிளைகள் அமைக்கப்பட்டன. 'பிரெய்ரிபார்மர்' 'பார்மர்ஸ் யூனியன்' 'ரூரல்வோர்ல்ட்' என்ற பத்திரிகைகள் ஆரம்பிக்கப்பட்டன.

1873ஆம் ஆண்டு ஜூலை 4ஆம் தேதியை 'விவசாயிகளின் சுதந்திர நாள்' என பிரகடனப்படுத்தப்பட்டது. 'வாக்குரிமையை எங்களது நலன்களைக் காக்க முன்வருபவர்களுக்கே வழங்குவோம்', என்று முடிவு எடுத்தனர். இதனால் அரசியல்வாதிகள் கலக்கமடைந்தனர். மேல் மிசிசிபி பள்ளத்தாக்கில் உள்ள 5 மாநிலங்களில் ரயில்பாதை நிறுவனங்களைக் கட்டுப்படுத்த மாநில சட்டமன்றங்கள் சட்டங்கள் இயற்றின.

'கூட்டுறவு வாழ்க. ஏகபோகம் ஒழிக', என்ற என்ற கோஷங்கள் எங்கும் எதிரொலித்தன. அயோவா மாநில கிராஞ்ச் விவசாயிகள் ஒட்டுமொத்தமாகப் பொருட்களை வாங்கவும் விற்கவும் வழிவகுத்தது. அயோவா, கான்சாஸ், நெப்ராஸ்கா ஆகிய தானியம் விளையும் மாநிலங்களில் இவ்வியக்கம் வேகமாகப் பரவியது. 1875 ஜனவரியில் 21697 கிராஞ்சுகள் அமெரிக்காவில் இருந்தன. கான்சாஸ் மாநிலத்தில் ஒவ்வொரு 24 பேருக்கு ஒரு கிராஞ்சு இயங்கி வந்தது.

உற்பத்தியாளர்களுக்கும் நுகர்வோர்களுக்கும் நேரடித் தொடர்பு ஏற்படுத்த பாடுபட்டனர். ஒவ்வொரு வட்டாரத்திலும் ஒரு கூட்டுறவு அமைப்பு நிறுவப்பட்டது. அதற்கு ஊதியம் பெறக்கூடிய ஏஜெண்ட் நியமிக்கப்பட்டார். அந்த வட்டார விவசாயிகளுக்கு என்ன பொருட்கள் தேவையோ அதனை உற்பத்தி செய்கின்ற தொழிற்சாலைகளில் நேரடியாக வாங்கி விவசாயிகளுக்கு விநியோகிப்பதுதான் அவரின் பணியாகும். இவ்வமைப்பிற்கு வேண்டிய மூலதனம் உறுப்பினர்களால் பங்குத்தொகையாகச் செலுத்தப்பட்டன. அயோவா மாநிலத்தில் இவ்வமைப்பு வெற்றிகரமாக இயங்கியது.

ஒரு அறுவடை இயந்திரம் தயார்செய்யும் நிறுவனம் விலையை குறைத்துத் தர மறுத்ததால், கிராஞ்ச் அமைப்பு அறுவடை இயந்திரங்களைத் தயார் செய்யத் தொடங்கியது. இதனால் தங்களுக்குத் தேவையான பல இயந்திரங்களை உற்பத்தி செய்யலாயினர். மேலும் தானியங்களைச் சேமித்து வைக்கும் கிடங்குகள், தானியங்களை எடுத்துச் செல்லும் ஊர்திகள் போன்றவற்றையும் இயக்கினர். இதனால் பத்து முதல் நாற்பது சதவீதம் ஆதாயம் இருந்தது. நாளடைவில் 400க்கும் மேற்பட்ட பொருட்களை தங்களது கூட்டுறவுகள் மூலம் உற்பத்தி செய்தனர். கடன் வசதியைப் பெருக்கிக்கொள்ள வங்கிகளும் தொடங்கப்பட்டன. கலிபோர்னியா மாநிலம் முதலில் வங்கியை ஆரம்பித்தது.

கூட்டுறவு இயக்கத்தின் மூலம் விவசாயிகள், ஒரு தரகன், ஒரு பணிக்காரன், ஒரு உற்பத்தியாளன், ஒரு வங்கியின் சொந்தக்காரன், ஒரு வியாபாரி ஆகியோர் செய்ய வேண்டிய வேலைகளையெல்லாம் தாங்களே செய்து கொண்டனர். ஆனால் முடிவில் இது தோல்வியில்தான் முடிந்தது. 'பேடண்ட் உரிமைகள்' என்ற பெயரில் கருவிகளின் உரிமையாளர்கள் கிராஞ்சு கூட்டுறவுகள் மீது வழக்குத் தொடுத்தனர். தீர்ப்புகள் கிராஞ்சுகளுக்கு எதிராக அமைந்தன. எனவே கருவிகளின் உற்பத்தி நிறுத்தப்பட்டது.

1873 முதல் 1875 வரை கிராஞ்சுகளின் வளர்ச்சி அபரிமிதமாக இருந்தன. கூட்டுறவு இயக்கத்தின் வெற்றி கிராஞ்சுகளின் வளர்ச்சிக்கு உதவியது. கூட்டுறவு இயக்கத்தின் தோல்வி கிராஞ்சுகளுக்குத் தோல்வியைத் தந்தன.

கிராஞ்சுகள் இயக்கம் மிகத்தீவிரமாக இயங்கியபோது விவசாயிகள் மாத்திரமின்றி பிறதுறையினரும் அதில் சேர்ந்தனர் தாங்கள் தொழில் நடத்த ஆட்கள் கிடைப்பார்கள் என்று வழக்கறிஞர்களும், மருத்துவர்களும் சேர்ந்தனர். வட்டிக்கடைக்காரர்கள் தங்களுக்கு ஆதாயம் கிடைக்கும் என்று சேர்ந்தார்கள் என்று அமெரிக்க விவசாயிகள் இயக்கப் பேராசிரியர் S.J.பக் கூறுவார்.

கிராஞ்சுகள் விவசாயிகளின் இன்பதுன்பங்களில் பங்கேற்றது. தனது சக விவசாய நண்பனுக்கு அறுவடை செய்ய உதவி புரிந்தது. புயலினாலோ நெருப்பினாலோ பாதிக்கப்பட்டவர்களுக்கு வீடு கட்டித்தந்தது. 1874இல் மிசிசிபி நதி வெள்ளப்பெருக்கெடுத்து ஓடிச் சேதம் ஏற்படுத்தியபோது பணம், பிற தேவையான பொருள்களைப் பாதிக்கப்பட்ட லூசியானா, அலபாமா மாநிலங்களுக்கு அனுப்பிவைத்தது. மேற்கு மிசிசிபி பகுதியில் பிளேக் நோய்கள் கடுமையாகத் தாக்கிய பொழுது அயோவா, மின்னஸோட்டா, டகோடா, கான்சாஸ், நெப்ராஸ்கா மாநில கிராஞ்சுகள் நிதி அனுப்பி நிவாரணம் தந்தது. 1876இல் தென்கரோலினா கடுமையான வறட்சியினால் பாதிக்கப்பட்டபோது உடனே சென்று உதவியது. இதன் மூலம் நாடு முழுவதும் நாடு முழுவதும் விவசாயிகள் ஐக்கிய உணர்வு அடைந்தனர்.

## *காகிதப்பணக்கட்சி* (Green Back Party)

கிராஞ்சுகளின் வீழ்ச்சிக்குப் பிறகு 1876இல் ஜேம்ஸ்.பி.வீவர் என்பவர் 'காகித பணக்கட்சியைத்', துவக்கினார். இதில் விவசாயிகள், தொழிலாளர்கள்,

சீர்திருத்தவாதிகள் உறுப்பினர்களாக இருந்தனர். காகிதப் பணப்புழக்கத்தை கூடுதலாக்க வேண்டும் என்ற கோரிக்கையை வலியுறுத்த இக்கட்சி உருவானது.

1878 தேர்தலில் இக்கட்சிக்கு பத்து இலட்சம் வாக்குகள் கிடைத்தன. 15 பாராளுமன்ற உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 1880ஆம் ஆண்டு தேர்தலில் ஜேம்ஸ்.பி.வீவர் ஜனாதிபதி பதவிக்குப் போட்டியிட்டு மூன்று இலட்சம் வாக்குகள் பெற்று தோல்வியடைந்தார். 1888ல் இக்கட்சி மறைந்தது.

## அல்லையன்ஸ் இயக்கம் (Alliance Movement)

1880-1890க்குட்பட்ட ஆண்டுகளில் விவசாயிகள் மீண்டும் ஒன்றுபட்டு இயங்க ஆரம்பித்தனர். இதனை ஏற்படுத்தியவர்கள் தென்பகுதியைச் சேர்ந்த பருத்தி விவசாயிகள். 1870-73இல் பருத்தியின் விலை பவுண்டுக்கு 15 சென்ட். ஆனால் இருபது வருடங்கள் கழித்து அது 8 சென்ட்டாக குறைந்தது. பயிர் அடமான திட்டத்தின்கீழ் பத்துக்கு எட்டு விவசாயிகள் மாட்டிக்கொண்டு தவித்தனர். 1880இல் விவசாயிகளின் கடன் 34.3 கோடி டாலர்களாக இருந்தது. 1890இல் அது 58.6 கோடி டாலர்களாக உயர்ந்தது. தங்கள் துயரங்களைத் தீர்க்க வடபகுதி விவசாயிகள் Northern Farmers' Alliance என்ற அமைப்பையும், தென்பகுதி விவசாயிகள் Southern Farmers' Alliance என்ற அமைப்பையும் உருவாக்கினார்கள். 1880இல் மில்டர் ஜார்ஜ் என்பவர் தலைவராக இருந்தார்.

இரயில்பாதைகள் சீரமைப்பு, சீரான வரிவிதிப்பு, தேசிய வங்கிகளை மூடுதல், வணிக சூதாட்டத்தை ஒழித்தல்,

தீர்வைகளைக் குறைத்தல் போன்ற கோரிக்கைகளை முன்வைத்தனர். சேமிப்புக்கிடங்குகள் நாடெங்கும் நிறுவப்பட வேண்டும் எனக் கோரினர். 1890இல் காங்கிரசுக்கு நடைபெற்ற தேர்தலில் ஒன்பது இடங்களைக் கைப்பற்றியது.

அலையன்ஸ் இயக்கங்கள் முதலில் கடும் வறட்சியினால் பாதிக்கப்பட்ட கான்சாஸ், நெப்ராஸ்கா, அயோவா, மின்னசோட்டா மாநிலங்களில் தீவிரமாகத் தொடங்கப்பட்டன. இல்லினாய் மாநிலத்தில் விவசாயிகளின் 'பெனிபிட் அசோசியேசன்', என்ற பெயரிலும், நியூயார்க் மாநிலத்தில் 'நார்தன் அலையன்ஸ்' என்ற பெயரிலும், அர்கன்சாஸ் மாநிலத்தில் 'அக்ரிகல்சுரல் வீல்' (Agricultural Wheel) என்ற பெயரில் விவசாயிகள் ஒன்றுபட்டனர். 'நான்கன்பார்மிஸ்ட்' (கான்சாஸ்) 'புரொகிரசிவ் பார்மர்' (தென்கரோலினா), 'பார்மர்ஸ் அலையன்ஸ்' (நெப்ராஸ்கா) போன்ற பத்திரிகைகள் தொடங்கப்பட்டன.

அலையன்ஸ் இயக்கத்தினர் அரசையும், சட்டமன்றங்களையும் தங்கள்வசம் வைத்துக்கொள்ள என்ன செய்வது என்று திட்டமிட்டனர். அதன் முடிவுதான் பாப்புலிஸ்ட் கட்சி'யின் உதயமாகும்.

### பாப்புலிஸ்ட் கட்சி

அரசாங்கம் தானிய சேமிப்பு கிடங்குகளையும், கருவூலங்களையும் நிறுவ வேண்டும். அதில் விவசாயிகள் தங்களது விளைபொருட்களைச் சேமித்து வைப்பதின் மூலம் அதன் மதிப்பில் 80 சதவீதத்திற்கு கருவூல பத்திரங்கள் வழங்க வேண்டும். அந்தப் பத்திரங்களைத் தேவைப்படும்

மாற்றிக் கொள்ளலாம் என எடுத்துக்கூறப்பட்டது. இதற்காக ஒரு மசோதா 1890இல் பாராளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது. ஆனால் அரசியல் கட்சிகள் இதனை நிறைவேற்ற ஒத்துழைப்பு தரவில்லை. எனவே விவசாய இயக்கத்தினர் ஒரு மூன்றாவது கட்சியை உருவாக்கத் திட்டமிட்டனர். 1890 டிசம்பர் மாதம் தேசிய மாநாடு கூட்டப்பட்டது. அதில் ஒரு அரசியல் கட்சி உருவாக்க தீர்மானிக்கப்பட்டது. 1891இல் தென்பகுதி அலையன்ஸ் இயக்கத்தினர் டெமாகிரடிக் கட்சியிலிருந்து தங்களைத் துண்டித்துக் கொண்டனர். 1892 ஜூலை 4ஆம் நாள் ஓமகா என்ற இடத்தில் கூட்டப்பட்ட தேசிய மாநாட்டில், பாப்புலிஸ்ட் கட்சியின் தோற்றத்தை அறிவித்தனர். பாப்புலிஸ்ட் கட்சி அமெரிக்க வரலாற்றில் தனது தனிமுத்திரையை பதித்தது. இவர்கள் கோரிய சீர்திருத்தங்கள் யாவும் பின்நாளில் மற்ற இரு கட்சிகளினால் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

### *கட்சியின் கோரிக்கைகள்*

1. இரயில்பாதை நிறுவனங்கள், தொலைபேசி, தந்தி போன்றவற்றை அரசே ஏற்று நடத்த வேண்டும்.
2. காகித நாணயங்களையும், வெள்ளி நாணயங்களையும் அரசு வெளியிட வேண்டும்.
3. அஞ்சல் சேமிப்பு முறையைத் தொடங்க வேண்டும்.
4. தானிய சேமிப்பு கிடங்குகளை அரசு நிறுவ வேண்டும்.
5. வருமான விகிதாசாரத்திற்கு ஏற்ப வருமான வரி விதிக்கப்பட்டு பெரும் பணக்காரர்களை கட்டுப்படுத்த வேண்டும்.

6. செனட் சபைக்கு நேரடித் தேர்தல் நடத்தப்பட வேண்டும். மக்கள் துவக்கம், மக்கள் தீர்ப்பு போன்ற நேரடி மக்களாட்சி முறை கொண்டு வரப்பட வேண்டும்.

7. தொழிலாளர்களின் வேலை நேரம் குறைக்கப்பட வேண்டும்.

8. பெண்களுக்கு வாக்குரிமை வழங்கப்பட வேண்டும் மற்றும் ஆஸ்திரேலிய முறைப்படி வாக்களிக்கப்பட வேண்டும்.

இக்கோரிக்கைகள் நடுத்தர மக்களை விவசாயிகளை, தொழிலாளர்களை மிகவும் கவர்ந்தன. 1892ஆம் ஆண்டு ஜனாதிபதி தேர்தலில் பாப்புலிஸ்ட் கட்சியின் வேட்பாளராக ஜேம்ஸ். ந. வீவர் அறிவிக்கப்பட்டார். டெமகிரடிக் கட்சி கிளீவ்லாந்த், ரிபப்ளிக்கன் கட்சி ஹாரிசன் என்பவரையும் நிறுத்தின. கிளீவ்லாந்த் வெற்றி பெற்றார். வீவருக்கு 22 தேர்வாளர் குழு வாக்குகளும், 10,40,000 மக்கள் வாக்குகளும் கிடைத்தன. தேர்தலில் போட்டியிட்டதின் மூலம் மக்களின் கவனத்தை ஈர்த்தது இக்னேஷியர் டோனலி, ஜெரிசிம்சன், டில்மன் போன்ற தலைவர்கள் கட்சியை வழிநடத்தினர். இக்கட்சியின் முக்கிய பேச்சாளர் மேரி எலிசபெத் லியாஸ் என்பவர் இங்கு நடத்தப்படும் ஆட்சி மக்களால் மக்களுக்காக நடத்தப்படும் ஆட்சி அல்ல. அமெரிக்க நிதி நிலைக்கு இருப்பிடமான நியுயார்க்கின் வால் தெரு (Wall Street) நாட்டை வாங்கி விட்டது. எனவே இந்த அரசு இப்போது வால்தெருவுக்காக, வால் தெருக்காரர்கள் நடத்தும் வால் தெருவின் ஆட்சி என்று பிரச்சாரம் செய்தார். 1896ஆம் ஆண்டு குடியரசு தலைவர் தேர்தலில் பிரையன் (Bryan) என்பவர் நிறுத்தப்பட்டார். துணைத்தலைவர் பதவிக்கு

ஜேம்ஸ்பீல்ட் நிறுத்தப்பட்டார். குடியரசு கட்சியின் சார்பாக வில்லியம் மெக்கன்லி நிறுத்தப்பட்டார். இறுதியில் குடியரசு கட்சியே வெற்றி பெற்றது. எப்படியென்றால், பிரையன் தேர்ந்தெடுக்கப்பட்டால் பொருளாதாரம் நசுக்கப்பட்டுவிடும். அவர் ஒரு தீவிரவாதி என பிரச்சாரம் செய்யப்பட்டது. மெக்கன்லிக்கு ஆதரவாக அமெரிக்கச் செல்வந்தர்களிடம் ஹன்னா என்ற செல்வந்தர் 160 இலட்சம் டாலர்கள் நிதி திரட்டினார். இவையாவும் பாப்புலிஸ்ட் கட்சி வேட்பாளரைத் தோற்கடிக்கப் பயன்பட்டது. மெக்கன்லிக்கு 51 சதவீத வாக்குகளும், பிரையனுக்கு 47 சதவீத வாக்குகளும் கிடைத்தன. மக்களின் பிரதிநிதி தோல்வியுற்றார். செல்வந்தர்கள் மற்றும் வணிகர்களின் பிரதிநிதி வெற்றி பெற்றனர். நகர்புற தொழில்துறை நாகரிகத்தை வெற்றி கொள்ள நினைத்த விவசாயிகளின் முயற்சி முற்றிலும் தோல்வியடைந்தது என பேராசிரியர் S.J.பக் குறிப்பிடுவார்.

1892இல் பாப்புலிஸ்ட் கட்சி வலியுறுத்திய சீர்திருத்தங்கள் யாவும் முதல் உலகப்போருக்கு முன் உட்ரோ வில்சன் ஆட்சி காலத்திலும், இரண்டாம் உலகப்போருக்கு முன் F.D.ரூஸ்வெல்ட் காலத்திலும் அப்படியே ஏற்றுக்கொள்ளப்பட்டன. பாப்புலிஸ்ட் கட்சி அரசியலில் தோல்வி கண்டது. ஆனால் அது தனது முத்திரையை எதிர்காலத்திற்காகப் பதித்து விட்டிருந்தது என்பது உண்மை. இதை பின்னாளைய வரலாறு நிரூபித்தது.

### *பாப்புலிஸ்ட் கட்சியின் வீழ்ச்சி*

1892ஆம் வருட தேர்தலுக்குப் பிறகு பாப்புலிஸ்ட் கட்சி படிப்படியாக செல்வாக்கு இழந்தது. ஆனால் பாப்புலிஸ்ட் கட்சி மேற்கையும், தெற்கையும் கிழக்கிற்கு எதிராகத் தட்டி

எழுப்பி நிறுத்தியது. கடன்பட்டோரை கடன் தந்தவர்களுக்கு எதிராகவும், நாட்டுப்புறத்தை நகர்புறத்திற்கு எதிராகவும் கிளர்ந்தெழச்செய்தது என ஏ.எம்.செல்சின் ஜெர் கூறுவார். பாப்புலிஸ்ட் கட்சியின் வளர்ச்சியைத் தடுக்க பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. பாப்புலிஸ்ட் கட்சியினர் கோரிய சீர்திருத்தங்களைத் தங்கள் கட்சியின் கோரிக்கைகளாக டெமாகிரெடிக் கட்சியும், ரிபப்ளிகன் கட்சியும் சேர்த்துக் கொண்டனர். இதனால் பாப்புலிஸ்ட் கட்சியின் செல்வாக்கு குறைய ஆரம்பித்தது. 1892க்குப் பின் உணவுப் பொருட்களின் விலைகள் சற்று உயர்ந்து பண்ணையில் செழிப்பு தொடங்கவே எதிர்க்கும் மனப்பான்மையை விவசாயிகள் கைவிட்டனர். ஐரோப்பிய நாடுகளுக்கு உணவுப்பொருட்கள் ஏற்றுமதி செய்ய வேண்டிய நிலையில் அமெரிக்கா இருந்ததால் விவசாயிகள் வளம்பெற ஆரம்பித்தனர். இதனால் தங்கள் கட்சியை மறந்தனர். அமெரிக்கப் பாராளுமன்றத்தில் 1897இல் 27 பாப்புலிஸ்ட் கட்சி உறுப்பினர்கள் இருந்தார்கள். 1899இல் அவர்கள் எண்ணிக்கை 10 ஆகக்குறைந்தது. 1903இல் ஒரு உறுப்பினர் கூட இல்லை. முக்கியமான தலைவர்கள் இல்லாமல் போய்விட்டனர். டோனலி 1901இல் இறந்துவிட்டார். கான்சாஸைச் சேர்ந்த பீபர் கவர்னர் பதவிக்கு போட்டியிட்டு கிடைக்காமல் போகவே ரிபப்ளிகன் கட்சியில் சேர்ந்து விட்டார். இதனால் கட்சி மெல்ல மறைந்தது.

# அலகு 3.3

# தொழில் வளர்ச்சி - பெரும் வாணிப வளர்ச்சி

அமெரிக்கா மிகப்பெரிய வேளாண்மை ஜனநாயக நாடாக விரிவடையும் என தாமஸ்ஜெபர்சன் கனவு கண்டார். ஆனால் இறுதியில் ஹாமில்டனின் கனவுப்படி அமெரிக்கா மிகப்பெரிய தொழிற்துறை நாடாக மாறியது.

நெவின்ஸ் கொம்மகர் P.261.

அமெரிக்கா சுதந்திர நாடாக மாறியதிலிருந்து உள்நாட்டுப் போர் வரையிலும் வேளாண்மைதான் சிறந்து விளங்கியது. உள்நாட்டுப் போரைக்கூட பருத்தி அரசனுக்கும் கோதுமை அரசனுக்குமிடையே நடைபெற்ற போர் என்றுதான் கூறினார்கள். ஆனால் உள்நாட்டுப் போருக்குப் பின்னர் தொழிற்துறையில் வேகமான முன்னேற்றத்தைக் கண்டது. அமெரிக்கத் தொழிற்துறை வளர்ச்சிக்கு ஆறு காரணங்களை நெவின்ஸ் குறிப்பிடுகின்றார்.

1. அபரிமிதமான மூலப்பொருட்கள், கனிம வளங்கள்.

2. புதிய கண்டுபிடிப்புகள்.

மூலப்பொருட்களை செய்பொருள்களாக மாற்றக்கூடிய தொழில்நுட்பம்.

3. ரயில்பாதைகள் வளர்ச்சி மற்றும் நீர்வழிகள்

4. உள்நாட்டு சந்தை வாய்ப்பும் வெளிநாட்டு சந்தை வாய்ப்புகளும், மக்கள் தொகை பெருக்கமும்.

5. அரசின் பாதுகாப்பு சட்டங்களினால் வெளிநாட்டு போட்டியார்களிடம் இருந்து பாதுகாப்பு.

6. அரசாங்கத்தின் நேரடி மற்றும் முறைமுக மான்ய திட்டங்கள்.

இந்தக் காரணங்களினால் தொழில்முனைவோர்கள் ஊக்கமுடன் செயல்பட்டனர்.

### *1. கனிம வளங்கள்*

கனிமப் பொருட்களில் முக்கியமானவை நிலக்கரி, எண்ணெய், இரும்பு மற்றும் மின்சாரம் போன்றவைகள் பெருமளவில் பயன்படுத்தப்பட்டன.

நிலக்கரி - பென்சில்வேனியா, மேற்கு விர்ஜீனியா மலைப்பகுதிகள்,
இல்லினாய்ஸ், கான்னாஸ், கொலரடோ, டெக்ஸாஸ்,
நியுமெக்ஸிகோ, ஒஹையோ.

எண்ணெய் - டெக்ஸாஸ், ஒக்லகாமா, கான்கூஸ், இல்லினாய்ஸ், கலிப்போர்னியா.

இரும்புதாது - சுப்பீரியர் ஏரி பகுதிகள், டென்னஸி, கொலரடோ,
டென்னஸி நிலக்கரி மற்றும் இரும்பு நிறுவனம்
கொலரடோ எரிபொருள் மற்றும் இரும்பு நிறுவனம்.

இவைகள் கண்டுபிடிக்கப்பட்டு புதிய தொழிற்சாலைகள் உருவாக்கப்பட்டன. புதிய மத்திய மேற்கு பகுதிகளில், ஒஹையோ, இண்டியானா, இல்லினாய்ஸ், மிச்சிகன் மற்றும் விஸ்கான்சின் மாநிலங்களில் தொழிற்சாலைகள் உருவாயின. கிழக்கு பகுதியில் பென்சில்வேனியாவில் எண்ணெய் வளம் பிட்ஸ்பர்க்கில் உருக்கு ஆலைகள், நியுயார்க்கில் நிதி நிறுவனங்கள் முக்கிய பங்கு வகித்தன.

## 2. புதிய கண்டுபிடிப்புகள்

டைப்ரைட்டர் கருவியிலிருந்து பெரிய ரயில் பெட்டிகள் வரை புதிய கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டன. தாமஸ் ஆல்வா எடிசன் (1847-1931) கணக்கற்ற புதிய கண்டுபிடிப்புகளை கண்டுபிடித்தார். டைனமோ, மின்விளக்கு, சினிமா மின்சார ரயில் போன்ற கண்டுபிடிப்புகள் நவீன வாழ்க்கையின் அத்தியாவசியமான தேவைகளாகக் கருதப்பட்டன. கர்னல் டிரேக் எண்ணெய் கிணறுகளை 1859இல் பென்சில்வேனியாவில் கண்டுபிடித்தார். போர்ட்லன்ட் சிமெண்ட் 1870இல் அறிமுகப்படுத்தப்பட்டன. புதுய கண்டுபிடிப்புகளுக்கான பேடண்ட் உரிமைகள் 1900ஆம் ஆண்டு 676000 உரிமைகள் தரப்பட்டன. ஏற்கனவே பதினெட்டாம் நூற்றாண்டில் கண்டுபிடிக்கப்பட்ட, பருத்தி விதை பிரித்தெடுக்கும் கருவி - எவிவிட்டெனி; நீராவிபடகு - ராபர்ட்பௌல்டன், தையல் இயந்திரம் - எலியா ஹோவ், பதப்படுத்தப்பட்ட ரப்பர் — சார்ஸ் குட்இயர், அறுவடை இயந்திரங்கள் - சைரஸ் மக்கார்மிக் மற்றும் ஒபெட் ஹிஸ்ஸே போன்ற இயந்திரங்கள் இப்போது வளர்ந்துள்ள உருக்கு மின்சாரம் போன்றவற்றை பயன்படுத்தி அதிக அளவில் உற்பத்தி செய்யலாயினர்.

சாமுவேல் மோர்ஸ் - தந்தி முறையை அறிமுகப்படுத்தினார். வாஷிங்டனிலிருந்து பால்டிமோர் வரை தந்தி கம்பிகள் இழுக்கப்பட்டன. 1859இல் வெஸ்டர்ன் யூனியன் கம்பெனி என்ற நிறுவனம் இந்தத் தொழிலை மேற்கொண்டது. நியு பௌண்ட்லாண்டிலிருந்து அயர்லாந்து வரை கடலுக்கு அடியில் கம்பிவடம் இணைப்பு போடப்பட்டது. 1876இல் ஸ்காட்லாந்திலிருந்து குடிபெயர்ந்த அலெக்ஸாண்டர் கிரஹாம்பெல் டெலிபோன் கருவியை கண்டுபிடித்தார்.

### *3. ரயில்பாதை வளர்ச்சி*

போக்குவரத்து முறைகளில் பெரிய மாற்றம் ஏற்பட்டது. கார்கள், ரயில் வண்டிகள் பயணத்தை எளிதாக்கின. புல்மேன் தூங்கும் வசதியுடைய ரயில் வண்டிகள் சௌகர்யமான பிரயாணத்திற்கு ஏற்பாடு செய்தன. ஹென்றி போர்டு கண்டுபிடித்த மோட்டார் கார் அமெரிக்காவில் வாணிப வளர்ச்சியை வேகப்படுத்தியது. ரயில் பாதைகள் நாடு முழுவதும் போடப்பட்டு சரக்குகள் எளிதாக பிற இடங்களுக்குக் கொண்டு செல்ல வாய்ப்புகள் ஏற்பட்டன.

### *4. அரசின் ஆதரவு*

அரசாங்கத்தின் ஆதரவு வாணிப வளர்ச்சிக்கு பெரிதும் உதவியாக இருந்தன. மாநிலங்களுக்கிடையே இருந்து வந்த தொல்லை தரும் சுங்க சாவடிகள் நீக்கப்பட்டன. காப்பு வரி முறைகள் வெளிநாட்டு இறக்குமதிப் பொருள்களின் போட்டியிலிருந்து உள்நாட்டுப் பொருள்களைப் பாதுகாத்தன. தொழில் தொடங்குவோருக்கு குறைந்த விலையிலும்,

இனாமாகவும் நிலங்கள் வழங்கப்பட்டன. நீதிமன்ற தீர்ப்புகள் செல்வந்தர்களின் சொத்துகளை காப்பாற்றின. ஒரு மாநிலத்தில் வாணிபம் செய்ய உரிமை பெற்றவர்கள் நாடெங்கும் வாணிபம் புரிவதற்கு அனுமதிக்கப்பட்டனர். கார்ப்பரேசன்கள் என்பவை அதிக அளவு முதலீடுகளை ஒன்றிணைத்துச் செயல்பட்டன. உள்நாட்டுப் போருக்கு முன் அரசின் ஆதரவு இவ்வளவாக இருந்ததில்லை. உள்நாட்டுப் போரில் வடபகுதியினர் வெற்றி பெற்றதினால் குடியரசு கட்சி தொடர்ந்து ஆட்சியதிகாரத்தை மேற்கொண்டதனால் தொழிற்துறை வளர்ச்சிக்கு பேருதவியாக இருந்தது. 1863இல் தேசிய வங்கிச்சட்டம் மூலம் வங்கிகள் சீரமைக்கப்பட்டன.

## நீதித்துறை ஆதரவு

அரசியலமைப்பின் 14வது திருத்தம் வாணிப நிறுவணங்களுக்கு 'ஒரு மகாசாசனம்' எனக் கருதப்பட்டது. எந்த ஒரு மாநிலமும் ஒரு தனிநபரின் வாழ்க்கை, சுதந்திரம் அல்லது சொத்துரிமை போன்றவற்றை சரியான காரணமின்றி மறுப்பதற்கு உரிமையில்லை என எடுத்துக் கூறியது, நீதிபதி ஸ்டீபன் ஜே. பீல்ட்டின் விளக்கங்கள் வாணிப நிறுவனங்களுக்குச் சாதகமான சூழ்நிலையைத் தந்தது. 1890-1910க்குட்பட்ட ஆண்டுகளில் 14வது திருத்தம் சம்மந்தமாக 528 வழக்குகள் பரிசீலிக்கப்பட்டன. இவற்றில் 289 வழக்குகள் கார்ப்பரேசன்கள் சம்மந்தமானது. 19 வழக்குகள் நீக்ரோக்கள் சம்மந்தமானது.

## தொழில் முனைவோர்களின் பங்கு

நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் தனிமனிதர்களின் முயற்சியினால் அபரிதமான வளர்ச்சி ஏற்பட்டது.

சமுதாயத்தின் அனைத்துப் பிரிவினரும், தங்கள் திறமையை வெளிப்படுத்தினர். வாண்டர் பில்ட், கார்னகி, ராக்பெல்லர், மார்கன் போன்றோர் முக்கியமானவர்கள். சாதாரண நிலையில் தொழில் தொடங்கி கோடீஸ்வரர்களாக மாறினர். செல்வமும், செல்வாக்கும் மிக்கவர்களாக மாறினர். ஆரம்ப காலத்தில் இப்படிப்பட்ட செல்வாக்கு வெற்றி பெற்ற ராணுவ தளபதிகளுக்கு இருந்தது. பல தொழில் முனைவோர் தவறான வழிமுறைகளில் செல்வத்தைப் பெருக்கியதும் உண்டு. ஜே கௌல்ட், ஜிம்பிஸ்க் போன்றவர்கள் தவறான வழிமுறைகளைக் கையாண்டனர். இது தவிர்க்க முடியாததாக அமைந்தது. வாணிப வளர்ச்சியின் தீமைகளைச் சுட்டிக் காட்டுவதாக உள்ளது.

## *பெரும் வாணிப வளர்ச்சி*

தாராள வர்த்தக முறை(Laissez-Faire)யின் விளைவாக புதுமுறையான பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டது. ஒரே தொழிலில் பல போட்டியாளர்கள் இருந்ததிற்குப் பதிலாக பலர் ஒன்றுசேர்ந்து ஒரே தொழிலை மிகப்பெரிய அளவில் வளர்த்தனர். சந்தையையும், விலைகளையும் தங்கள் இஷ்டம் போல் கட்டுப்படுத்தினர். ஒவ்வொரு தொழிலும் ஒரு மாபெரும் நிறுவனமாக வளர்ந்தது. இது தொழிற்துறையின் ஏகாதிபத்தியத்தை வளர்த்தது. பல வாணிப கூட்டு நிறுவனங்கள் உருவாயின. செல்வம் ஒரு சிலரின் கைகளில் குவியும் அபாயம் ஏற்பட்டது.

1877-1897க்குட்பட்ட ஆண்டுகளில் அமெரிக்க வரலாறு தலைநகர் வாஷிங்டனின் வெள்ளை மாளிகைக்கு வெளியேதான் நிகழ்ந்தது. அமெரிக்க வரலாறு,

வெளிநாடுகளிலிருந்து வந்து இறங்கிய குடியேற்ற மக்கள் வாழுமிடங்களிலும், ராக்கிமலை பள்ளத்தாக்குகளில் ரயில் பாதையமைக்கும் பணியில் ஈடுபட்ட தொழிலாளர்கள் வாழும் பகுதியிலும், பெரிய சமவெளியில் கால்நடைகள் வளர்ப்போர்களாலும் கோதுமை பயிரிடும் விவசாயிகளாலும், நிவேடாவின் வெள்ளிச்சுரங்களிலும் சிக்காகோவின் சேமிப்பு கிடங்குகளிலும், பிட்ஸ்பர்க்கின் உருக்கு ஆலைகளிலும், நியுயார்க்கின் வால் தெருவில் உள்ள வங்கிகளின் தலைமையிடங்களிலும், ஆண்ட்ரூ கார்னகி போன்ற தொழிற்துறை முதலீட்டாளர்களின் அலுவலகங்களிலும்தான் அமெரிக்க வரலாறு எழுதப்பட்டது.

இக்காலகட்டத்தில் அரசியலுக்கு முக்கியத்துவம் இல்லை. பொருளாதார உயர்வை நோக்கிய ஒரே சிந்தனை அமெரிக்கா எங்கும் நிலவியது. தங்கள் நாட்டை தலைசிறந்த வேளாண்மை உற்பத்தி பெருக்க நாடாகவும், தலைசிறந்த தொழிற்துறை நாடாகவும் மாற்றிய பெருமை அமெரிக்கர்களுக்கே உண்டு. வேறு எந்த நாட்டிலும் இவ்வளவு குறுகிய காலத்தில் பொருளாதார முன்னேற்றம் நிகழ்ந்தது இல்லை என்கிறார் C.P.ஹில்.

## *பெருந்தொழில்கள் வளர்ச்சி*

### *இரயில் பாதைகள்*

உள்நாட்டுப் போருக்குப்பின் ரயில் பாதைகளின் வளர்ச்சி ஐந்து மடங்கு வளர்ந்தது. ரயில்பாதை நிறுவனங்களில் முதலீடு செய்வது லாபகரமாக விளங்கியது. இதன் வளர்ச்சியினால் புதிய தொழில்களான நிலக்கரி

சுரங்கங்கள், உருக்கு உற்பத்தி மற்றும் பிற தொழில்கள் வளர வாய்ப்புகள் உண்டாயின. கிழக்கும் மேற்கும், வடக்கும் தெற்கும் ரயில் பாதைகளால் இணைக்கப்பட்டதால் குடியேறப்படாத பரந்த மேற்கு பகுதியில் மக்கள் குடியேற வசதி ஏற்பட்டன. பொருட்களுக்கு தேசிய அளவில் சந்தை வாய்ப்புகள் ஏற்பட்டன. இரயில்பாதைகளில் புதிய வரலாறு படைத்தவர் கார்னிலியஸ் வாண்டர் பில்ட் ஆவார். நியுயார்க்கின் அரைகுறை படிப்பாளியான இவர் தனது முதல் தொழிலாக மான்ஹாட்டன் மற்றும் ஸ்டான்டன் தீவுகளுக்கிடையே படகு போக்குவரத்தை மேற்கொண்டார். விரைவிலேயே ஒரு பெரிய கப்பல் உரிமையாளர் ஆனார். இவருக்கு கப்பற்படை தளபதி (கம்மோடர்) என்ற பட்டப்பெயரும் கிடைத்தது. தனது 68வது வயதில் 1862இல், ரயில் பாதை நிறுவனங்களை வாங்க ஆரம்பித்தார். 1877இல் இவர் மறைவதற்கு முன் சிகாகோ-நியுயார்க் ரயில் பாதை அமைக்கப்பட்டது. கட்டணக் குறைப்பும், பயணிகளுக்கு நல்ல வசதிகளும் செய்து தரப்பட்டன. தனது 15 ஆண்டு கால உழைப்பின் மூலம் பத்து கோடி டாலர்கள் வருமானத்தை நூறு கோடி டாலர்களாக உயர்த்தினார். செல்வந்தர்களுக்கு ஏற்படக் கூடிய செருக்கு இவருக்கும் ஏற்பட்டது. ஜார்ஜ் வாஷிங்டனுக்கு எடுக்கப்பட்ட சிலைகளுடன் தன்னுடைய சிலைகளையும் இணைத்து எழுப்பும் அளவிற்கு செருக்கு படைத்தவராக விளங்கினார். புதிய சகாப்தத்தின் முதல் கோடீஸ்வரர் இவரே.

இவரையடுத்து மத்தியமேற்கில் பென்சில்வேனியாவில் J.எட்கர் தாம்சன், T.A.ஸ்காட், A.J.கஸ்ஸாட் போன்றோர் ரயில்பாதை உரிமையாளர்களானார்கள். பால்டிமோர்,

ஒஹையோ, பகுதிகள் நியு இங்கிலார்ந்து பகுதிகளுடன் இணைக்கப்பட்டது. நியுயார்க், நியுஹேவன், பாஸ்டன், மெய்ன் மற்றும் தென்பகுதிகள் யாவும் இரயில் பாதைகளால் இணைக்கப்பட்டன. ஜியார்ஜ் M.புல்மான் தூங்கும் வசதியுடைய ரயில் பெட்டிகளை பயன்பாட்டிற்கு கொண்டுவந்தார். 1868இல் ஜியார்ஜ் வெஸ்டிங்ஹவுஸ் என்பார் காற்றுதடை (ஏர்பிரேக்) கருவியை பயன்படுத்தியதால் ரயில் பயணம், விரைவாகவும், பத்திரமாகவும் செல்ல முடிந்தது. சரக்குகளை ஏற்றிச்செல்லும் வண்டிகளின் எடை 15000 பவுண்டுகளிலிருந்து ஒரு லட்சம் பவுண்ட்களாக உயர்ந்தது. கட்டண குறைப்பும் இரண்டு டாலர்களிலிருந்து 73 செண்ட்களாக குறைந்தது.

யூனியன் மற்றும் மத்திய பசியிக் நிறுவனத்திற்கு கூட்டாட்சி அரசு நிலங்களை வழங்கியது. ஒரு மைல் நீளத்திற்கு ரயில் பாதை அமைத்தால், பத்லிருந்து நாற்பது சதுரமைல் நிலம் அந்நிறுவங்களுக்கு வழங்கப்பட்டது. இவ்வாறாக 10 கோடி ஏக்கர் நிலம் கூட்டாட்சி அரசிடமிருந்தும், 50 கோடி ஏக்கர் நிலம் மாநிலங்களிலிருந்தும் இந்நிறுவனங்களுக்கு வழங்கப்பட்டது. யூனியன் பசிபிக் நிறுவனம் கிரிடிட் மொபிலியர் என்பவரால் நடத்தப்பட்டது. கட்டுமானத்திற்கு 9.4 கோடி டாலர்கள் கட்டணமாக வசூலிக்கப்பட்டது. ஆனால் அது 5 கோடி டாலர்களில் கட்டி முடிக்கப்பட்டது. ஒரே ஆண்டில் 348 சதவீதம் பங்குத்தொகை லாபமாக வழங்கினார். காங்கிரஸ் சபையின் பல உறுப்பினர்களுக்கு லஞ்சம் வழங்கப்பட்டது.

மத்திய பசிபிக் நிறுவனத்தை கலிபோர்னியாவின் நான்கு பெரும் வணிகர்கள் நடத்தினார்கள். 63 மில்லியன்

டாலர்கள் லாபம் ஈட்டினர். அவர்களது முதலீடு 121 மில்லியன் டாலர்கள் யூனியன் பசிபிக் ரயில் பாதைகள் அமைப்பதில் ஐரிஸ் நாட்டு குடியேற்ற தொழிலாளர்கள் ஈடுபட்டனர். மத்திய பசிபிக் பாதைகள் அமைப்பதில் சீனத் தொழிலாளர்கள் ஈடுபட்டனர். மேற்கே ரயில் பாதைகள் அமைப்பதில் தென்பசிபிக், வடபசிபிக், சாண்டாபீ, கிரேட் நார்தன் போன்ற நிறுவனங்கள் ஈடுபட்டன. ரயில் பாதைகளின் சுரண்டல்கள், பாப்புலிஸ்ட் இயக்கத்தினரால் வெளிக்கொணரப்பட்டு, கூட்டாட்சி, மற்றும் மாநில அரசுகளால் பல கட்டுப்பாடுகள் கொண்டு வரப்பட்டன.

## *நிலக்கரி மற்றும் உருக்குத் தொழில்*

இரும்புத்தாதுவும், ஆன்தாராசைட் என்ற நிலக்கரி ரகம் பென்சில்வேனியாவில் மட்டுமே கிடைத்தன. மற்றொரு ரகமான பிட்டுமனஸ் -நீலக்கல் அடங்கிய நிலக்கரி அப்பலேசியன் மலைத்தொடரை அடுத்துள்ள சமவெளி பகுதிகளிலும், மத்திய மாநிலங்களிலும், மேற்கே எல்லைப்புறங்களிலும் கிடைத்தன. 1850ஆம் ஆண்டில் உருக்கு உற்பத்திக்கு நிலக்கரியைப் பயன்படுத்தும் முறையை பெஸ்ஸிமர் என்பவர் கண்டுபிடித்த பிறகு நிலக்கரியின் உற்பத்தி அதிகமாகியது. 1900ஆம் ஆண்டில் 14 மில்லியன் டன்கள் இரும்பு கனி வெட்டியெடுக்கப்பட்டது. அதில் 11 மில்லியன் டன்கள் உருக்காக மாற்றப்பட்டன. இது பிரிட்டனும், ஜெர்மனியும் சேர்ந்து உற்பத்தி செய்ததைவிட அதிகமாகும்.

உள்நாட்டுப் போருக்குப் பின்னர் சுப்பீரியர் ஏரி பகுதிகளில் இரும்புத்தாது வெட்டியெடுக்கப்பட்டது.

இரும்பிலிருந்து எஃகு உற்பத்தியை தொடங்கியவர் நியு ஜெர்சியைச் சேர்ந்த ஆபிரகாம் ஹீவிட் என்பவராவார். ஆனால் ஆண்ட்ரூ கார்னகி தான் இத்தொழிலில் தலை சிறந்து விளங்கினார்.

## *ஆண்ட் ரு கார்னகி 1835 - 1919*

ஸகாட்லாந்தைச் சேர்ந்த இவர் இளம் வயதிலேயே 1848இல் பிட்ஸ்பர்க் நகருக்கு பெற்றோர்களுடன் வந்தார். பஞ்சாலைகளிலும், தந்தி அலுவலகங்களிலும் பணிபுரிந்தார். பின் பென்சில்வேனியா ரயில்பாதை நிறுவனத்தில் பணிபுரிந்தார். 1864இல் சிறிய அளவில் இரும்புத் தொழிலில் ஈடுபட்டார். 1868இல் யூனியன் அயர்ன் மில் என்ற நிறுவனத்தை நிறுவினார். பல இரும்பு நிறுவனங்களை விலைக்கு வாங்கி 1899இல் 'கார்னகி ஸ்டீல் கம்பெனி' என்ற நிறுவனத்தை நிறுவினார். நாட்டின் மொத்த எஃகு உற்பத்தியில் இருபத்து ஐந்து சதவீதம் இவரது நிறுவனம் உற்பத்தி செய்தது. நேர்மையான தொழிலதிபர். தனது செல்வத்தின் பெரும்பகுதியை கல்வி வளர்ச்சிக்காக பயன்படுத்தினார். 'Gospel of wealth' என்ற நூலை எழுதியுள்ளார்.

## *எண்ணெய் தொழில்*

தொழிற்வளர்ச்சிக்கு வேண்டிய மற்றொரு மூலப்பொருள் எண்ணெய் ஆகும். எண்ணெய் தொழிலில் ஈடுபட்டு கோடீஸ்வரர் ஆனவர் ஜான்.டி.ராக்பெல்லர் ஆவார். ஆண்ட்ரூ கார்னகி அளவிற்கு செல்வந்தர் E.L.டிரேக் என்பவர். 1859இல் பென்சில்வேனியாவில் முதலாவது எண்ணெய் கிணறு தோண்டப்பட்டது. ஆரம்பகாலங்களில்

விளக்கு எரிக்கவே எண்ணெய் பயன்பட்டது. ராக்பெல்லர் 1862இல் எண்ணெய் வணிகத்தில் ஈடுபட்டார். எண்ணெய் சுத்தகரிப்பு தொழிலிலும் ஈடுபடலானார். 1870இல் ஒஹையோவில் ஸ்டாண்டர்ட் ஆயில் கம்பெனியை நிறுவினார். சிறு நிறுவனங்களை விலைக்கு வாங்கி ஒன்றிணைத்து மிகப்பெரும் நிறுவனமாக்கினார். அமெரிக்காவின் எண்ணெய் உற்பத்தியில் தொண்ணூறு சதவீதம் இவரால் உற்பத்தி செய்யப்பட்டது. வாழ்நாளில் கடைசி 30 ஆண்டுகளில் தொழில் துறையிலிருந்து ஓய்வுபெற்று, தனது செல்வத்தை மருத்துவம், விஞ்ஞானம் கல்வி வளர்ச்சிக்காகச் செலவிட்டார்.

### *மின்சாரம்*

இங்கிலாந்தின் மைக்கேல் பாரடேயும், அமெரிக்காவின் ஜோசப் ஹென்றியும் பல ஆராய்ச்சிகளுக்குப்பின் மின்சாரத்தை பல பயன்பாட்டிற்கு கொண்டுவந்தனர். தாமஸ் ஆல்வா எடிசன் மேற்கொண்டு ஆய்வுகள் செய்து மின்சாரத்தின் பயன்பாடுகளை மக்களுக்கு அளித்தார். 1882இல் நியுயார்க் நகரில் எடிசன் எலெக்டிரிக் கம்பெனி என்ற மின் உற்பத்தி நிலையத்தை தொடங்கினார். 1887இல் மின்சாரத்தைப் பயன்படுத்தி ரிச்மாண்டிற்கும் விர்ஜினியாவிற்குமிடையே மின்சாரத்தினால் இயங்கும் வாகனம் விடப்பட்டது. மின்சாரம் தந்தி தொடர்பு துறையிலும் பயன்படுத்தப்பட்டது. அலெக்ஸாண்டர் கிரஹாம்பெல் கண்டுபிடித்த தொலைபேசி இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் 1355000 எண்ணிக்கையாக இருந்தது. வெஸ்டர்ன் யூனியன் மற்றும் போஸ்டல் டெலிகிராப் அமெரிக்காவின் மிகப்பெரும் தொலைபேசி மற்றும் தந்தி நிறுவனமாகும்.

## வங்கிகள்

1890களில் வங்கிகள் அதிகமாக வளர்ந்தன. வர்த்தக முதலீடுகள் போய் இப்போது தொழிற்துறை முதலீடுகள் அதிகம் வளர்ந்தன. உள்நாட்டுப் போரின் போது ஜேகுக் (JAY COOKE) என்ற வங்கி நிறுவனம் பிலடெல்பியாவில் இருந்தது. 1873இல் திவாலாகி விட்டது. இதன்பின் வங்கித்தொழில் நியுயார்க் நகருக்கு மாறியது. ஜே.பி.மார்கன் அண்ட் கம்பெனி வங்கித் தொழிலை தனது கட்டுப்பாட்டில் வைத்திருந்தது. ஐரோப்பிய முதலீடுகளை அதிக அளவில் மார்கன் நிறுவனம் பெற்றது. ரயில் பாதை நிறுவனங்களில் மார்கன் முதலீடு செய்தார். 1901இல் யுனைட்டேட் ஸ்டேட்ஸ் ஸ்டீல் என்ற நிறுவனத்தைத் தொடங்கினார். கார்னகி கம்பெனியுடன் பிற கம்பெனிகளையும் இணைத்தார். ராக்பெல்லரின் ஸ்டாண்டர்டு ஆயில் கம்பெனியுடன் சேர்ந்து முதலீடு செய்தார். 1912இல் பூ ஜோ கமிட்டியின் அறிக்கையின்படி மார்கன் ராக்பெல்லர் கம்பெனிகளின் மூலதனம் 600 கோடி டாலர்களாகும். அமெரிக்காவின் தொழிற்துறை இக்கம்பெனியை சார்ந்து தான் இயங்கி வந்தது. J.P.மார்கன் இங்கிலாந்தில் லண்டன் நகரில் தனது தந்தையின் வங்கியில் பணியாற்றியவர். 1857இல் நியுயார்க் வந்தார். 1860இல் ஜே.பி. மார்கன் அண்ட் கம்பெனியை தொடங்கினார். அதுவே அமெரிக்காவின் மிகப்பெரிய நிறுவனமாக வளர்ந்தது.

## டிரஸ்ட்கள் தோற்றம்

அமெரிக்காவில் ஒவ்வொரு தொழிலும் வளர்ந்து மிகப்பெரும் நிறுவனமாக வளர்ந்தது. ஒரே தொழிலைச்

சேர்ந்த பல நிறுவனங்கள் வணிக கூட்டு நிறுவனங்களை - டிரஸ்ட்களை உருவாக்கின. 1910இல் பத்து மில்லியன் டாலருக்கு மேல் முதலீடு செய்யப்பட்ட 73 டிரஸ்ட்கள் இருந்தன. வாணிபம் பெரும் வாணிபமாக வளர்ந்தது. இது பெருமுதலாளிகளுக்கே லாபமாக இருந்தது. இந்நிறுவனங்களினால் இயங்கும் ரயில் பாதைகள் தங்கள் இஷ்டம் போல் கட்டணங்களை உயர்த்தின. இதனால் அதிகம் பாதிக்கப்பட்டவர்கள் விவசாயிகள் தான். தொழிலாளர்கள் அதிக நேரம் உழைக்க வேண்டியிருந்தது. தொழிற்சாலைகள் பாதுகாப்பற்று விளங்கின. தொழிலாளர்களுக்கு உரிமைகள் மறுக்கப்பட்டன. வணிககூட்டு நிறுவனங்களைக் கட்டுப்படுத்த வேண்டும் என்ற கோரிக்கை எழுந்தன. புதிய சீர்திருத்த இயக்கங்களும் கட்சிகளும் இதனை வலியுறுத்தின. ஹென்றி ஜார்ஜ் என்பவர் எழுதிய Progress and Poverty என்ற நூலில் ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கும் உள்ள இடைவெளி அதிகரித்து வருவதற்கு இந்த டிரஸ்ட்களே காரணம் என்று கூறினார். டிரஸ்ட்களை ஒழுங்குபடுத்த பல மாநிலங்கள் சட்டங்களை இயற்ற தயாராக இருந்தன. கிராஞ்சர் இயக்கத்தினர் ரயில்பாதை நிறுவனங்களை கட்டுப்படுத்தினர். 1890இல் பாராளுமன்றத்தில் ஷெர்மன் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டம் (Sherman Anti Trust Act) இயற்றப்பட்டது. பல கூட்டு நிறுவனங்கள் தண்டிக்கப்பட்டன. இச்சட்டம் கூட்டு நிறுவனம் அமைத்தல் என்ற நோக்கத்துடன் செயல்படும் ஒப்பந்தங்களும், ரகசிய உடன்பாடுகளும் கூட்டுகளும் சட்ட விரோதம் எனக் கூறியது. இச்சட்டம் இயற்றப்பட்ட போது பெரும் எதிர்பார்ப்பு இருந்தது. கூட்டாட்சி அரசால் கூட்டு நிறுவனங்களுக்கு எதிராக வழக்குகள் தொடரப்பட்டன. எந்த

பெருந்தொழில் நிறுவனமும் பாதிக்கப்படவில்லை. டிரஸ்ட் என்ற கூட்டு நிறுவனம் தங்கள் பெயரை 'பங்கு நிலையங்கள்' என்று மாற்றி அமைத்துக் கொண்டு அரசின் பிடியிலிருந்து நழுவிக் கொண்டன. மீண்டும் 1941இல் கிளேட்டன் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டம் நிறைவேற்றப்பட்டது.

# அலகு 3.4
# தொழிலாளர் இயக்கங்கள்

உள்நாட்டுப் போருக்குப் பின் அமெரிக்க தொழில்வளம் அபரிமிதமாக வளர்ந்தது. 1870-1890க்குட்பட்ட ஆண்டுகளில் தொழிலாளர்களிடையே தொழிற்சங்க இயக்கமும் வளரத்தொடங்கியது. தொழில் வளர்ச்சிகட்குப் பாடுபட்ட அவர்களது வாழ்க்கைத்தரம் மிகவும் மோசமாக இருந்தது. நகர்ப்புற வளர்ச்சியின் காரணமாகத் தொழிலாளர்கள் ஒன்றிணைக்கப்பட்டனர். உற்பத்தியாளர்கள் தங்களின் பேராசையின் காரணமாக அதிக உழைப்பிற்கு குறைந்த கூலி வழங்கினர். பாதுகாப்பற்ற தொழிற்சாலைகள், வசதியின்மை காரணமாக தொழிலாளர்கள் நலன்கள் புறக்கணிக்கப்பட்டு மிகவும் மன உளைச்சலுடன் தொழிலாளர்கள் வாழ்க்கை நடத்தி வந்தனர். தங்களின் நலன்களையும் உரிமைகளையும் காக்கத் தொழிற்சங்கங்கள் அமைத்து முதலாளிகளுக்கு எதிராகப் போராடத் துவங்கினர். அமெரிக்கா பரந்து விரிந்து இருப்பதாலும், குறைந்த கூலிக்கு ஐரோப்பாவிலிருந்து வந்திறங்கும் தொழிலாளர்களாலும் தொழிற்சங்கங்கள் அமைப்பதும், தொழிலாளர்களை ஐக்கியப்படுத்துவதும் சிரமமாக இருந்தது. சுதந்திரத்துடன் கூடிய தனித்தன்மையை விரும்பும் மக்களால் கட்டுக்கோப்பான தொழிற்சங்க திட்டங்களுக்கு உடன்பட்டு வர இயலவில்லை. மத்திய, மாநில அரசுகள் தங்கள் தொழிற்துறையை ஒழுங்குபடுத்தவும் வேலை நேரத்தை வரையறுக்கவும்

நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று விரும்பினார்களே தவிர தாங்களே ஒன்றிணைந்து போராட தயாராக இல்லை. இதனால் தொழிற்சங்க வளர்ச்சி மெதுவாகவும், சிரமத்துடனும் இருந்தது.

தொழிலாளர்கள் தங்கள் அதிருப்தியை எப்படி வெளிப்படுத்துவது என்று தவிக்கும்போது முதன்முதலாக அயர்லாந்து நாட்டிலிருந்து வந்த சுரங்கத் தொழிலாளர்கள் தான் ஒரு பயங்கரவாதத்தின் மூலம் தங்கள் கோரிக்கைகளை அடைய முடியும் என்று நடவடிக்கைகளில் இறங்கலாயினர். மோலி மாக்யூரெஸ் (Molly Mayuires) என்ற பெயரில் கலவரங்களில் ஈடுபடுவது போன்ற நடவடிக்கைகள் மூலம் முதலாளிகளை மிரட்டி ஊதிய உயர்வு கோரினர். பல தொழிலாளர்கள் கைது செய்யப்பட்டனர், தண்டிக்கப்பட்டனர். இதனால் இவ்வியக்கத்தினர் மறைந்தனர். ஆனால் சுரங்கத் தொழிலாளர்கள் இனம் ஒன்றுபடலாயினர். இச்சமயத்தில் 1877இல் மேற்கு பென்சில்வேனியா மாநிலத்தில் ரயில்வே தொழிலாளர்கள் தங்கள் ஊதியம் குறைக்கப்பட்டதின் காரணமாக வேலை நிறுத்தத்தில் ஈடுபடலாயினர். 1881இல் 500 வேலை நிறுத்தங்கள் நடந்தன. ஒரு இலட்சத்தி முப்பதாயிரம் தொழிலாளர்கள் பங்கு கொண்டனர். 1886இல் ஆறு இலட்சம் தொழிலாளர்கள், 1500 வேலை நிறுத்தங்களில் ஈடுபட்டனர். அமெரிக்க மக்களிடையே ஒரு வித பய உணர்ச்சி பரவியிருந்தது.

## *உழைப்பின் வீரர்கள் சங்கம்*

வில்லியம் சில்விஸ் என்பவரால் 1866ஆம் ஆண்டு பால்டிமோர் என்ற இடத்தில் துவக்கப்பட்ட தேசிய தொழிலாளர் சங்கம் வளர்ச்சியுறாமல் மறைந்தது. 1869ஆம் ஆண்டு உழைப்பின் வீரர்கள் (Knights of Labour) என்ற

ரகசிய சங்கம் உரியா ஸ்டீபன்ஸ் (Uriah Stephens) என்பவரால் தொடங்கப்பட்டது. அனைத்து தொழிலாளர்களும் இதில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். தங்களது ஊதிய பிரச்சினையைத் தீர்ப்பதற்கும், முதலாளி தொழிலாளி வித்தியாசமில்லாத தொழிற்சாலைகளை நிறுவுவது, செல்வதைச் சமமாகப் பகிர்ந்து கொள்வது, டிரஸ்ட்களையும், ஏகபோகத்தையும் ஒழிப்பது, நாணயச் சீர்திருத்தம், அனைவருக்கும் நிலம் கிடைக்கச் செய்வது, குழந்தை தொழிலாளர்களை ஒழிப்பது, மதுவிலக்கு அமல்படுத்துவது போன்ற கோரிக்கைகளை முன்வைத்தனர். ஜெர்மனியிலிருந்து வந்த தொழிலாளர்கள் சமதர்ம கோட்பாடுகளை அமல்படுத்த விரும்பினர். 1879இல் பென்சில்வேனியாவில் டெரன்ஸ் பவுடர்லி என்பவர் தலைமையில் உழைப்பின் வீரர்கள் அமைப்பு வேகமாகப் பரவியது. 1884இல் ஒரு மத்திய தொழிலாளர் கூட்டமைப்பு உருவானது. 1883இல் ஏற்பட்ட பொருளாதார வீழ்ச்சியினால் பாதிக்கப்பட்ட தொழிலாளர்கள் இவ்வமைப்பில் அதிகம் சேர்ந்தனர். அமைப்பு ரீதியாக இயங்கும் போதுதான் வேலை நிறுத்தங்களில் வெற்றிபெற முடியும் என்று நம்பினர். 1886இல் 7 இலட்சம் உறுப்பினர்கள் இவ்வமைப்பில் இருந்தனர். மே முதல் தேதி 1886ஆம் ஆண்டு எட்டு மணிநேரம் வேலை என்ற கோஷத்தை முழங்கினர். சிக்காகோ ஹேமார்க்கெட் சதுக்கத்தில் கூடியிருந்த தொழிலாளர் மத்தியில் வெடிகுண்டு வெடித்தது, 10 பேர் இறந்தனர். இந்நிகழ்ச்சி நாடெங்கும் ஒரு அதிர்ச்சியை ஏற்படுத்தியது.

ஒவ்வொரு மாநிலமும் தொழிலாளர்கள் சங்கம் அமைப்பதைத் தடை செய்யும் சட்டங்கள் இயற்றின.

பொதுமக்கள் ஆதரவு இவ்வியக்கத்திற்கு கிடைக்காததால் மெல்ல மெல்ல இவ்வியக்கம் மறைந்தது.

### *அமெரிக்கத் தொழிலாளர் கூட்டமைப்பு*
### (The American Federation of Labour)

உழைப்பின் வீரர்கள் சங்கத்திற்குப் பிறகு அமெரிக்கத் தொழிலாளர்கள் கூட்டமைப்பு நியுயார்க் நகரில், யூத சுருட்டுத் தொழிலாளியான சாமுவேல் காம்பெர்ஸ் என்பவரால் தொடங்கப்பட்டது. திறமையான யூத தொழிலாளர்களின் அணுகுமுறை ஐரீஸ் தொழிலாளர்களை விட வேறுபட்டு இருந்தது. திறமையான தொழிலாளர்களே வலிமையான அமைப்பை உருவாக்க இயலும் என்பதிலே நம்பிக்கை கொண்டிருந்தார் காம்பெர்ஸ். 1881இல் இந்த சுருட்டு உற்பத்தி செய்யும் தொழிலாளர்கள் சங்கம் பிற ஏழு தொழிற்சங்கங்களுடன் இணைந்து அமெரிக்க தேசிய தொழிலாளர் கூட்டமைப்பு உருவாக்கப்பட்டது. சோசலிசத்தில் ஈடுபாடு கொண்ட அரசியல் கலப்பற்ற நிறுவனமாக விளங்கியது. ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்சிக்குழு கொள்கைகளை தீர்மானித்தது. தொழிலாளர்களிடையே கட்டுப்பாட்டை விதித்தது. சந்தா வசூல் செய்து வேலை நிறுத்த காலங்களில் பாதிக்கப்பட்ட தொழிலாளர்களுக்கு உதவியது. எட்டு மணி நேர வேலை, குழந்தை தொழிலாளர்களை நீக்குதல் போன்ற கோரிக்கைகளை வலியுறுத்தினர்.

தொழிற்சங்கங்களை நசுக்குவதில் முதலாளிகள் ஈடுட்டனர். நீதிமன்றங்களும் அவர்களுக்கு ஆதரவாகவே செயல்பட்டன. பிங்கர்டன் துப்பறியும் நிறுவனம் என்ற அமைப்பை முதலாளிகள் ஏற்படுத்தி அதன் மூலம் ஒரு குண்டர்படையைத் திரட்டி வேலை நிறுத்தம் செய்யும்

என்று ரூஸ்வெல்ட் அறிவித்தார். இதற்கு ஜப்பான் சம்மதித்தது. 1905 செப்டம்பரில் போர்ட்ஸ்மவுத் நகரில் சமாதான மாநாடு கூட்டப்பட்டது. ரஷ்யாவுக்கும் ஜப்பானுக்குமிடையே போர்ட்ஸ்மவுத் உடன்படிக்கை செய்து கொள்ளப்பட்டது. இதனால் 1906ஆம் வருட சமாதானத்திற்கான நோபல் பரிசு தியோடர் ரூஸ்வெல்டிற்கு வழங்கப்பட்டது. நோபல் பரிசு பெற்ற முதலாவது ஜனாதிபதி தியோடர் ரூஸ்வெல்ட் ஆவார்.

## *ஐரோப்பிய நாடுகளுடன் உறவு*

ஐரோப்பிய நாடுகளின் பிரச்சனைகளில் ரூஸ்வெல்ட் ஒரு நடுநிலையாளராக இருந்து பல பிரச்சனைகளை தீர்த்து வைத்தார். பிரான்சும் ஜெர்மனியும் ஆப்பிரிக்காவில் உள்ள மொராக்கோ விவகாரத்தில் மோதிக் கொண்டன. இந்த மோதல் உலக அமைதிக்கு பங்கம் விளைவிக்கும் எனக் கருதப்பட்டது. இப்பிரச்சனையை தீர்க்க ரூஸ்வெல்ட் அனைத்து நாடுகளின் மாநாடு ஒன்று ஸ்பெயின் நாட்டில் உள்ள அல்ஜிசிராசில் கூட்டப்பட்டது. இம்மாநாட்டு முடிவின்படி மொராக்கோவின் ஒருமைப்பாடு அங்கீகரிக்கப்பட்டது. இதனால் உலக அரங்கில் அமெரிக்காவின் செல்வாக்கு உயர்ந்தது.

ரூஸ்வெல்டின் ஆலோசனைப்படி 1907ஆம் ஆண்டு ரஷ்யாவின் ஜார் மன்னர் இரண்டாவது ஹேக் மாநாட்டை கூட்டினார். இம்மாநாட்டில் படைக்குறைப்பு செய்வது பற்றியும், உலக நீதிமன்றம் ஒன்று நிறுவுவது பற்றியும் உடன்படிக்கை செய்து கொள்ளப்பட்டது. இதில் ரூஸ்வெல்ட்டும் சேர்ந்து கொண்டார். உலக அளவில்

அமெரிக்கா மதிக்கப்படக்கூடிய நாடாக ரூஸ்வெல்ட் ஆட்சிக்காலத்தில் விளங்கியது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தான் எடுத்துக் கொண்ட சிறப்பான கொள்கைகள் மூலம் அமெரிக்காவில் சீர்திருத்த காலத்தை தொடங்கி வைத்தவர் ரூஸ்வெல்ட். இவருக்குப்பின் வந்த வில்லியம் டாப்ட், உட்ரோவில்சன் ஆட்சிக்காலத்திலும் சீர்திருத்தங்கள் தொடரப்பட்டன. வெளிநாட்டுக் கொள்கையின் புதிய அணுகுமுறை, அமெரிக்க அண்டை நாடுகளுடன் தன்னுடைய ஆதிக்கத்தை வளர்த்துக் கொண்டது. மன்றோ கோட்பாட்டிற்கு புது விளக்கமளித்தது ரூஸ்வெல்ட்டின் திறமைக்குச் சான்றுகளாகும்.

# அலகு 4.5
# வில்லியம் ஹோவர்ட் டாப்ட்
# 1909-1913

"நாடுகளை வெற்றி கொள்ள ஆயுதங்கள் எதற்கு, டாலர்களை விநியோகித்தால் போதுமே."

டாப்ட்.

தியோடர் ரூஸ்வெல்ட் விரும்பியிருந்தால் மூன்றாம் முறையும் ஜனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பார். அவர் விரும்பவில்லை. தனது நெருங்கிய நண்பர் வில்லியம் ஹோவர்ட் டாப்ட்டை தானே தனது வாரிசாக அறிவித்தார். ஜனநாயக கட்சி வேட்பாளர் வில்லியம் பிரியன் தேர்தலில் தோல்வியடைந்தார். டாப்ட், ரூஸ்வெல்ட்டைப் போல் மக்களிடம் ஆதரவோ செல்வாக்கு மிக்கவராகவோ இல்லை. மீண்டும் கட்சியின் செல்வாக்கு வளர ஆரம்பித்தது. கட்சித் தலைவர்களின் ஆலோசனைப்படியே செயல்பட்டார். இருந்தபோதும் இவரது நான்கு ஆண்டு கால ஆட்சியில் பல சீர்திருத்தச் சட்டங்கள் இயற்றப்பட்டன. வெளியுறவுக் கொள்கையில் 'டாலர் ராஜதந்திரம்' (Dollar Diplomacy) கொள்கை கடைப்பிடிக்கப்பட்டது.

## *உள்நாட்டுக் கொள்கை*

டாப்ட்டை அவர் கட்சியைச் சேர்ந்த வடபகுதி மற்றும் மத்திய மேற்குப் பகுதி பிரதிநிதிகள் எதிர்க்க வேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. பெய்னே ஆல்டிரிச் சட்டம் (Payne Aldrich Tariff Act 1909) காப்பு வரிகளை உயர்த்தியது.

இவ்வரி உயர்வை நியாயப்படுத்தி 1909 செப்டம்பரில் மின்னசோட்டா மாநிலத்தில் டாப்ட் பேசிய பேச்சு ஜனநாயகக் கட்சியினரால் குறை கூறப்பட்டது. டாப்ட் காப்பு வரிகளை குறைப்பேன் என்று கூறியே வெற்றிபெற்றார் என்பது குறிப்பிடத்தக்கது. ஷெர்மன் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டத்தை அதிக விறுவிறுப்பான முறையில் அமல்படுத்தினார். ஸ்டாண்டர்டு ஆயில் கம்பெனி, அமெரிக்கன் டுபாக்கோ கம்பெனிக்கு எதிராக பல வழக்குகள் பதிவு செய்யப்பட்டன. தியோடர் ரூஸ்வெல்ட் அனுமதியளித்த 'அமெரிக்க ஐக்யநாடுகள் எஃகு நிறுவனத்தின்' மீதும் டாப்ட் நடவடிக்கை எடுத்ததால் இவ்விருவருக்கிடையே கருத்து வேற்றுமை ஏற்படலாயிற்று அது கட்சியிலும் பிரதிபலித்தது.

### *மான் எல்கின்ஸ் சட்டம்* (Mann-Elkins Act 1910)

ரயில்பாதைக் கட்டணத்தை திறம்பட செயல்படுத்த திட்டமிட்டு மான் எல்கின்ஸ் சட்டம் கொண்டுவரப்பட்டது. இதன்படி மாநிலங்களுக்கு இடையிலான வாணிகக் குழுவுக்கு அதிக அதிகாரம் கொடுக்கப்பட்டது. தந்தி, டெலிபோன் போன்ற நிறுவனங்களும் இதன் அதிகார எல்லைக்குள் கொண்டுவரப்பட்டன. இந்த வணிகக் குழுவிடமிருந்து வரும் மேல்முறையீட்டு வழக்குகளை விசாரிக்க ஒரு வணிக நீதிமன்றத்தை இச்சட்டம் உருவாக்கியது.

கூட்டாட்சி நீதிமன்றங்களில் திறமைவாய்ந்த வழக்கறிஞர்களை நியமித்தார். தேர்தல் செலவுத் தொகை பகிரங்கமாக வெளியிடப்பட வேண்டும் என்ற சட்டம் இயற்றப்பட்டது. இரண்டு புதிய மாநிலங்கள், நியுமெக்சிகோ, அரிசோனா கூட்டாட்சியில் இணைத்துக் கொள்ளப்பட்டது. வருமானவரி வசூலிப்பது தொடர்பாக 1913ல் பதினாறாவது

அரசியலமைப்புச் சட்டம் திருத்தம் கொண்டுவரப்பட்டது. இதன்படி மக்கள்தொகை பற்றி கணக்கில் கொள்ளாமலும் மாநிலங்களைக் கலந்து கொள்ளாமலும் மாநிலங்களிலிருந்து கிடைக்கும் வருவாய் ஆதாரங்கள் மீது காங்கிரஸ் வரி விதிக்க இந்த திருத்தம் வகை செய்தது. தனது ஆட்சியில் டிரஸ்ட்களுக்கு எதிராக 65 வழக்குகள் பதிவு செய்யப்பட்டன.

## *டாப்டின் வெளிநாட்டுக் கொள்கை*

### *டாலர் ராஜதந்திரக் கொள்கை* (Dollar Diplomacy)

டாப்ட் பதவி ஏற்ற பிறகு தென் அமெரிக்க நாடுகளுடன் வெளியுறவுக் கொள்கையில் சில மாற்றங்கள் ஏற்பட்டன. வெளியுறவுச் செயலர் பிலிண்டர் நாக்ஸ் (Pilander Knox) என்பவர் திறமையுடன் பணியாற்றினார். டொமினிக்கன் குடியரசில் அமெரிக்கா பின்பற்றிய பொருளாதாரக் கட்டுப்பாடுகள் நல்ல பயனளித்திருப்பதைக் கண்டார். ஒரு நாட்டின் நிதி நிலையைக் கட்டுப்படுத்துவதன் மூலம் அந்த நாட்டில் அமெரிக்க ஐக்கிய நாடுகள் தனது அரசியல் ஆதிக்கத்தை நிலைநாட்ட முடியும் என்று டாப்ட்டும், நாக்சும் கருதினர். அரசியல் ஆதிக்கத்தை உயர்த்துவதற்காக பணத்தைக் கருவியாகப் பயன்படுத்தும் அரசியல் கொள்கைக்கு 'டாலர் ராஜதந்திரக் கொள்கை' என்று பெயர். இதன் அடிப்படையிலேயே டாப்ட் தனது வெளியுறவுக் கொள்கையை அமைத்துக் கொண்டார். வெளிநாடுகளில் அமெரிக்காவின் செல்வாக்கை வளர்ப்பதும், உள்நாட்டில் செல்வச்செழிப்பை ஏற்படுத்துவதும் ஆகிய இரண்டு நோக்கங்களை இக்கொள்கை கொண்டிருந்தது. ஒரு நாட்டிற்கு போர்க்கப்பல்களை அனுப்பி படை வீரர்களை நிறுத்தி வைப்பதற்குப் பதிலாக டாலர்களை முதலீடு செய்து

அமெரிக்க நலன்களைக் காப்பது மட்டுமல்லாமல் மக்கள் மீது பொருளியல் நலன்கள் ஏற்படவும் வழி வகுக்கும் சிறந்த கருவியாக இந்த டாலர் ராஜதந்திரக் கொள்கை பயன்பட்டது. ஆனால் இந்த டாலர் ராஜதந்திரக் கொள்கையைச் செயல்படுத்த மற்ற நாணயமற்ற வழிமுறைகள் பின்பற்றப்பட்டன.

*நிகாராகுவா*

முதன் முறையாக டாலர் ராஜ தந்திர கொள்கை நிகாராகுவா நாட்டின் மீது பிரயோகிக்கப்பட்டது. வெளியுறவுச் செயலர் நாக்ஸ் பதவி ஏற்ற சமயம் நிகாராகுவாவில் ஒரு புதிய அரசு பதவியேற்றிருந்தது. நிகாராகுவா பல ஐரோப்பிய நாடுகளிடமிருந்து கடன் வாங்கியிருந்தது. அதைச் செலுத்த முடியாமல் இருந்த நிலையில் ஐரோப்பிய நாடுகள் தலையிடக் கூடும் என்ற அச்சம் இருந்தது. புதிய தலைவர் ஜோஸ் ஜெலாயா (Jose Jelaya)-வுக்கு எதிராக நடைபெற்ற கிளர்ச்சிக்கு அமெரிக்க ஆதரவு அளித்தது. இதனால் ஜோஸ் பதவியிலிருந்து விலக்கப்பட்டார். புதிய அரசு 1911இல் அமெரிக்காவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டது. அதன்படி அந்த நாட்டின் கடன் தொகையினை அடைக்க அமெரிக்க வங்கிகளிடம் கடன் பெற்றுக் கொள்ள வேண்டும். இதற்கு ஈடாக நிகாராகுவாவின் சுங்கவரியை அமெரிக்காவிடம் ஒப்படைத்து விட வேண்டும். சுங்க அதிகாரியாக அமெரிக்கர் ஒருவர் நியமிக்கப்பட வேண்டும் என்று முடிவு எடுக்கப்பட்டது, அமெரிக்க அலுவலர்கள் நியமிக்கப்பட்டு சுங்கவரி வசூலிக்கப்பட்டது. இந்தவிதமாக அமெரிக்கா நிகாராகுவாவில் தனது ஆதிக்கத்தை இருபது ஆண்டு காலத்திற்கு நிலைநிறுத்தியது.

நிகாராகுவா ஒரு கால்வாய் வெட்டுவதற்கான நிலப்பகுதியை மூன்று மில்லியன் டாலருக்கு அமெரிக்காவிற்குக் கொடுத்தது. கரிபியன் கடல் பகுதியிலுள்ள கிரேட் கார்ன், லிட்டில் கார்ன் ஆகிய தீவுகளிலும், பசிபிக் கடலில் உள்ள பொன்சகா வளைகுடாவிலம் இராணுவ தளங்களை அமைக்க அமெரிக்கா உரிமை பெற்றது.

## ஹோண்டுராஸ்

நிகாராகுவாவை அடுத்து ஹோண்டுராஸ் நாட்டிலும் அமெரிக்கா தலையிட்டது. 1909இல் அந்நாட்டின் நிதிநிலை மோசமான போது வெளிநாட்டுக் கடன்களை செலுத்த முடியவில்லை. எனவே அமெரிக்க வங்கிகளிடமிருந்து கடன் பெற்றுக் கொண்டு அதற்கு ஈடாக சுங்க வரியை கொடுத்துவிட ஹோண்டுராஸ் கட்டாயப்படுத்தப்பட்டது. ஹாய்த்தி நாட்டிலும் இதேபோல் ஏற்பாடு செய்யப்பட்டது.

டாலர் ராஜதந்திர கொள்கையின் அடிப்படையில் அமெரிக்காவிடமிருந்து போர்க்கப்பல்களை விலைக்கு வாங்க இலத்தீன் அமெரிக்க நாடுகளை அமெரிக்கா கட்டாயப்படுத்தியது. இதன்படி அர்ஜெண்டினா நாடு இரண்டு போர்க்கப்பல்களை வாங்கியது. இதன் மூலம் அமெரிக்க கப்பல் தொழில் வளர்ச்சியடைந்தது. டாலர் ராஜதந்திர கொள்கையின் மூலம் வணிகம், மற்றும் நிதிநிலை; அரசியல் செல்வாக்கு போன்றவற்றில் அமெரிக்கா பெரும் ஆதிக்கம் செலுத்தியது.

## குடியரசுக் கட்சியில் கருத்து வேறுபாடு

குடியரசுக் கட்சியில் உள்ள சீர்திருத்தவாதிகள் டாப்ட்டின் செயல்பாடுகள் திருப்தியில்லை என

விமர்சித்தார்கள். விஸ்கான்சின் மாநிலத்தைச் சேர்ந்த ராபர்ட் லாபோல்ட்டி இந்தக் குழுவிற்கு தலைவராக இருந்தார். 1910இல் ஆப்பிரிக்காவிலிருந்து தியோடர் ரூஸ்வெல்ட் திரும்பி வந்தார். பல ஐரோப்பிய நாடுகளில் தனது கொள்கைகளைப் பற்றி விரிவாக உரையாற்றினார். இலண்டன் நகரில் ஏழாம் எட்வர்ட் மரணமடைந்த போது அந்நிகழ்ச்சியில் கலந்து கொண்டார். டாப்ட் தான் நினைத்தபடி தனது கொள்கைகளை நிறைவேற்றவில்லை எனக் குற்றம் சாட்டினார். 'புதிய தேசியம்' (New Nationalism) என்ற பெயரில் ரூஸ்வெல்ட் மிகத் தீவிரமாக அரசாங்கம் செயல்பட வேண்டும். பொதுமக்களின் நலன்கள் காக்கப்பட வேண்டும் என்று வலியுறுத்தினார். இதனால் டாப்ட்டுடன் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. எனவே மூன்றாவது முறையாக 1912ஆம் ஆண்டுத் தேர்தலில் போட்டியிட விரும்பினார். ஆனால் குடியரசுக் கட்சி இவரை ஏற்றுக்கொள்ளாமல் டாப்ட்டையே மீண்டும் தனது வேட்பாளராக அறிவித்தது. புதிய சீர்திருத்தக் கட்சி ஒன்று உதயமாயிற்று. இக்கட்சியின் சார்பாக தியோடர் ரூஸ்வெல்ட் தேர்தலில் போட்டியிட்டார். இதனால் குடியரசுக் கட்சியில் பிளவு ஏற்பட்டது. இது ஜனநாயக கட்சியினருக்கும் ஒரு நல்ல சந்தர்ப்பத்தை வழங்கியது. நியுஜெர்ஸியின் கவர்னராக இருந்த உட்ரோ வில்சன் ஜனநாயகக் கட்சியின் வேட்பாளராகப் போட்டியிட்டார். வில்சன் 6286000 மக்கள் வாக்குகளையும், 435 தேர்வாளர் குழுவினர் வாக்குகளையும் பெற்று வெற்றி பெற்றார். தியோடர் ரூஸ்வெல்ட் 4126000 மக்கள் வாக்குகளையும், 88 தேர்வாளர் குழுவினர் வாக்குகளையும் பெற்றார். வில்சனின் வெற்றி ஜனநாயகக் கட்சியும் சீர்திருத்தங்களை கொண்டுவர ஒரு வாய்ப்பை பெற்றது புதிய அத்தியாயம் ஒன்று தொடங்கியது எனலாம்.

# அலகு 4.6
# தாமஸ் உட்ரோ வில்சன்
# (1913-1921)

"அரசியலில் நேர்மை, பொதுவாழ்வில் தூய்மை என்ற கொள்கை உடைய பேராசிரியர். உட்ரோ வில்சன் நம்மை உலகப்போரிலிருந்து காப்பார் என அமெரிக்க மக்கள் நம்பினர்."

உட்ரோ வில்சன் ஜனநாயகக் கட்சியின் ஜனாதிபதியாகப் பதவியேற்றது அமெரிக்க வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தை உருவாக்கியது. இவர் பின்பற்றிய கொள்கைகள் அமெரிக்காவை உலக அரசியலில் முக்கியமான பங்கைப் பெறும் நிலை ஏற்பட்டது. நீண்ட இடைவெளிக்குப் பிறகு தென்பகுதிக்காரர் தாமஸ் ஜெபர்சன் மாடிசனுக்குப் பிறகு விர்ஜீனியா மாநிலத்தவர் வெள்ளை மாளிகைக்கு அதிபரானார். நல்ல படித்த பேராசிரியர் ஒருவர் முதன்முதலில் ஜனாதிபதி பதவி பெறுவதை மக்கள் ஆமோதித்தனர். தான் பதவியேற்க வாஷிங்டன் வந்தபோது பிரின்ஸ்டன் பல்கலைக் கழக மாணவர்கள் இவரை வரவேற்று, பதவியேற்பு மண்டபத்திற்கு வழிநடத்திச் சென்றனர். பெரிய மக்கள் கூட்டமும் பின்தொடர்ந்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

உட்ரோ வில்சன் 1856ஆம் ஆண்டு விர்ஜீனியா மாநிலத்தில் ஸ்டாண்டர் என்ற இடத்தில் பிறந்தார்.

கொலம்பியாவில் பள்ளிப் படிப்பையும், கல்லூரிப் படிப்பை 1873இல் டேவிட்சன் கல்லூரியிலும், சட்டக் கல்வியை 1879இல் வர்ஜீனியா பல்கலைக்கழகத்திலும் கற்று முடித்தார். வழக்கறிஞர் தொழிலில் ஈடுபட்ட இவர், மீண்டும் ஆராய்ச்சி கல்விக்காக பால்டிமோரில் உள்ள ஜான்ஹாப்கின்ஸ் பல்கலைக் கழகத்தில் சேர்ந்தார். அங்கு Congressional Government என்ற தலைப்பில் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதி 1885இல் டாக்டர் பட்டம் பெற்றார்.

1902லிருந்து 1910 வரை பிரின்ஸ்டன் பல்கலைக் கழகத்தில் பணியாற்றினார். பேராசிரியராகவும், பின்னர் பல்கலைக்கழகத்தின் தலைவராகவும் பணியாற்றினார். 1911இல் ஜனநாயகக் கட்சியின் சார்பாக நியுஜெர்ஸி மாநில கவர்னராக பதவியேற்றார். சமூக சீர்திருத்தங்களை கவர்னராக இருந்த போதே கொண்டுவந்தவர். 1912ஆம் ஆண்டு ஜனாதிபதி தேர்தலில் ஜனநாயகக் கட்சியின் வேட்பாளராக நிறுத்தப்பட்டு வெற்றி பெற்றார். எளிமையான தோற்றமுடையவராக இருந்தாலும் செயலில் உறுதி மிக்கவராகத் திகழ்ந்தார். பழமையான மரபுகளில் பற்று கொண்டவர். அதே நேரத்தில் சீர்திருத்தங்களை அமல்படுத்துவதில் தீவிரமாகச் செயல்பட்டார். இவரது கொள்கைகள் புதிய சுதந்திரம் New Freedom என்ற பெயரில் அழைக்கப்படுகிறது.

வில்சன் 1912ஆம் வருட ஜனாதிபதி தேர்தலின் போது நிகழ்த்திய கருத்துக்கள் தொகுக்கப்பட்டு New Freedom என்ற நூலாக வெளியிடப்பட்டது. கூட்டு வணிக நிறுவனங்களின் கட்டுப்பாட்டில் இருந்து வரும் சிறு வணிகர்களுக்கு விடுதலை பெற்றுத்தர வேண்டும். பெரிய தொழிலதிபர்களின் பிடியிலிருந்து அரசை விடுவிக்க வேண்டும். சுங்க வரி

சீர்திருத்தப்பட வேண்டும். தொழிலாளர்களுக்கு வசதிகள் செய்து தரப்பட வேண்டும், விவசாயத்திற்கு ஊக்கம் அளிக்கப்பட வேண்டும், புதிய சமுதாயத்தினை உருவாக்க வேண்டும் ஆகிய கருத்துக்களே வில்சனின் புதிய சுதந்திர கோட்பாடுகளாகும். மக்களாட்சி அரசுக்கு புதியதொரு பொருள் கற்பித்ததாக வேண்டும். இயற்கை சாதனங்களைப் போற்றிப் பாதுகாத்து சேமிக்க வேண்டும். மக்களிடம் தடையில்லாத போட்டியிருக்க வேண்டும் என்றார்.

தனது ஆட்சியில் 1913 முதல் 1917 முடிய புதிய சுதந்திர கோட்பாட்டின் கருத்துக்களை நடைமுறைப்படுத்த முற்பட்டார். செல்வத்தின் மூன்று அடிப்படைத் தூண்களாக விளங்கும் (Trusts, Tariffs and Banks) டிரஸ்ட்கள், காப்பு வரிகள், வங்கிகள் ஆகியவற்றை ஒழுங்குபடுத்த வேண்டும் என திட்டமிட்டார்.

### *1. அண்டர்வுட் காப்பு வரிச் சட்டம்* **(Underwood Tariff Act)**

முறைகேடான வணிக நடைமுறைகளையும், அந்நிய நாட்டு வாணிபத்தில் முறைகேடான போட்டிமுறைகளையும் தடை செய்ய இச்சட்டம் கொண்டுவரப்பட்டது. காப்பு வரி 41லிருந்து 27 சதவீதமாகக் குறைக்கப்பட்டது. கம்பளம், இரும்புத்தாது, சர்க்கரை போன்ற இன்றியமையாத பொருட்களின் மீதான காப்பு வரி முற்றிலும் நீக்கப்பட்டது.

### *2. வங்கிகளை சீர்திருத்த கூட்டாட்சி ஒதுக்கீட்டுச் சட்டம்* **(Federal Reserve Act 1913)**

வங்கிகளை சீர்திருத்த கூட்டாட்சி ஒதுக்கீட்டுச் சட்டம் கொண்டு வரப்பட்டது. பணப்புழக்கத்தைக் கட்டுப்படுத்தி வங்கிகளின் அதிகாரத்தையும் செயல்பாட்டையும் பரவலாக்கியது.

- அமெரிக்க ஐக்கிய நாடுகள் பன்னிரெண்டு மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு கூட்டாட்சி ஒதுக்கீடு வங்கி நிறுவப்பட்டது.
- இந்த வங்கிகளின் செயல்பாடுகளை மேற்பார்வையிட வாஷிங்டனில் ஏழு உறுப்பினர் கொண்ட கூட்டாட்சி ஒதுக்கீட்டுக் குழு அமைக்கப்பட்டது.
- 'பெடரல் ரிசர்வ் நோட்டுகள்' என்ற புதிய காகித நாணயங்களை இவ்வங்கிகள் வெளியிடும். நாட்டிலுள்ள எல்லா வங்கிகளும் பெடரல் ரிசர்வ் அமைப்பு என்பதில் உறுப்பினராகும்படி கேட்டுக் கொள்ளப்பட்டன.

இந்தச் சட்டத்தின்படி நாட்டின் மொத்த வங்கி மூலதனத்தில் சுமார் ஐம்பது சதவீதம் இந்த அமைப்பின் மேற்பார்வையில் வந்தது. சரியான நேரத்தில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் நிதி நிலைமை உறுதிப்படுத்தப்பட்டது முதல் உலகப் போருக்கு தயாராக நாட்டை வலுப்படுத்தியது.

### வணிகக் கூட்டு நிறுவனங்கள்

வணிகக் கூட்டு நிறுவனங்களை ஆராய பிரதிநிதிகள் சபை பூஜோ கமிட்டியை அமைத்திருந்தது. தனியார் நிறுவனங்களின் முற்றுரிமை தவறானது. ஷெர்மனின் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டத்தை மேலும் வலுப்படுத்த வேண்டுமென்று காங்கிரசுக்கு வில்சன் சிபாரிசு செய்தார். 1914இல் கூட்டாட்சி வணிகக் கமிசன் சட்டம் கொண்டுவரப்பட்டது. ஐந்து பேர் அடங்கிய குழு அமைக்கப்பட்டது. தனி நபர்களும், நிறுவனங்களும் நியாயமற்ற முறையில் போட்டியிடுவதைத்

தடை செய்ய அதிகாரம் வழங்கப்பட்டது. மேலும் இக்கமிசனின் ஆணைகளை மதிக்காத தொழில் நிறுவனங்களுக்கெதிராக வழக்குத் தொடுப்பதற்கும் அதிகாரம் வழங்கப்பட்டது. தனது ஆட்சிக் காலத்தில் 379 கைவிடு ஆணைகள் (Cease and desist order) பிறப்பிக்கப்பட்டு டிரஸ்ட்கள் கலைக்கப்பட்டன.

### *கிளேட்டன் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டம்*

ஜனநாயகக் கட்சி உறுப்பினர் ஹென்றி கிளேட்டன் என்பவரால் பிரதிநிதிகள் சபையில் இச்சட்டம் கொண்டுவரப்பட்டது. இச்சட்டத்தின்படி

(1) தனி உரிமை பெற்ற வணிக நிறுவனங்கள் பிற நிறுவனங்களின் பங்குகளை வாங்கக் கூடாது.

(2) ஒரு வணிகக் கூட்டு நிறுவனத்தின் நிர்வாகக் குழு உறுப்பினர் மற்றொரு நிறுவனத்தின் நிர்வாகக் குழு உறுப்பினராக இருக்கக் கூடாது.

(3) தொழிலாளர்களின் உழைப்பு ஒரு விளைபொருள் அல்ல என்றும் அது ஒரு வாணிகப் பொருள் என்று விளக்கம் கூறப்பட்டது. அதன்படி தொழிற்சங்கங்களுக்கு கூட்டு நிறுவன எதிர்ப்பு சட்டத்திலிருந்து விலக்கு அளிக்கப்பட்டது. இச்சட்டத்தினை தொழிலாளர்கள் தங்களுக்குக் கிடைத்த பெரும் வெற்றியாகக் கருதினர். தொழிலாளர்கள் சங்கங்கள் அமைக்கவும், வேலை நிறுத்தம் செய்யும் உரிமையைப் பெறவும் இன்னும் சில காலம் காத்திருக்க வேண்டியிருந்தது.

## *விவசாயிகளின் நலன் – ஸ்மித் லீவர் சட்டம் (1914)*

கூட்டாட்சி ஒதுக்கீட்டுச் சட்டத்தின்படி தேசிய வங்கிகள் சொத்து அடமானத்தின் பேரில் விவசாயிகளுக்கு கடன் கொடுக்கலாம் என்று கூறப்பட்டிருந்தது. ஆனால் இது விவசாயிகளுக்கு மன நிறைவு அளிக்கவில்லை. 1914இல் இயற்றப்பட்ட ஸ்மித் லீவர் சட்டப்படி விவசாய செய்திகளையும், புதிய கண்டுபிடிப்புகளையும் விவசாயிகளுக்கு அறிவிக்க ஒரு இயக்கம் தொடங்கப்பட்டது. நில மானிய கல்லூரிகளுக்கு நிதி ஒதுக்கீடு செய்ய இச்சட்டம் வழி வகுத்தது.

## *கூட்டாட்சி பண்ணைக் கடன் சட்டம்*
## (Federal Farm Loan Act 1916)

இச்சட்டத்தின்படி பன்னிரெண்டு கூட்டாட்சி நில வள வங்கிகள் உருவாக்கப்பட்டன. இந்த வங்கிகள் குறைந்த வட்டியில் நீண்ட கால கடன்பெற வழிவகை செய்யப்பட்டது.

## *தொழிலாளர் நலன்*

தொழிலாளர் நலன்களைப் பாதுகாக்க 1915ல் லபாலட் கப்பல் தொழிலாளர் சட்டம் (La Follett Seaman's Act) மாலுமிகள் தொழில் நிலையினை மாற்றியமைத்தது. மாலுமிகளுக்கு கொடுக்கப்பட வேண்டிய குறைந்த அளவு ஊதியம், உணவு, இருப்பிடம் ஆகியவை குறிப்பிடப்பட்டிருந்தது. 1916இல் கொண்டுவரப்பட்ட ஆடம் சன் சட்டப்படி இரயில்வே துறையில் பணிபுரிபவர்களுக்கு எட்டு மணி நேர வேலையும், அதற்குமேல் செய்யும் வேலைக்கு அதிக சம்பளமும் கொடுக்கப்பட வேண்டும் என்றும் வற்புறுத்தியது.

## அரசியலமைப்புச் சட்டத் திருத்தங்கள்

பதினாறாவது அரசியலமைப்புத் திருத்தத்தின்படி மாநிலங்களைக் கலந்து கொள்ளாமலேயே கூட்டாட்சி அரசு வருமான வரி விதிக்கலாம் என்பது சட்டமானது. 1913ஆம் வருட 17வது அரசியலமைப்புத் திருத்தத்தின்படி செனட் சபை உறுப்பினர்கள் இனிமேல் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இது பாப்புலிஸ்ட் கட்சியின் கோரிக்கையாகும். 1919ஆம் வருடம் 18வது அரசியலமைப்புத் திருத்தத்தின்படி மது விலக்கு நாடு முழுவதும் நடைமுறைப்படுத்தப்பட்டது. இது வெற்றியைத் தரவில்லை. ஆயிரக்கணக்கான இரவு விடுதிகள், கள்ளத்தனமாக மது வடித்தல் போன்ற முறைகேடான காரியங்கள் பெருகின. எனவே 1933ஆம் ஆண்டு 21வது அரசியலமைப்புச் சட்டத் திருத்தத்தின்படி 18வது திருத்தம் ரத்து செய்யப்பட்டது. 1920ஆம் வருடம் 19ஆம் அரசியலமைப்பு திருத்தத்தின்படி பெண்களுக்கு வாக்குரிமை வழங்கப்பட்டது. 1933ஆம் வருடம் இயற்றப்பட்ட 20வது அரசியலமைப்புத் திருத்தத்தின்படி ஜனாதிபதி பதவி ஏற்கும் நாள் ஜனவரி இருபது என நிர்ணயிக்கப்பட்டது.

## வெளிநாட்டுக் கொள்கை

உட்ரோ வில்சனின் வெளிநாட்டுக் கொள்கையை அவரது வெளியுறவுச் செயலர் வில்லியம் பிரையன் செயல்படுத்திக் காட்டினார். புதிய ராஜதந்திரம் என்றழைக்கப்பட்ட இவரது கொள்கை சர்வதேச தார்மீக முறையை வற்புறுத்தியது. வில்சனின் ஆட்சிக் காலத்தில் முதல் உலகப் போர் உருவானது. இதனால் ஐரோப்பிய

மற்றும் அண்டை நாடுகள் விவகாரங்களில் அமெரிக்கா தலையிட வேண்டியதாயிற்று.

### மெக்ஸிகோ

மெக்ஸிகோவில் அமெரிக்க முதலாளிகள் எண்ணெய் வயல்கள், ரயில்வே, சுரங்கத்தொழில் ஆகியவற்றில் முதலீடு செய்திருந்தனர். மெக்சிகோவில் ஏற்பட்ட புரட்சிகளின் விளைவாக 1913இல் விக்டோரியா ஹீவர்ட் என்பவர் பதவி ஏற்றார். அப்போது வில்சன் அலபாமாவில் ஆற்றிய சொற்பொழிவில் போர் மூலம் எந்த ஒரு பகுதியையும் அமெரிக்கா சேர்த்துக் கொள்ளாது என்றார். ஆனால் 1914 ஏப்ரலில் டாம்பிகோ என்ற இடத்தில் நடைபெற்ற நிகழ்ச்சியினால் இரு நாடுகளின் உறவில் பாதிப்பு ஏற்பட்டது. மெக்ஸிகோவின் அதிபரின் வீரர்கள் சில அமெரிக்க வீரர்களை கைது செய்தனர். உடனே விடுவிக்கப்பட்டனர். ஆனால் ஹீவர்டா மன்னிப்பு கேட்க வேண்டும் என்றும், அமெரிக்க கொடிக்கு 21 குண்டுகள் முழங்க மரியாதை செய்ய வேண்டுமென்றும் அமெரிக்கா கோரியது. இதற்கு ஹீவர்ட்டா மறுத்தார். வீராகுருஸ் நகரை கைப்பற்ற வில்சன் படைகளை அனுப்பினார். அர்ஜென்டினா, பிரேசில், சிலி ஆகிய நாடுகள் தலையீட்டால் போர் தவிர்க்கப்பட்டது. சமரசம் ஏற்பட்டது.

1914 ஜூலையில் ஹீவர்ட்டா ராஜினாமா செய்தார். கரான்சா என்பவர் புதிய அதிபரானார். அமெரிக்கா இவரை அங்கீகரித்தது. இவருக்கு எதிராக பாஞ்சோவில்லோ என்ற புரட்சியாளர் கிளர்ச்சியில் ஈடுபட்டார். இவரது வீரர்கள் 1916, மார்ச் மாதம் 17 அமெரிக்கர்களை கொன்று விட்டனர். எனவே ஜான் பெர்ஷிப் என்பவர் தலைமையில் வில்சன்

ஒரு படையை அனுப்பினார். மெக்ஸிகோ மக்கள் படையெடுப்பை விரும்பவில்லை. கரான்சாவை எதிர்த்து கிளர்ச்சி செய்தனர். 1917, பிப்ரவரியில் போர் நடவடிக்கைகள் நிறுத்தப்பட்டன. இதற்கிடையில் ஜெர்மனி மெக்ஸிகோவுடன் கூட்டு சேர விருப்பம் தெரிவிக்கவே அமெரிக்கப் படைகள் கரான்சாவுக்கு ஆதரவாக நிறுத்தி வைக்கப்பட்டன.

## ஹெயிட்டி

மேற்கு இந்தியத் தீவுக் கூட்டங்களில் ஒன்றான ஹெயிட்டி இராணுவ சர்வாதிகாரிகளாலேயே ஆளப்பட்டு வந்தது. அமெரிக்கர்கள் இந்நாட்டில் வங்கிகளிலும், இரயில்வே பாதைகளிலும் முதலீடு செய்திருந்தனர். அங்கு ஏற்படும் கிளர்ச்சிகளின் காரணமாக அரசியல் ஸ்திரத் தன்மை ஏற்படவில்லை. 1915இல் நடைபெற்ற கிளர்ச்சியில் அதிபர் லோமிசாம் கொல்லப்பட்டார். வில்சன் அனுப்பிய படைகள் ஹெிட்டியை முற்றுகையிட்டன. அமெரிக்காவின் சொற்படி நடக்க குயேரஸ் என்பவர் ஒப்புக் கொண்டதினால் அவர் அதிபராக்கப்பட்டார். ஹெயிட்டியின் நிதி நிர்வாகமும், வெளியுறவுத்துறையும் அமெரிக்காவின் கட்டுப்பாட்டிற்கு வந்தது. அமெரிக்காவின் காப்பரசாக 1934 வரை ஹெயிட்டி இருந்து வந்தது.

## டொமினிக்கன் குடியரசு

தியோடர் ரூஸ்வெல்ட் காலத்திலேயே இந்நாட்டின் நிதி நிலையை அமெரிக்கா கட்டுப்படுத்தி வந்தது. டொமினிக்கன் அரசாங்கத்தின் செலவினை கட்டுப்படுத்த அமெரிக்க அதிகாரி அனுப்பப்பட்டார். ஆனால் இதனை எதிர்த்து

மக்கள் கிளர்ச்சி செய்தனர். அதிபர் ராஜினாமா செய்தார். உடனே அமெரிக்கா 1916 நவம்பரில் இக்குடியரசை கைப்பற்றியது. போலீஸ் படையையும், நிதி அதிகாரத்தையும் தனது பொறுப்பில் எடுத்துக் கொண்டது. 1924 வரை அமெரிக்காவின் கட்டுப்பாட்டில் இருந்து வந்தது.

*நிகாராகுவா*

1914இல் நிகாராகுவாவுடன் செய்து கொள்ளப்பட்ட பிரையன் சார்மரோ உடன்படிக்கையின்படி மூன்று மில்லியன் டாலர்கள் கொடுக்கப்பட்டு நிகாராகுவாவுக்குச் சொந்தமான தீவுகளையும், கடற்படை தளம் அமைக்கவும் 99 ஆண்டுகளுக்கு குத்தகைக்குப் பெற்றது. 1917இல் இருபத்தைந்து மில்லியன் டாலர்கள் கொடுத்து வெர்ஜின் தீவுகளையும் அமெரிக்கா வாங்கியது. அங்கு வாழ்ந்த நீக்ரோ மக்களுக்கு சொற்ப உரிமைகளே வழங்கப்பட்டன. 1917இல் கியுபாவில் மக்கள் புரட்சி ஏற்பட்ட போது அமெரிக்கப் படைகள் அனுப்பப்பட்டு அந்த நாடும் அமெரிக்க கட்டுப்பாட்டிற்கு கொண்டுவரப்பட்டது. 1921 வரை அமெரிக்க படைகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன.

# அலகு 4.7
# முதல் உலகப் போர்

1914 ஜூன் 28ஆம் தேதி ஆஸ்திரிய இளவரசர் ஆர்ச்டியுக் பெர்டினாண்டு செர்பியா தலைநகர் சராஜிவோவில் சுட்டுக் கொல்லப்பட்டார். இதுவே முதல் உலகப்போருக்கு உடனடி காரணமாயிற்று. ஐந்து வாரங்களுக்குள் ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் உலகப்போரில் சிக்கிக் கொண்டன. ஜெர்மனி, ஆஸ்திரியா, இத்தாலி ஆகிய நாடுகள் ஒரு அணியிலும், இங்கிலாந்து, பிரான்ஸ், ரஷ்யா ஆகிய நாடுகள் மற்றொரு அணியிலும் இணைந்து கொண்டன. போர் ஆரம்பித்த இரண்டு நாளில் 1914 ஆகஸ்ட் 4ல் வில்சன் நடுநிலைப் பிரகடனம் ஒன்றை வெளியிட்டார். அதன்படி அமெரிக்கா நடுநிலை வகிக்கும் என்று அறிவித்தார். போரில் ஈடுபடுவதை அமெரிக்க மக்கள் விரும்பவில்லை. ஆனால் அவர்கள் உள்ளத்தாலும் உணர்வாலும் இங்கிலாந்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள். மொழியாலும் பண்பாட்டாலும் நெருங்கிய உறவு கொண்டவர்கள். ஆங்கிலேயர்கள் ஜனநாயகம் காக்கவே போரிடுகின்றனர் என்று அமெரிக்க மக்கள் கருதினர். பிரான்ஸ் நாட்டின் மீது அமெரிக்க மக்கள் நல்லுறவு கொண்டிருந்தனர். அமெரிக்க சுதந்திரப் போரின்போது தங்களுக்கு பிரான்ஸ் உதவியதை மறக்கவில்லை. வில்சனும் மனதார நேச நாடுகள் பக்கமே பரிவுடன் இருந்தார். ஆனால் வெளியில் நடுநிலை வகிப்பதாகக் கூறிக்கொண்டார்.

நடுநிலை வகித்த அமெரிக்கா இறுதியில் போரில் இங்கிலாந்திற்கு ஆதரவாக களத்தில் இறங்கியது. ஜெர்மனி வெற்றி பெற்றால் அது தங்களின் கோட்பாடுகளுக்கும் நலன்களுக்கும் அழிவை ஏற்படுத்தும் என்று அமெரிக்கா அஞ்சியது. இங்கிலாந்தின் நலனில் ஆர்வம் கொண்டவர்களின் பிரச்சாரம் நேச நாடுகளுக்கு ஆதரவு தரும் போக்கை அமெரிக்க மக்களிடம் ஏற்படுத்தியது. இலண்டனிலிருந்து வெளிவரும் பத்திரிகைகளின் பிரச்சாரம் ஜெர்மனிக்கு எதிராக இருந்தது. போருக்கு ஜெர்மனிதான் காரணம் என விவரிக்கப்பட்டது. போரில் ஜெர்மனி வெற்றி பெற்றால் ஜனநாயகத்தின் மீது ஏதேச்சதிகாரம் வெற்றி பெற்று விடும் என்று பிரச்சாரம் செய்யப்பட்டது.

பெல்ஜியத்தின் நடுநிலையை மீறியது ஜெர்மனிதான் என்று கூறப்பட்டது. ஆங்கில இலக்கியம், வரலாறு, ஆங்கில அரசாங்கம் பற்றி படித்த அமெரிக்க பட்டதாரிகள் இங்கிலாந்திற்கு ஆதரவாகவே இருந்தனர். அமெரிக்காவின் உயர் அதிகாரிகளும் இங்கிலாந்திற்கு ஆதரவு தர வேண்டும் என்ற கொள்கை உடையவர்களாக இருந்தனர். இச்சமயம் இங்கிலாந்தின் ஆதரவாளரான ராபர்ட் லேன்சிங் வெளியுறவுத்துறை செயலரானார்.

1915 மே மாதம் பிரிட்டிஷ் விசாரணை கமிஷன் ஜெர்மனியின் சில கொடுஞ்செயல்களை வெளிப்படுத்தியது. பெல்ஜியத்தில் உள்ள லாவின் நூலகம் அழிக்கப்பட்டது. எடித்கேவல் என்ற செவிலிய பெண்ணை கொலை செய்தது போன்ற செயல்கள் பிரசுரிக்கப்பட்டன. மேலும் இங்கிலாந்தை வெற்றி கொண்டபின் ஜெர்மனி அமெரிக்கா மீது படையெடுக்கும் என்றும் செய்தி பரப்பப்பட்டது.

இவையனைத்தும் நேச நாடுகளின் மீது பரிவை ஏற்படுத்தியது.

### நடுநிலை உரிமை மீறல்

போரிடும் நாடுகள் நடுநிலை நாடுகளின் உரிமைகளை மதிக்கவில்லை. இங்கிலாந்து ஜெர்மானிய துறைமுகங்களை முற்றுகையிட்டது. கடலில் செல்லும் கப்பல்களை சோதனையிட்டது. இதற்கு அமெரிக்க கப்பல் முதலாளிகள் எதிர்ப்பு தெரிவித்தனர். பிரிட்டனுக்கு எதிராக ஜெர்மனி தனது நீர் மூழ்கிக் கப்பல்கள் மூலம் தாக்குதல் நடத்தி பிரிட்டிஷ் கடல் பிரதேசத்தில் உள்ள கப்பல்களை மூழ்கடிக்கப்போவதாக அறிவித்தது. அமெரிக்க கப்பல்களுக்கோ உயிர்களுக்கோ நீர் மூழ்கிக் கப்பல்களினால் பாதிப்பு ஏற்பட்டால் ஜெர்மனியே பொறுப்பு என வில்சன் எச்சரித்தார்.

ஆனால் சில அமெரிக்கக் கப்பல்கள் ஜெர்மனியால் தாக்குதலுக்கு உள்ளாயின. 1915, மார்ச் 28ஆம் தேதி 'பலபா' என்ற பிரிட்டிஷ் கப்பல் தாக்கப்பட்டது. ஒரு அமெரிக்கர் உயிரிழந்தார். 1915, மே 7ஆம் தேதி ஆங்கில பயணக் கப்பல் 'லூசிட்டானியா' மூழ்கடிக்கப்பட்டது. 1198 பேர் இறந்தனர். இதில் 128 பேர் அமெரிக்கர்கள். இதற்கு வில்சன் கடுமையான கண்டனக் குறிப்பு மட்டுமே அனுப்ப முடிந்தது. ஜெர்மனி மன்னிப்பு கோரியது. 1915, ஆகஸ்ட் 9ல் 'அராபிக்' என்ற கப்பல் மூழ்கடிக்கப்பட்டது. இரண்டு அமெரிக்கர்கள் உயிரிழந்தனர். 1916 மார்ச் 24ல் 'சுசெக்ஸ்' என்ற பிரெஞ்சு கப்பல் மூழ்கடிக்கப்பட்டது. இந்நிகழ்ச்சிகள் யாவும் அமெரிக்க மக்களை கோபம் கொள்ளச் செய்தது.

ஜெர்மனிக்கு எதிராக அமெரிக்கா போரில் இறங்க வேண்டும் என்று மக்கள் கோரினர்.

## நேச நாடுகளுடன் வாணிபம்

இங்கிலாந்து, பிரான்ஸ் நாடுகளுக்கு அமெரிக்கா பெருமளவில் போர்த்தளவாடங்களை ஏற்றுமதி செய்தது. அமெரிக்க முதலாளிகள் அதிக லாபம் ஈட்டினர். தொழிலாளர்களுக்கு கூலி உயர்வு கிடைத்தது. 1914ல் 250 கோடி டாலர்களிலிருந்து 1916ல் 550 கோடி டாலர்கள் மதிப்புள்ள பொருட்கள் ஏற்றுமதியாயின. நேச நாடுகள் அமெரிக்க வங்கிகளிடம் கடன் பெற்று போர்த்தளவாடங்கள் வாங்கினர். நேச நாடுகளுக்கு ஆயுதம் அளிப்பதை ஜெர்மனி ஆட்சேபித்தது. ஆயுத விற்பனை சர்வதேச சட்டத்திற்கு முரணானது அல்ல என்று வில்சன் விளக்கமளித்தார்.

## அமெரிக்காவின் தயார்நிலை

அமெரிக்காவின் நடுநிலை காக்கப்பட வேண்டுமானால் போர் முடிவிற்கு கொண்டுவரப்பட வேண்டும் என்று வில்சன் கருதினார். வில்சனின் தூதுவர் கர்னல் ஹவுஸ் ஐரோப்பிய தலைநகரங்களுக்குச் சென்று பேச்சுவார்த்தைகள் நடத்தினார். இங்கிலாந்து வெளியுறவு அமைச்சர் எட்வர்டு கிரேயுடன் ஒப்பந்தம் செய்யப்பட்டது. அதன்படி அமைதிக்காக ஒரு மாநாடு கூட்டுவது என்றும் அதை நேச நாடுகள் ஏற்று ஜெர்மனி ஏற்றுக் கொள்ளாவிட்டால் நேச நாடுகளுக்கு ஆதரவாக அமெரிக்கா போரில் இறங்கும் என்றும் ரகசிய முடிவு எடுக்கப்பட்டது.

ஜெர்மனியின் நீர் மூழ்கிக் கப்பல்கள் பல ஆங்கிலக் கப்பல்களை மூழ்கடித்தது. இதனை Tribune என்ற அமெரிக்க

பத்திரிக்கை கடுமையாக விமர்சனம் செய்தது. பிரிட்டிஷ் கப்பற்படை தோற்கடிக்கப்பட்டால் அமெரிக்க நலன்களுக்கு ஆபத்து ஏற்படும் என எச்சரித்தது. அமெரிக்காவும் தன்னை தயார்படுத்திக் கொள்ள முடிவு செய்தது. 1916ல் இயற்றப்பட்ட தேசிய பாதுகாப்புச் சட்டப்படி 1,75,000 பேர் கொண்ட நிலைப்படை திரட்டப்பட்டது. போர்க்கப்பல்கள் கட்ட 313 மில்லியன் டாலர்கள் ஒதுக்கப்பட்டது. நிவேதா, பென்சில்வேனியா, அகலகோமா என்ற பெரிய போர்க்கப்பல்கள் கட்டப்பட்டன. போர் ஏற்பட்டால் அதனை சமாளிக்க 'தேசிய பாதுகாப்பு கவுன்சில்' உருவாக்கப்பட்டது.

## *1916 தேர்தல்*

1916ஆம் ஆண்டு ஜனாதிபதி தேர்தல் போர் பற்றிய பிரச்சனையை மையமாகக் கொண்டிருந்தது. இரு கட்சிகளுக்குமிடையே போர் பற்றிய கருத்துவேறுபாடுகள் இல்லையென்றாலும் குடியரசுக் கட்சி வேட்பாளர் சார்லஸ் ஹக்ஸ் வெற்றி பெற்றால் அமெரிக்காவை போரில் ஈடுபடுத்துவார் என்ற அச்சம் நிலவியது. இருந்தபோதிலும் இரண்டாம்முறை வில்சனே தேர்ந்தெடுக்கப்பட்டார். 1917 ஜனவரி 22ல் செனட் சபையில் வில்சன் உரையாற்றிய போது 'வெற்றியில்லா சமாதானம்' (Peace without victory) என்ற கோட்பாட்டை வெளியிட்டார். அமெரிக்க மக்கள் கருத்தை ஜெர்மனிக்கு எதிராகத் திரட்டி நேச நாடுகளுக்கு ஆதரவாக போரில் இறங்குவது என திட்டமிட்டார்.

## *எதிர்பாரா நிகழ்ச்சிகள்*

சில எதிர்பாரா நிகழ்ச்சிகள் அமெரிக்காவை போரில் இறங்கும்படி செய்தது. 1917 ஜனவரி 31ஆம் தேதி ஜெர்மனி

தனது அறிவிப்பின் மூலம் கட்டுப்பாடற்ற நீர்மூழ்கித் தாக்குதலில் இறங்கியது. 1917 பிப்ரவரி 3ஆம் தேதி அமெரிக்கக் கப்பல் 'ஹிஸ்டானிக்' மூழ்கடிக்கப்பட்டது. இதனால் ஜெர்மனியுடன் ராஜதந்திர உறவு முறித்துக் கொள்ளப்பட்டது. 1917 மார்ச் 18இல் மேலும் மூன்று அமெரிக்கக் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன. பிரிட்டன் செல்லும் அமெரிக்க வணிகக் கப்பல்களில் தற்காப்புக்காக பீரங்கிகளையும், ராணுவ வீரர்களையும் வைத்துக் கொள்ள வில்சன் ஆணை பிறப்பித்தார். பல வணிகக் கப்பல்கள் துறைமுகங்களில் நிறுத்தி வைக்கப்பட்டன. நேச நாடுகளுக்கு அமெரிக்க உதவி கிடைக்கவில்லை.

அமெரிக்கா போரில் இறங்க முக்கிய நிகழ்ச்சி ஒன்று காரணமாக அமைந்தது. ஜெர்மானிய வெளியுறவு அமைச்சர் சிம்பர்மேன் மெக்ஸிகோவில் இருந்த ஜெர்மானிய தூதர் வான்எக்கார்ட்டிற்கு ஒரு ரகசிய செய்தியை அனுப்பினார். இந்தச் செய்தி இங்கிலாந்து உளவுத்துறையினர் மூலம் அமெரிக்காவிற்கு தெரிவிக்கப்பட்டது. அமெரிக்கா போரில் இறங்கினால் மெக்ஸிகோ ஜெர்மனியுடன் சேர்ந்து போரிட வேண்டும் என்றும், நியுமெக்ஸிகோ, டெக்ஸாஸ், அரிசோனா போன்ற பகுதிகளை மீண்டும் பெற ஜெர்மனி உதவும் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. இந்தச் செய்தியை 1911, மார்ச் 1ல் வில்சன் வெளியிட்டார். இச்செய்தி அமெரிக்கர்களை ஆத்திரமடையச் செய்தது.

இந்நிலையில் ரஷ்யாவில் புரட்சி ஏற்பட்டு புதிய அரசு ஆட்சிக்கு வந்தது. அங்கு நிலவிய குழப்பமான நிலை போர் நடவடிக்கைகளைப் பாதித்தது. பிரான்ஸ் முறியடிக்கப்படும் சூழ்நிலை உருவானது. இந்நிகழ்வுகளால் 1917 ஏப்ரல் 2ஆம்

தேதி ஜெர்மனி மீது போர் பிரகடனம் செய்ய காங்கிரசின் அனுமதியை வில்சன் கேட்டார். காங்கிரசின் ஒப்புதலுடன் 1917, ஏப்ரல் 6ஆம் தேதி புனித வெள்ளியன்று ஜெர்மனி மீது அமெரிக்கா போர் தொடுத்தது.

## *முதல் உலகப் போரில் அமெரிக்காவின் பங்கு*

நடுநிலை நாடுகளின் உரிமைகளைப் பாதுகாக்கவும், பன்னாட்டு சட்டதிட்டங்களைப் பாதுகாக்கவும், உலகில் ஜனநாயகத்தைப் பாதுகாக்கவும் அமெரிக்கா போரில் இறங்குவதாக அறிவித்தது. போரை முடித்து வைப்பதற்கான போர் (War to end war) என்றும் குறிப்பிடப்பட்டது. தாம் ஜெர்மானிய அரசின் மீதுதான் போர் தொடுப்பதாகவும், ஜெர்மானிய மக்கள் மீது அல்ல என்றும், அவர்கள் மீது அன்பும், நட்பும் கொண்டுள்ளதாகவும் அறிவித்தார். போரை திறம்பட நடத்த கீழ்க்கண்ட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

1. ஜார்ஜ்கில் தலைமையில் பொதுத் தகவல் கமிட்டி அமைக்கப்பட்டது
2. ஆறு அம்சங்களைக் கொண்ட தேசிய பாதுகாப்பு கவுன்சில் அமைக்கப்பட்டது.
3. தொழில் அதிபர்கள் கொண்ட ஆலோசனைக் குழு ஒன்றும் அமைக்கப்பட்டது.
4. கப்பல் கம்பெனிகள், ரயில்வேக்கள், தொழிற்சாலைகள் ஆகியவற்றை அரசு எடுத்துக்கொள்ள ஓவர்மேன் சட்டம் ஜனாதிபதிக்கு அதிகாரம் வழங்கியது.
5. சிறப்புப் பணிச் சட்டப்படி பெரும்படை திரட்டப்பட்டது.

6. போர்த்தொழில்கள் வாரியம் நிறுவப்பட்டது.

7. உணவு உற்பத்தியைப் பெருக்கவும், உணவுப் பொருட்களை வாங்கி நேச நாட்டினருக்கு அனுப்பவும் ஹெர்பர்ட் ஹீலர் தலைமையில் உணவு வாரியம் அமைக்கப்பட்டது.

8. ஜெர்மானிய சொத்துக்கள் அமெரிக்க அரசாங்கம் எடுத்துக் கொண்டன.

9. நிதி அமைச்சர் மக்காடூவின் தலைமையில் ரயில்வே வாரியம் அமைக்கப்பட்டது. இவ்வாரியம் ராணுவத்திற்குத் தேவையான பொருட்களை விரைந்து அனுப்பும்.

10. National War Labour Board, War Revenue Board அமைக்கப்பட்டன.

11. ஒற்றர் சட்டம் (1917, ஜுன்), தேச துரோகச் சட்டம் (1917, மே) இயற்றப்பட்டு அரசாங்கத்திற்கு எதிரான தனி நபர்களின் பேச்சுக்களையும், நடவடிக்கை களையும் தடை செய்தது.

### *போர் நடவடிக்கைகள்*

1917 ஜுன் மாதம் அமெரிக்க ராணுவம் மேஜர் ஜான்பெர்ஷிங் தலைமையில் பிரான்சில் தரையிறங்கியது. இதனால் நேச நாட்டுப் படைகள் தைரியமடைந்தது. படிப்படியாக அமெரிக்க இராணுவத்தால் ஜெர்மனி பல போர்களில் தோற்கடிக்கப்பட்டது. மேலும் மாதந்தோறும் மூன்று இலட்சம் அமெரிக்க வீரர்கள் ஐரோப்பா வந்திறங்கினர். 1919ஆம் ஆண்டு தொடக்கத்தில் ஜெர்மனி பிரான்சைத் தாக்கியது. நேச படைகள் எதிர் தாக்குதல்

தொடுத்தன. தளபதி பெர்ஷிங் வெர்டனுக்கு அருகில் புதிய போர்முனையைத் துவக்கினார். இவரது படைகள் மெட்ஸ், செடான் நகர்களை நோக்கி முன்னேறின. 1919 நவம்பர் மாதம் நேசப்படையினர் ஜெர்மானியப் படையை பிரான்சிலிருந்து விரட்டியடித்தனர்.

வில்லியம் சிம்ஸ் என்பவர் தலைமையில் அமெரிக்க கடற்படை பணிபுரிந்தது. 300 போர்க்கப்பல்களும், 75000 கடற்படை வீரர்களும் போரில் ஈடுபட்டனர். பிரிட்டிஷ், பிரெஞ்சு கடற்படைகளின் உதவியுடன் ஜெர்மானிய படகுகள் அழிக்கப்பட்டன. நீர் மூழ்கிக் கப்பல்கள் பாதியளவு அழிக்கப்பட்டன.

### *வில்சனின் 14 அம்சக் கோட்பாடுகள்*

வெற்றியில்லாமல் அமைதி' என்ற கோட்பாட்டை வலியுறுத்திய வில்சன் இப்போது 'வெற்றிக்குப் பிறகு அமைதி' என்ற நிலைக்கு மாறினார். போப் பதினைந்தாம் பெனடிக்ட்டும் பேச்சுவார்த்தையில் ஈடுபடுமாறு கேட்டுக் கொண்டார். 1918 ஜனவரி 8ஆம் தேதி வில்சன் தனது அமைதி திட்டத்தை காங்கிரஸில் சமர்ப்பித்தார். அவைகள்தான் 14 அம்சத் திட்டமாகும்.

1. உலக நாடுகள் தங்களுக்குள் செய்து கொள்ளப்படும் ஒப்பந்தங்கள் அனைத்தும் வெளிப்படையாகவே செய்து கொள்ளப்பட வேண்டும். மறைமுக ஒப்பந்தங்கள் உலக அமைதிக்கு கேடு விளைவிப்பவை ஆகும்.

2. அமைதி மற்றும் போர்க்காலங்களில் கடலில் கப்பல்களைச் செலுத்திட எல்லா நாடுகட்கும் முழு உரிமை அளிக்கப்பட வேண்டும்.

3. அமைதிக்கு இணங்கும் நாடுகளின் மீது விதிக்கப்பட்டிருந்த பொருளாதாரத் தடைகள் நீக்கப்பட வேண்டும்.

4. உள்நாட்டு பாதுகாப்புக்கு மட்டும் குறைந்த அளவு போர்க்கருவிகளை உற்பத்தி செய்து கொள்ள வேண்டும்.

5. குடியேற்ற நாடுகளில் வாழும் மக்களின் விருப்பத்திற்கிணங்க சார்பற்ற வகையில் பங்கிட்டுக்கொள்ள வேண்டும்.

6. ரஷ்யாவிடமிருந்து கைப்பற்றிய பகுதிகளை ஜெர்மனி திருப்பித் தர வேண்டும்.

7. பெல்ஜியத்தின் சுதந்திரம் பாதுகாக்கப்பட வேண்டும். ஜெர்மன் படைகள் அங்கிருந்து வெளியேற வேண்டும்.

8. பிரான்சிடமிருந்து கைப்பற்றிய பகுதிகள் அனைத்தும் திருப்பித் தரப்பட வேண்டும். குறிப்பாக 1871இல் ஜெர்மனி பெற்ற அல்சேய்ஸ், லொரைன் பகுதிகள் பிரான்சிற்கு தரப்பட வேண்டும்.

9. தேசிய உணர்வின் அடிப்படையில் இத்தாலியின் எல்லைகள் வரையறுக்கப்பட வேண்டும்.

10. ஆஸ்திரிய, ஹங்கேரி நாட்டு மக்களுக்குத் தன்னுரிமை வழங்கப்பட வேண்டும்.

11. பால்கன் நாடுகளின் எல்லைகள் வரையறுக்கப்பட வேண்டும். ருமேனியா, செர்பியா, மாண்டிநெக்ரோ ஆகிய நாடுகளிலிருந்து அந்நிய படைகள் வெளியேற வேண்டும். கடல் பகுதியை அடைய செர்பியாவிற்கு வழி ஒன்று அமைத்துத் தரப்பட வேண்டும்.

12. துருக்கி பேரரசிற்கு அதன் பகுதிகளில் இறைமை தன்மை வழங்கப்பட வேண்டும். பிற பகுதிகளில் மக்கள் தன்னுரிமை பெற வழி செய்யப்பட வேண்டும். டார்டனல்ஸ் ஜலசந்தி உலக நாடுகளின் வாணிபத்திற்கு திறந்து விடப்பட வேண்டும்.

13. போலந்து தன்னுரிமை பெற்ற நாடாக வேண்டும். அதற்கு கடல்பகுதியை அடைய வழி அமைத்துத் தர வேண்டும்.

14. உலக நாடுகள் யாவும் தங்களின் பிரச்சனைகளை தீர்த்துக் கொள்ள சர்வதேச சங்கம் ஒன்றை நிறுவ வேண்டும்.

### *போரின் முடிவு*

நேச நாடுகளின் தாக்குதலால் ஜெர்மனி தோல்வியைத் தழுவியது. ஜெர்மனியின் தோல்விச் செய்தியை மன்னர் கெய்சர் வில்லியத்திடம் அந்நாட்டு தளபதிகள் லுடன்டார்ட் ஹிண்டன்பர்க் தெரிவித்தனர். வில்சனின் 14 அம்சத் திட்டப்படி அமைதி ஒப்பந்தம் செய்து கொள்ள ஜெர்மனி சம்மதித்தது. ஜெர்மனியின் புதிய சான்சலர் இளவரசர் மாக்ஸ் 1918ஆம் ஆண்டு அக்டோபர் 3ஆம் தேதி ஒப்பந்தத்தில் கையெழுத்திட சம்மதித்தார். நவம்பர் 9ஆம் தேதி கெய்சர் முடிதுறந்து நெதர்லாந்திற்கு ஓடினார். இறுதியாக 1918 நவம்பர் 11ஆம் தேதி காலை 11 மணியளவில் அமைதி ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டது. முதல் உலகப்போர் முடிவிற்கு வந்தது.

## பாரீஸ் அமைதி உடன்படிக்கை 1919

பிரான்சின் தலைநகர் பாரீஸீக்கு அருகிலுள்ள வெர்செய்ல்ஸ் மாளிகையில் மாநாடு கூட்டப்பட்டது. 32 நாடுகளின் பிரதிநிதிகள் அழைக்கப்பட்டனர். ஜெர்மனி, ஆஸ்திரியா, பல்கேரியா, துருக்கி அழைக்கப்படவில்லை. 1918இல் நடைபெற்ற பிரதிநிதிகள் சபை தேர்தலில் குடியரசுக் கட்சியினர் பெரும்பான்மை பெற்றனர். இருந்தபோதிலும் வில்சன் குடியரசுக் கட்சியின் தலைவர்களை அழைத்துச் செல்லாமல் தான் மட்டும் பாரீஸ் சென்றார். அமைதி பேச்சுவார்த்தைகள் 1919 ஜனவரி முதல் ஜூன் வரை நடைபெற்றது. அமெரிக்காவின் வில்சன், பிரான்சின் ஜார்ஜ் கிளமன்சோ, இங்கிலாந்தின் லாயிட் ஜார்ஜ் ஆகியோர்தான் முடிவுகள் எடுத்தனர். வில்சன் தனது பதினான்கு அம்சத் திட்டத்தின் அடிப்படையில் முடிவுகள் அமைய வேண்டும் என எதிர்பார்த்தார். ஐரோப்பிய நாடுகளோ பழிக்குப்பழி வாங்க வேண்டும் என்ற அடிப்படையில் இருக்க வேண்டும் என விரும்பினர். போருக்கு நஷ்டஈடும், ஜெர்மனிய பகுதிகளிலிருந்து நிலங்களையும் அபகரிக்க வேண்டும் என விரும்பினர். ஆனால் வில்சனின் கணிப்பு சரியானதாக இல்லை. இங்கிலாந்து, பிரான்ஸ், இத்தாலியின் கட்டுப்பாட்டிற்கு வில்சன் பணிய வேண்டியதாயிற்று. அவருடைய சில கருத்துக்கள் மட்டுமே ஏற்றுக் கொள்ளபபட்டன.

ஜெர்மனி தான் கைப்பற்றிய நிலங்கள் அனைத்தையும் திருப்பித்தர வேண்டும். மக்களின் சுயநிர்ணயக் கோட்பாட்டின்படி செக்கோஸ்லோவாக்கியா, யுகோஸ்லாவியா உருவாக்கப்பட வேண்டும். ஜெர்மனியின்

குடியேற்ற நாடுகள் விடுவிக்கப்பட்டு புதிதாக அமைக்கப்பட உள்ள சர்வதேச சங்கத்திடம் ஒப்படைக்கப்பட வேண்டும் போன்றவை தீர்மானிக்கப்பட்டன.

வில்சனின் மகத்தான வெற்றி சர்வதேச சங்கம் உருவானதுதான். அதன் நோக்கங்கள் உடன்படிக்கையில் முதல் ஆறு ஷரத்துக்களுடன் இணைக்கப்பட்டது. சர்வதேச சங்கத்தின் அலுவலகம் ஸ்விட்சர்லாந்து நாட்டில் ஜெனிவா நகரில் அமைக்கப்பட்டது. இச்சங்கத்தில் 42 நாடுகள் உறுப்பினர்களாகச் சேர்ந்தனர். 1935இல் 62 நாடுகள் உறுப்பினர்களாக இருந்தனர். 1936க்குப் பிறகு இச்சங்கம் செயல்பட முடியவில்லை. வில்சனால் உருவாக்கப்பட்ட இச்சங்கத்தில் அமெரிக்கா இணையவில்லை.

வில்சன் தனது சமாதான ஒப்பந்தத்தை செனட் சபையின் ஒப்புதலுக்குச் சமர்ப்பித்தார். செனட் சபையில் குடியரசுக் கட்சியினர் பெரும்பான்மை பலத்துடன் இருந்ததினால் வில்சனின் கோரிக்கை நிறைவேற்றப்படவில்லை. சர்வதேச சங்கத்தில் அமெரிக்கா சேருவதை எதிர்த்தனர். அப்படிச் சேர்ந்தால் வெளிநாட்டு விவகாரங்களில் அமெரிக்கா தனது சுதந்திரத்தை இழந்துவிடும் எனக் கருதினர். மேலும் பாரீஸ் மாநாட்டில் தங்களுக்குரிய பிரதிநிதித்துவம் வழங்கப்படவில்லை என குற்றம் சாட்டினர். வில்சனின் உடன்படிக்கையை சபையில் தோற்கடிக்க முடிவு செய்தனர். வில்சனின் அரசியல் எதிரி ஹென்றி கபாட் லாட்ஜ் செனட்டில் வெளிவிவகார ஆய்வுக்குழுவின் தலைவராக இருந்தார். இவரே வில்சனின் திட்டத்தை முறியடித்தவர்.

வில்சன் தனது முடிவுகளை மக்களிடம் எடுத்துக்கூற நாடு முழுவதும் பயணம் மேற்கொண்டார். சொற்பொழிவுகள் ஆற்றினார். பாரீஸ் மாநாட்டில் ஓய்வில்லாமல் உழைத்ததினாலும், சுற்றுப் பயணத்தாலும் உடல் நலிவுற்றார். இதற்கிடையில் செனட் மன்றம் ஒப்பந்தத்தில் சில திருத்தங்கள் செய்யப்பட வேண்டும் என்று கூறியது. இறுதி வாக்கெடுப்பின்போது நிராகரிக்கப்பட்டது. வில்சனின் செல்வாக்கும் குறையலாயிற்று. 1920 ஜனாதிபதி தேர்தலில் குடியரசு கட்சியின் வேட்பாளர் வாரன் ஹார்டிங் வெற்றி பெற்றார். வில்சன் 1924, பிப்ரவரி 3இல் காலமானார். உட்ரோ வில்சனுக்கு உலக சமாதானத்திற்கான நோபல் பரிசு வழங்கப்பட்டது. இது அவருக்கு சற்று ஆறுதல் தந்தது.

### *போரின் விளைவுகள்*

அமெரிக்க வாழ்க்கை முறையில் பல மாற்றங்கள் ஏற்பட்டன. உணவு விநியோகம், ரயில் பாதைகள், தொழிற்துறை அனைத்தும் அரசின் மேற்பார்வையில் நடைபெறலாயிற்று. அமெரிக்க தொழில் உற்பத்தியும், ஏற்றுமதி வர்த்தகமும் இருமடங்காக உயர்ந்தது. விலைவாசிகள் உயர்ந்தன. ஊதியங்களும் அதிகரிக்கப்பட்டன. தேசிய வருமானமும் பெருகியது. பொருளாதாரம் மேம்பாடு அடைந்தது. உலகிலேயே பொருளாதாரத்திலும், இராணுவ வலிமையிலும் அமெரிக்கா தலைசிறந்த நாடாக மாறியது. அமெரிக்காவிற்குள் நுழையும் குடியேற்றத் தொழிலாளர்களை கட்டுப்படுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. 18வது அரசியல் சட்டத்திருத்தத்தின்படி மது விலக்கு அமல் நடத்தப்பட்டது.

19வது திருத்தத்தின்படி பெண்களுக்கு வாக்குரிமை வழங்கப்பட்டது.

இப்போரில் அமெரிக்கா 22000 கோடி டாலர்கள் செலவு செய்தது. 1,25,000 அமெரிக்க வீரர்கள் உயிரிழந்தனர். அமெரிக்கா 15 இலட்சம் இராணுவ வீரர்களை பயன்படுத்தியது. 44000 ஜெர்மானியர்கள் கைது செய்யப்பட்டனர். 1400 டாங்குகளையும், 755 விமானங்களையும் அமெரிக்கர்கள் வீழ்த்தினர்.

# அலகு 5

5.1. முதல் உலகப் போருக்குப் பின் இயல்பு நிலைக்குத் திரும்புதல்

5.2. வாரன் ஹார்டிங் - 1921-1923

5.3. கால்வின் கூலிட்ஜ் - 1923-1929

5.4. ஹெர்பர்ட் ஹீவர் பெரும் மந்தம் - 1929-1933

5.5. பிராங்ளின் ரூஸ்வெல்ட் 1933-1945

புதிய பொருளாதாரக் கொள்கை

வெளிநாட்டுக் கொள்கை

5.6. இரண்டாம் உலகப் போரில் அமெரிக்காவின் பங்கு

போரின் போக்கு

விளைவுகள்

## அலகு 5.1
# முதல் உலகப் போருக்குப் பின் இயல்பு நிலைக்கு திரும்புதல்

முதல் உலகப்போர் முடிவுற்றது கண்டு அமெரிக்கர்கள் பெரும் ஆறுதல் அடைந்தனர். ஐரோப்பியர்களும் போர்க்கால கெடுபிடிகளிலிருந்து விடுதலை பெற்றுவிட்டதாக உணர்ந்தனர். அமெரிக்காவும் போர்க் கெடுபிடிகளிலிருந்து விடுபட விரும்பியது. உலகப்போர் தங்களின் வழக்கமான வாழ்க்கை முறையை மாற்றிவிட்டது என்று மக்கள் ஆதங்கப்பட்டனர். எனவே போருக்கு முந்தைய நிலைக்குத் திரும்ப வேண்டும் என்பது அமெரிக்கர்களின் விருப்பமாக இருந்தது. ஐரோப்பிய நிலவரமும், வில்சனின் கோட்பாடுகளும் தங்களைத் தேவையில்லாமல் ஐரோப்பிய பிரச்சினைகளில் சிக்க வைத்துவிட்டது. எனவே இவற்றிலிருந்து மீள வேண்டும் என்று எண்ணிய மக்கள் 1920 ஜனாதிபதி தேர்தலில் மாற்றுக்கட்சி குடியரசு கட்சி, வேட்பாளரை வெற்றி பெறச் செய்தனர். போர்க்காலத்தில் கடைப்பிடிக்கப்பட்ட அரசு கட்டுப்பாடுகள், தனி நபரின் சில உரிமைகளில் தலையிட்டது, பெரும் வணிகர்களை கட்டுப்படுத்திய நடவடிக்கைகளை விரும்பவில்லை. இனி நூற்றுக்கு நூறு அமெரிக்க தன்மையுடன் விளங்க வேண்டும் என எண்ணினர். ஆனால் சற்று பின்னோக்கித் திரும்பி பார்த்தால் குடியரசு கட்சியினர் செய்தது சரிதானா என்பது விளங்கும்.

குடியரசு கட்சியினர் இப்போது (Isolation) தனித்திருத்தல் கொள்கையின் மீது ஆர்வம் காட்டுகின்றனர். இக்கட்சியைச் சேர்ந்த யுலைசைஸ் கிராண்ட், சீவர்டு போன்றவர்கள் கரீப்பிய கடல் மற்றும் பசிபிக் பிராந்தியத்தில் விரிவடைய வேண்டும் என்று கூறியவர்கள். வெளியுறவுச் செயலர் பிளெய்ன் பரந்த அமெரிக்க கோட்பாட்டை (Pan Americanism) வலியுறுத்தியவர். வில்லியம் மெக்கன்லியோ ஸ்பெயினுடன் போர் புரிந்து பசிபிக் கடலில் உள்ள பிலிப்பைன்ஸ் போன்ற குடியேற்ற நாடுகளை ஏற்படுத்தியவர். இதற்கும் மேலே தியோட் ரூஸ்வெல்ட் தனது முற்போர்க்கான கொள்கைகள் மூலம் அமெரிக்கா ஒரு உலக பேரரசு என்பதை உணர்த்தியவர். இதன் தொடர்ச்சியாக உட்ரோ வில்சன் முதல் உலகப்போரை முடிவிற்குக் கொண்டுவர பாரீஸ் சமாதான உடன்படிக்கையை கொண்டு வந்தவர். அதன் மூலம் உருவாக்கப்பட்ட சர்வதேச சங்கம் வெற்றிகரமாகச் செயல்படாமலிருக்க வேண்டிய வழிகளில் அமெரிக்கர்கள் ஈடுபடுவது "ஒரு கோழைத்தனமான, மனித இனத்தின் நம்பிக்கைகளை காட்டிக்கொடுத்த மோசமான செயல்" என பேராசிரியர் நெவின் கருதுகின்றார்.

### *1920இல் அமெரிக்கா*

இப்போது அமெரிக்காவில் 3023383 சதுர மைல் பரப்பளவில் 48 மாநிலங்களும் 106.5 மில்லியன் மக்களும் வாழ்ந்தனர். இது தவிர தனது நிலபரப்பிற்கு அடுத்ததாக அலாஸ்காவில் 55000 மக்களும், ஹவாயில் 255000 மக்களும் வசித்தனர். அமெரிக்க குடியுரிமைபெற்ற 1.3 மில்லியன் பியூருட்டோ நீக்ரோவினரும், பசிபிக் கடல் பிராந்தியத்தில் உள்ள குவாம், சமோவா, மிட்வே விர்ஜின்,

வேக் தீவுகளில் வாழ்ந்தவர்களும் அமெரிக்காவின் கட்டுப்பாட்டின்கீழ் வந்தனர். இதுதவிர பனமாகால்வாய் பகுதி, பிலிப்பைன்ஸ் பகுதியிலும் தங்களது மேலாதிக்கத்தை செலுத்தி வந்தனர்.

ஐரோப்பாவில் ரஷ்யாவில் ஏற்பட்ட புரட்சியினால் கம்யூனிஸ்ட்கள் செல்வாக்கு பெறலாயினர். போருக்கு முன் அமெரிக்கா அபரிதமான தொழில் வளர்ச்சி படைத்திருந்தது. நாட்டின் செல்வமும் பொருளாதாரமும் உயர்ந்தது. ஆனால் இந்த உயர்வுக்கு பாடுபட்ட தொழிலாளர்களின் வாழ்வு உயரவில்லை. எனவே தொழிலாளர்கள் சோசலிச கொள்கைகளில் நம்பிக்கையை வளர்த்தனர். வேலை நிறுத்தங்களில் ஈடுபடலாயினர். நியுயார்க் நகரில் லால் தெருவிலுள்ள நிதியாளார் J.P.மார்கனின் அலுவலகங்களுக்கு அருகே வெடிகுண்டுகள் வெடிக்கப்பட்டன. இது கம்யூனிஸ்ட்களின் வேலை என்று கருதிய அரசு ஆறு ஆயிரம் கம்யூனிஸ்ட் தோழர்களை கைது செய்தது. நியுயார்க் சட்டமன்றத்திலிருந்த ஐந்து சோசலிஸ்ட் உறுப்பினர்கள் வெளியேற்றப்பட்டனர். இந்த கம்யூனிஸ்ட்களினால் ஏற்பட்ட செஞ்திகில் அமெரிக்கர்களை சர்வதேச சங்கம் போன்ற பிரச்சினைகளை பற்றி கவனிக்க வழியில்லாமல் செய்துவிட்டது. எனவே போருக்கு முந்தைய நிலையையே அமெரிக்கர்கள் விரும்பினர். இதன் காரணமாகவே குடியரசு கட்சி வேட்பாளரை வெற்றி பெறச் செய்தனர்.

# அலகு 5.2
# வாரன் ஹார்டிங் (1921-1923)

"முதலில் அமெரிக்காவை ஸ்திரப்படுத்துவோம்.
முதலில் அமெரிக்காவை வளமடைய வைப்போம்.
முதலில் அமெரிக்காவை நினைப்போம்.
அமெரிக்காவை முதலில் உயர்த்துவோம்."

வாரன் ஹார்டிங்.

அமெரிக்காவின் 29வது ஜனாதிபதியாக குடியரசு கட்சியைச் சேர்ந்த வாரன் ஹார்டிங் தேர்ந்தெடுக்கப்பட்டார். கால்வின் கூலிட்ஜ் துணை ஜனாதியானார். ஹார்டிங் ஒஹையோ மாநிலத்தைச் சேர்ந்தவர். ஆரம்பத்தில் ஒரு பத்திரிகை உரிமையாளராக இருந்தார். ஒஹையோ மாநில செனட்டில் நான்கு ஆண்டுகள் உறுப்பினராக இருந்தார். 1915 முதல் அமெரிக்க செனட் மன்றத்தின் உறுப்பினராகவும் இருந்தார். இவர் அழகான தோற்றமுடையவர். தனது அன்பான புன்னகையினாலும், ஆதரவான கைகுலுக்குதலினாலும் மக்களை கவர்ந்தவர். ஆனால் நிர்வாகத்தில் திறமையற்றவர். வில்சனுக்கு நேர் எதிரானவர். வெள்ளை மாளிகையை பொது மக்களுக்கு திறந்து விட்டார். வில்சனின் பதவிக் காலத்தில் வெள்ளை மாளிகையுனுள் பொதுமக்களை அனுமதிக்கவில்லை. ஹார்டிங் தன்னை புகழ்கிறவர்களுக்கு பதவிகள் வழங்க தயங்கவில்லை. 'ஒஹையோ கூட்டாளிகளுடன்' (OHIO GANG) உல்லாசமாக

பொழுதைக் கழித்தவர். அக்கூட்டாளிகள் அரசியலில் ஆதாயம் தேட தலைப்பட்டனர்.

முதலில் அமெரிக்காவை ஸ்திரப்படுத்துவோம். முதலில் அமெரிக்காவை வளமடைய வைப்போம். முதலில் அமெரிக்காவை நினைப்போம். அமெரிக்காவை முதலில் உயர்த்துவோம் என்று தனது தேர்தல் பிரச்சாரத்தில் கூறியவர். சர்வதேச சங்கத்தில் சேர்வது இறையாண்மையை சரணடையச் செய்வதற்குச் சமம் என்று கூறி சேர மறுத்தார்.

குடியரசு கட்சியினர் போர்க்காலத்தில் விதிக்கப்பட்ட அரசின் கட்டுப்பாடுகளை நீக்க வேண்டும் என விரும்பினர். வாணிபமும் தொழில்துறையினரும் சுதந்திரமாக தொழில் புரிய நினைத்தனர். அதற்கேற்ப அமெரிக்காவின் மிகப்பெரிய பணக்காரரான ஆண்ட்ரூ மெல்லன் நிதித்துறை செயலர் ஆக்கப்பட்டார். இவரது அமைச்சரவையில் இரண்டு திறமைமிக்கவர்கள் இருந்தனர். ஒருவர் சார்லஸ் இலான்ஸ் ஹக்ஸ் வெளியுறவுச் செயலர், மற்றொருவர் ஹெர்பர்ட் ஹீவர் வர்த்தகத்துறை செயலராக பணிபுரிந்தார். உள்துறை செயலராக ஆல்பர்ட்பால், அட்டார்னி ஜெனரல் ஹாரி.M.டாகெர்ட்டி (DAUGHETY) ஆகிய இருவர் ஊழல் பேர்வழிகள். இவர்களது செயல்களால் ஹார்டிங்கின் நிர்வாகம் மோசமான பெயர்பெற்றது. ஆனால் ஹார்டிங் மக்களிடம் செல்வாக்கு பெற்றிருந்தார். தொழில் பிரமுகர்களிடம் 'இவர் மிகவும் திருப்தியான ஜனாதிபதி' என பெயர் பெற்றிருந்தார். 1921 ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட குடியேற்றச்சட்டம் அனைவராலும் வரவேற்கப்பட்டது. ஏனெனில் அமெரிக்காவிற்குள் நுழையும் வெளிநாட்டு உழைப்பாளிகளை ஒட்டுமொத்தமாக தடைசெய்தது. 1921ஆம் ஆண்டு அமெரிக்கா ஜெர்மனியுடன்

தனியே அமைதி உடன்படிக்கை செய்துகொண்டது. வாஷிங்டன் மாநாடு இவருக்கு ஒரு நல்ல பெயரைத் தேடித்தந்தது. போர்டினி மக்கும்பர் காப்புவரிச்சட்டம் 1921இல் கொண்டுவரப்பட்டது. இதன் மூலம் காப்புவரி 38 சதவீதம் அதிகரிக்கப்பட்டது. இதன் நோக்கம் போர்க்காலத்தில் ஆரம்பிக்கப்பட்ட இரசாயன மருந்து கம்பெனிகளைக் காப்பதற்குத்தான்.

இவரது நிர்வாகத்திற்கு கெட்ட பெயர் உருவாக்கிய செயல்கள் பல நடந்தேறின. உள்துறை செயலர் ஆல்பர்ட்பால் அரசுக்குச் சொந்தமான வியோமிங்கிலிருந்த டிபாட்டோம் (Teapotdome) என்ற இடத்திலிருந்தும், எல்க்ஹில்ஸ் மற்றும் கலிபோர்னியா எண்ணெய் சேமிப்பு கிடங்கிலிருந்தும் திருட்டுத்தனமாக எண்ணெய் எடுத்துக்கொள்ள மம்மூத் ஆயில் கம்பெனிக்கு அனமதியளித்தார். இந்த குற்றத்திற்காகத் தண்டிக்கப்பட்டார். போரில் ஈடுபட்டோரின் நலன்களைக் கவனிக்கும் துறைக்கு கர்னல் போர்பஸ் நியமிக்கப்பட்டார். இவர்மீது ஊழல் குற்றச்சாட்டுகள் எழுந்தன. அதற்குமுன் தனது பதவியை ராஜினாமா செய்தார். இவரைப்பற்றி விசாரணை மேற்கொண்ட போது பல லட்சம் டாலர்கள் சுருட்டப்பட்டது கண்டுபிடிக்கப்பட்டது. 1923ஆம் ஆண்டு கோடையில் அலாஸ்கா பயணம் மேற்கொண்டார். திரும்பும்போது உடல்நலக்குறைவு ஏற்பட்டு சில நாட்களில் மரணமடைந்தார். (1923, ஜுன் 20)

## வெளிநாட்டுக் கொள்கை

வெளியுறவுச் செயலர் சார்லஸ்ஹக்ஸ் மிகத்திறம்பட வெளிநாட்டு விவகாரங்களில் செயல்பட்டார். வில்சனின்

கொள்கையிலிருந்து பின்வாங்கி, தனித்திருக்கும் கொள்கையை மேற்கொண்டார். பிறநாட்டுப் பிரச்சினைகளிலிருந்து விலகிக்கொள்ளுதல் என்ற கொள்கையை கடைப்பிடித்தனர். இதன் காரணமாகவே வெர்சேய்ஸ் உடன்படிக்கை நிராகரிக்கப்பட்டது. ஜெர்மனியுடன் தனியே 1921இல் அமைதி ஒப்பந்தம் செய்யப்பட்டது.

ஆனால் பல சக்திகள் அமெரிக்காவை உலக விவகாரங்களில் தலையிட வைத்தது. போருக்குப்பிறகு மறுபடியும் உலக வர்த்தகத்தை எப்படி வளர்ப்பது என்பது பற்றி தீவிரமாக ஆலோசிக்கப்பட்டது. அமெரிக்காவின் உற்பத்திப் பொருட்களுக்கு சந்தைகளைத் தேடுவதும், தொழிற்துறைக்குத் தேவையான மூலப்பொருட்கள் பெறுவதிலும் ஈடுபடும்போது வெளிநாடுகளுடன் தொடர்பு வைத்துக் கொள்வது அவசியமானதாக இருந்தது. வர்த்தகத்தைப் பெருக்க கடல் கடந்த பிரதேசங்களில் முதலீடு செய்ய வேண்டியிருந்தது. இப்போது அமெரிக்காவில் மூலதனம் மிகுதியாக இருந்தது. 1930இல் 300 கோடி டாலர்கள் தென் அமெரிக்காலிலும், 390 கோடி டாலர்கள் கனடாவிலும் முதலீடு செய்திருந்தனர். ஐரோப்பாவில் இதற்கும் மேலேயே முதலீடு செய்திருந்தனர். அமெரிக்கர்கள் பல தொழிற்சாலைகள், சுரங்கங்கள், வணிக வளாகங்கள், காடுகள் மற்றும் நிலங்கள் யாவும் தென்அமெரிக்கா, கனடா, மற்றும் ஐரோப்பிய நாடுகளில் பெற்றிருந்தனர். ஹென்றிபோர்டு தனது மோட்டார்கார் தொழிற்சாலைகளையும், வுல்ஓர்த்தினுடைய 6 பென்னி கடைகள் இங்கிலாந்து மற்றும் பல ஐரோப்பிய நகரங்களிலும்

ஆரம்பித்திருந்தனர். அமெரிக்காவின் ஸ்டாண்டர்டு ஆயில் கம்பெனி, மத்திய கிழக்கு மற்றும் டச்சு கிழக்கிந்திய தீவுகளிலும் எண்ணெய் கிணறுகளை வைத்திருந்தன. இவ்வாறு இருக்கும் போது பிற நாடுகளில் என்ன நடக்கிறது என்பதைப்பற்றி கவலைப்படாமல் இருக்க முடியுமா?

போரினால் அமெரிக்காவிற்கும் ஐரோப்பிய நாடுகளுக்குமிடையே ஒரு நெருக்கத்தை ஏற்படுத்தியிருந்தது. நேச நாடுகள் ஆயிரம் கோடி டாலர்கள் கடன் பெற்றருந்தன. இந்த போர்க் கடனை எப்படி திரும்ப பெறுவது என்பது ஒரு நெருடலாகவே இருந்து வந்தது. அமெரிக்காவின் போர் முயற்சிகளுக்கும், அமெரிக்கப் போர்த்தளவாடங்கள் வாங்கவும் அந்தக்கடன் அமெரிக்காவிலேயே செலவிடப்பட்டது என்று நேச நாடுகள் கூறின. 'கடன் தானே வாங்கினீர்கள், திருப்பித் தர வேண்டாமா?' என்பது கூலிட்ஜின் வாதம். எனவே நேச நாடுகள் கடனை திருப்பித்தர வேண்டும் எனக் கோரினார்கள். இது ஒரு மோசமான சூழ்நிலையை உருவாக்கியது. முதலில் கடன் மிகவும் அதிகம். சாதாரண நாட்களிலே இதைத் திருப்பித் தருவது சிரமம். அதுவும் போர் முடிந்து நொடித்துப் போயிருக்கும் இந்த நேரத்தில் எப்படி திருப்பித்தர இயலும்?. ஜெர்மனி நஷ்ட ஈடு தரும்பட்சத்தில் நேச நாடுகள் இக்கடனை திருப்பி செலுத்த முடியும் ஆனால் ஜெர்மனி அதிகப்படியான நஷ்ட ஈட்டை தரும் சூழ்நிலையில் இல்லை. மூன்றாவது அமெரிக்காவின் புதிய காப்புவரிகள் அந்நிய பொருட்களை இறக்குமதி செய்ய தடையாக இருந்தது. நேச நாடுகள் அமெரிக்காவிற்குத் தேவையான பொருட்களை அனுப்பித்தான் கடனை கரைக்க முடியும். இதற்கு அமெரிக்க

காப்புவரிகள் தடையாக அல்லவா உள்ளது. இவைகளைச் சமாளிக்க சில முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

1922இல் கடன் நிதி கழகம் ஒன்று துவக்கப்பட்டது, தனிப்பட்ட ஒப்பந்தங்கள் செய்து கொள்ள அனுமதிக்கப்பட்டது. நீண்ட காலத் தவணைகள் 1985ஆம் ஆண்டு வரை வழங்கப்பட்டன. ஏற்கனவே கூறப்பட்ட வட்டியில் 5 சதவீதம் குறைக்கப்பட்டது. மேலும் நாடுகளின் தன்மைக்கு ஏற்பவும் குறைக்கப்பட்டது. பிரான்ஸிற்கு 1.6 சதம், இத்தாலிக்கு 0.4 சதம் வட்டி கணக்கிடப்பட்டது. இதற்காக 1924இல் டேவ்ஸ் திட்டமும் 1929இல் யங் திட்டமும் கொண்டு வரப்பட்டது. ஆனாலும் நேச நாடுகள் மிகவும் கொஞ்சமாகத்தான் செலுத்த முடிந்தது. ஒரு மகிழ்ச்சியான விசயம் என்னவென்றால் கடன் பெற்ற நாடுகள் எல்லாம் அமெரிக்காவின் முயற்சிகளுக்கு ஒத்துழைப்பு தருவதாகக் கூறின. சர்வதேச சங்கத்தின் ஒரு சில நடவடிக்கைகளில் அமெரிக்கா கலந்து கொண்டது. அபின் கடத்தல் மற்றும் ஆயுத பேரங்கள் சம்மந்தமான சர்வதேச சங்கத்தின் மாநாடுகளில் கலந்து கொண்டது. 1928இல் அமெரிக்க வெளிவிவகார செயலர் பிராங்க் B. கெல்லக் 62 நாடுகள் கலந்து கொண்ட பாரீஸ் ஒப்பந்தம் மாநாட்டிற்கு தலைமை தாங்கினார். இதனை கெல்லக் ஒப்பந்தம் என்றும் அழைத்தனர். இந்த நாடுகள் போரை தவிர்ப்பது அது ஒரு தேசிய கொள்கையாக இருக்க வேண்டும் என ஏற்றுக்கொண்டது. இதற்கு அமெரிக்க செனட் மன்றம் தடை விதிக்கவில்லை. ஆனால் சர்வதேச நீதிமன்றத்தில் சேர வேண்டும் என்று ஹார்டிங்கின் தீர்மானத்தை எதிர்த்தது. உலக நீதிமன்றம் நாடுகளின் பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பதற்காக 1922இல் உருவாக்கப்பட்டது. அமெரிக்க

மக்கள் இதனை விரும்பினர். 1926இல் மீண்டும் இந்த தீர்மானம் வந்த போது ஏற்றுக்கொண்டது. ஆனால் அமெரிக்கா சம்மந்தமான விவகாரங்களில் நீதிமன்றம் தலையிடக்கூடாது எனக் கூறியது. இதனை மற்ற நாடுகள் ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டது.

மத்திய அமெரிக்கா மற்றும் பசிபிக் பிராந்தியத்தில் அமெரிக்கா நேரடியாக தொடர்பு கொண்டிருந்தது. 1924இல் சாண்டோ டாமின்கோவிலிருந்து அமெரிக்கத் துருப்புகள் வெளியேறின. 1925இல் நிகாரகுவாவிலிருந்து வெளியேறின. படைகள் வெளியேற்றம் அந்நாடுகளில் உள்நாட்டுப் போரை துவக்கின. எனவே மீண்டும் அமெரிக்கப்படைகள் செல்ல வேண்டியதாயிற்று. மெக்ஸிகோ அரசாங்கத்தின் புதிய அரசியல் சட்டத்தினால் அங்குள்ள சுரங்கங்கள், எண்ணெய் வயல்கள் நாட்டுடைமையாக்கப்பட்டன. மெக்ஸிகோ அரசை வழிக்குக்கொண்டு வர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. டிவைட்மொர்ரோ தூதுவராக அனுப்பப்பட்டார். சமாதான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இங்கு 100 கோடி டாலர்கள் முதலீடு 1930இல் செய்யப்பட்டிருந்தன. இவற்றைக் காப்பாற்ற அமெரிக்காவின் கட்டுப்பாடு தேவையாக இருந்தது.

### *வாஷிங்டன் மாநாடு 1921*

பசிபிக் கடல் பிராந்தியத்தில் உள்ள பிரச்சனைகளை தீர்க்க இம்மாநாடு பயன்பட்டது. கெல்லக்கும், ஹக்ஸ்ஸீம் இம்மாநாட்டைக் கூட்டினர். ஜப்பானின் பெருகிவரும் கடலாதிக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதற்காக 1921 நவம்பர் 12ல் வாஷிங்டனில் இம்மாநாடு கூட்டப்பட்டது. ஜப்பான் சீனாவின் பல பகுதிகளில் உரிமை கொண்டாடியது.

1917இல் அமெரிக்கா ஜப்பானுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின்படி ஜப்பானின் சில உரிமைகளை ஏற்றுக் கொண்டது. ரஸ்யாவில் போல்ஸ்லிக் புரட்சி ஏற்பட்டபோது ஜப்பானிய துருப்புகள் கிழக்கு சைபீரியாவை கைப்பற்றிக் கொண்டது. இதை அமெரிக்கா விரும்பவில்லை. இதனை எதிர்த்து படைகளை அனுப்ப வேண்டும் என அமெரிக்கர்கள் விரும்பினர் பலர் தூரகிழக்கிலிருந்து விலகி வருவது நல்லது என்று கூறினர்.

வாஷிங்டன் மாநாடு மூலம் இரண்டு ஒப்பந்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஒன்று நான்கு நாடுகள் அமெரிக்கா, ஜப்பான், பிரிட்டன், பிரான்ஸ் ஒப்பந்தம் 1921இல் மேற்கொள்ளப்பட்டன. இதன் மூலம் பசிபிக் கடல் பிராந்தியத்தில் ஒவ்வொரு நாடும் வைத்திருக்கக்கூடிய இடங்களை மற்ற நாடுகள் அங்கீகரிப்பது, இரண்டாவது ஒன்பது நாடுகள் ஒப்பந்தம். 1922ல் செய்யப்பட்டது, சீனாவின் சுதந்திரம் மற்றும் திறந்தவெளி கதவு கொள்கை ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஜப்பான் தான் கைப்பற்றிய பகுதிகளிலிருந்து வெளியேற சம்மதித்தது. (சான்டுங், சைபீரியா) மூன்றாவதாக ஐந்து நாடுகள் ஒப்பந்தம் ஒன்றும் அமெரிக்கா - ஜப்பான் - பிரிட்டன் - பிரான்ஸ் - இத்தாலியுடன் செய்து கொள்ளப்பட்டன. இதன்படி 10 ஆண்டு காலத்திற்கு எந்த நாடும் போர்க் கப்பல்களை கட்டக்கூடாது. அமெரிக்கா, இங்கிலாந்து, ஜப்பான் 5:5:3 என்ற எண்ணிக்கையில் கப்பல்கள் கட்டப்பட வேண்டும். கப்பற்படை கப்பல்கள் கட்டப்படுவது குறைக்கப்பட வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

வாஷிங்டன் மாநாடு அமெரிக்க ராஜதந்திர கொள்கைகளுக்குக் கிடைத்த பெரும் வெற்றியாகும். ஜப்பானை கட்டுப்பாட்டில் வைக்க இந்த மாநாடு உதவியது.

ஆவார்கள். ஐரோப்பாவிலும், ஆசியாவிலும் லட்சக்கணக்கான மக்கள் கொல்லப்பட்டனர் பல இலட்சக்கணக்கான மக்கள் வீடுகளை இழந்து அடிமைத் தொழிலாளர்களாக மாறினர். மனித இனத்தின் சொத்துக்கள் அழிக்கப்பட்டன. அமெரிக்கா 300 மில்லியன் டாலர் செலவு செய்தது.

உலக அரங்கில் இங்கிலாந்தும், பிரான்சும் தங்கள் தலைமையை இழந்தது. அமெரிக்காவும், சோவியத்யூனியனும் தலைமையிடத்தைப் பிடித்தன. அமெரிக்கா தனது தனித்திருத்தல் கொள்கையை கைவிட்டது. உலக அரசியலில் அமெரிக்கா தலைமையிடத்தைப் பிடித்தது.

போரின் போது அமெரிக்காவுடன் ஒத்துழைத்த சோவியத்யூனியன் போருக்குப் பிறகு கருத்துவேறுபாடு கொண்டு பிரிந்தது. அமெரிக்கா முதலாளித்துவ கருத்துக்களுக்கும், ரஷ்யா கம்யூனிச கொள்கைகளுக்கும் முக்கியத்துவம் தந்தது. உலகம் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்தது. அமெரிக்க-ரஷ்யாவிடையே கெடுபிடி போர் ஆரம்பமானது.

இரண்டாம் உலகப்போரின் விளைவாக உலகத்தில் அமைதியை நிலைநாட்டுவதற்காக ஐக்கிய நாடுகள் சபை உருவாக்கப்பட்டது. இதற்கு அமெரிக்கா மிகவும் பாடுபட்டது.

# அலகு 6

6.1. ஹேரி ட்ருமன் - 1945-1953

6.2. ஐசன் ஹோவர் - 1953-1961

6.3. ஜான் F. கென்னடி - 1961-1963

6.4. *லிண்டன் B. ஜான்சன் - 1963-1969*

6.5. ரிச்சர்ட் நிக்சன் - 1969-1974

6.6. ஜெரால்ட் போர்டு - 1974-1977

6.7. ஜிம்மி கார்டர் - 1977-1981

6.8. *ரொனால்ட் ரீகன்* - 1981-1989

6.9. ஜார்ஜ் புஷ் - 1989-1993

6.10. பில்கிளிண்டன் - 1993-2000

6.11. ஜார்ஜ் வில்லியம் புஷ் - 2001-2009

# அலகு 6.1

# ஹேரி ட்ரூமன் 1945-1953

உலக அமைதியை நிலைநிறுத்த அணுசக்தியை எப்படி பயன்படுத்துவது என்பது பற்றி ஆராய அமெரிக்க காங்கிரசை கேட்டுக் கொள்கிறேன்.

ட்ரூமன்.

ஹேரி ட்ரூமன் ரூஸ்வல்டின் துணை ஜனாதிபதியாக பணியாற்றியவர். ரூஸ்வெல்ட் காலமான பிறகு அவர் 1945 ஏப்ரல் 12ஆம் தேதி முப்பத்தி மூன்றாவது ஜனாதிபதியாக பதவியேற்றார். இரண்டாம் உலகப் போர் முடிவிற்கு வர இருந்தது. ட்ரூமன் 1884, மே 83ம் தேதி மிசௌரி மாநிலத்தில் பிறந்தார். பள்ளிப்படிப்பை கொலம்பியா மற்றும் இண்டிபெண்டன்ஸ் பள்ளிகளில் முடித்தார். 1922-1925ல் கான்சாஸ் நகர சட்டப்பள்ளியில் சட்டம் பயின்றார். இதற்குமுன்பு ஜேக்சன் கவுண்டி நீதிபதியாக பணியாற்றினார். 1926இல் மீண்டும் நீதிபதியானார். 1935ல் மிசௌரி மாநிலத்திலிருந்து அமெரிக்க செனட் மன்றத்திற்கு தேர்தெடுக்கப்பட்டார். 1944இல் F.D.ரூஸ்வெல்ட் நான்காவது முறையாக ஜனாதிபதி பதவியேற்றபோது இவர் துணை ஜனாதிபதியானார்.

### உள்நாட்டுக் கொள்கை

ரூஸ்வெல்ட்டின் புதிய சீரமைப்புத் திட்டத்தை தொடர்ந்து பின்பற்றினார். வேலையில்லா திண்டாட்டத்தை ஒழித்தல், சமுதாய நலத்திட்டங்களை விரிவுபடுத்துதல்,

டென்னசி நதி பள்ளித்தாக்கு திட்டம் போல் கொலம்பியா, மிசௌரி நதி பள்ளித்தாக்கு திட்டங்கள், நீக்ரோக்களுக்கு நல்வாழ்வு அளிக்கும் திட்டங்களை அறிவித்தார். ஆனால் 1946இல் காங்கிரசின் இரு சபைகளிலும் குடியரசு கட்சியினர் பெரும்பான்மை பெற்றதினால் ட்ரூமனின் திட்டங்களுக்கு எதிர்ப்பு தெரிவித்தனர். தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச ஊதியம் ஒரு மணி நேரத்திற்கு 45 செண்டிலிருந்து 75 செண்டாக உயர்த்தப்பட்டது. சேரிகளுக்குப் பதிலாக புதிய குடியிருப்புகள் கட்ட 2700 மில்லியன் டாலர் ஒதுக்கப்பட்டது. வயது முதிர்ந்தவர்களுக்கு ஓய்வூதியம் வழங்கப்பட்டது.

இராணுவத்துறையில் கடற்படையும், தரைப்படையும் ஒன்றாக இணைக்கப்பட்டன. ஜேம்ஸ் பாரஸ்டால் இப்புதிய பாதுகாப்புத்துறையின் தலைவரானார். போரின் முதலில் தரைப்படை 20 இலட்சமாகவும், கடற்படை 10 இலட்சமாகவும் குறைக்கப்பட்டது. கலைக்கப்பட்ட போர்வீரர் நலனுக்காக படை வீரர் புனர் வாழ்வு சட்டம் இயற்றப்பட்டது. அனுசக்தி வளர்ச்சித் திட்டங்களின் பயனாக 1952 அக்டோபர் மாதம் மார்ஷல் த்லில் முதலாவது ஹைட்ரஜன் அணுகுண்டு சோதித்துப் பார்க்கப்பட்டது.

குடியரசுக் கட்சியினர், போர்க்காலத்தில் தொழிலதிபர்களுக்கு விதிக்கப்பட்ட வரிகளை அகற்றினர். தொழிற்சாலைகள் தனியாருக்கு விற்கப்பட்டன. விலைகளின் மீது விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டன. வீக்கம் ஏற்படும் வாய்ப்பு ஏற்பட்டது. ஐரோப்பாவிற்கு அமெரிக்க பொருட்கள் அதிகம் தேவைப்பட்டதால் தொழில் வளர்ச்சி பெற்றது.

வாக்னர் சட்டப்படி தொழிலாளர்கள் பெற்றிருந்த உரிமைகள் டாப்ட் ஹார்லி சட்டப்படி மறுக்கப்பட்டன. வேலை நிறுத்தங்கள் தடைசெய்யப்பட்டன. தாங்கள் கம்யூனிஸ்ட்கள் அல்ல என்ற உறுதிமொழியை தொழிற்சங்கத் தலைவர்கள் எடுத்துக்கொள்ள வேண்டும் போன்ற கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன.

1951ஆம் ஆண்டு கொண்டு வரப்பட்ட 22வது அரசியலமைப்புத் திருத்தப்படி ஒருவர் இரண்டு முறைதான் ஜனாதிபதி பதவி வகிக்க முடியும் என கொண்டுவரப்பட்டது. மேலும் குடியரசுத் தலைவர் வாரிசு சட்டப்படி ஜனாதிபதியும், துணை ஜனாதிபதியும் இறந்து போனால் காங்கிரசின் கீழவைத் தலைவரும், அவரை அடுத்து செனட்டின் தற்காலிகத் தலைவரும், அவருக்கு பிறகு வெளியுறவு செயலரும் பிற செயலர்களும் வாரிசாவார்கள்.

கம்யூனிஸ்ட்களுக்கு எதிராக பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. ஊழியர் விசுவாச ஆய்வு ஆணையம் அமைக்கப்பட்டு உயர் அரசுபதவிகளில் இருக்கும் அதிகாரிகளின் கருத்துகள் ஆராயப்பட்டன. முப்பது இலட்சம் ஊழியர்களின் பணிப் பதிவேடுகள் ஆராயப்பட்டு கம்யூனிச அனுதாபிகள் பணிநீக்கம் செய்யப்பட்டனர். 1950இல் காங்கிரஸ் ட்ரூமனையும் மீறி 'மெக்ரான் உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டம்' ஒன்றை கொண்டுவந்தது. இதன்படி கம்யூனிஸ்ட்கள் நீதிதுறையில் பதிவு செய்து கொள்ள வேண்டும். ரஷ்யாவிற்கு ஒற்றர் வேலை பார்த்ததாக பலர் தண்டிக்கப்பட்டனர்.

கம்யூனிஸ்ட்களை ஒடுக்க விஸ்கான்சைச் சேர்ந்த குடியரசு கட்சியின் செனட்டர் ஜோசப் மக்கார்த்தி பெரும்

முயற்சி எடுத்தார். 1950 பிப்ரவரியில் உள்துறை அமைச்சகத்தில் டீன் அக்கீசனின் துறையில் 205 கம்யூனிஸ்ட்கள் இருப்பதாகக் கூறினார். விளக்கம் கேட்டபோது ஒருவரைக்கூட கூறமுடியவில்லை. மக்கார்த்தியின் குற்றச்சாட்டுகள் பொய்யானவை என்று மில்லர்ட் டைடிங்ஸ் என்பவர் தலைமையில் ஆய்வு செய்த குழு எடுத்துக் கூறியது.

1950 நவம்பர் மாதம் ட்ருமனை கொலை செய்யும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அது தோல்வியில் முடிந்தது. கொலைகாரர்களில் ஒருவன் டரசோலா கொல்லப்பட்டான். கலாசோ காயங்களுடன் கைது செய்யப்பட்டு மரணதண்டனை விதிக்கப்பட்டான். ஆனால் அது ஜனாதிபதியால் ஆயுள் தண்டனையாகக் குறைக்கப்பட்டது.

## *வெளிநாட்டுக் கொள்கை*

இரண்டாம் உலக போருக்குப் பின் உலக விவகாரங்களில் அமெரிக்கா தலையிடாமல் இருக்க முடியவில்லை. ஐக்கிய நாட்டு சபையில் உறுப்பினராக சேர்ந்து கொண்டது. நேசநாடுகளுக்கு கொடுக்கப்பட்ட கடன்கள் ரத்து செய்யப்பட்டன. ரஷ்யாவின் செல்வாக்கை தடுத்து நிறுத்த பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அமெரிக்க-ரஷ்ய பனிப்போர் தொடர்ந்தது.

### *1. ட்ருமன் கொள்கை*

சோவியத் யூனியன், போலந்து, ஹங்கேரி செக்கோஸ்லோவாகியா, யூகோஸ்லாவியா, அல்பேனியா, ருமேனியா, பல்கேரியா போன்ற நாடுகளில் கம்யூனிஸ்ட்

அரசை அமைத்தன. கிரீசிலும், துருக்கியிலும் தனது ஆதிக்கத்தை நிலைநாட்ட முயற்சிகள் மேற்கொண்டன. இந்த அபாயத்தை தடுத்து நிறுத்த ஜனாதிபதி ட்ரூமன் ஒரு அறிக்கையை வெளியிட்டார். அதுவே 'ட்ரூமன் கொள்கை' (Truman Doctrine) எனப்படும். கிரீஸ், துருக்கி நாடுகளுக்கு அமெரிக்கா பொருளாதார ராணுவ உதவி வழங்க தனது திட்டத்தை காங்கிரஸ் 1947 மார்ச் 12ஆம் தேதி சமர்ப்பித்தார். அதனை ஏற்றுக் கொண்டு 400 மில்லியன் டாலர்கள் பண உதவி செய்தது. உலக முழுவதும் கம்யூனிசம் பரவாமல் தடுக்கவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

### *2. மார்ஷல் திட்டம்*

அமெரிக்க வெளியுறவுச் செயலர் ஜார்ஜ் மார்ஷல் என்பவரால் ஐரோப்பிய நாடுகளுக்கு உதவுவதற்காக ஒரு திட்டம் கொண்டு வந்தார். பொருளாதார மேம்பாடு, கம்யூனிசம் பரவாமல் தடுக்கவும் நிதிஉதவி வழங்கப்பட்டது. பிரான்சு, இங்கிலாந்து மற்றும் 14 ஐரோப்பிய நாடுகள் இத்திட்டத்தை ஏற்றுக் கொண்டன. உதவி பெற்ற நாடுகள் ஐரோப்பிய பொருளாதாரக் கூட்டமைப்பு ஒன்றை உருவாக்கிக் கொண்டன.

### *3. ஜெர்மன் பிரச்சினை*

போட்ஸ்டம் மாநாட்டு முடிவின்படி தோல்வியடைந்த ஜெர்மனி நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு கிழக்குப் பகுதியில் பிரான்ஸ் ஆகிய நாடுகள் நிர்வகித்தன, இப்பகுதிகளில் நாஜி கோட்பாடுகளை ஒழித்துவிட்டு, சுதந்திரமான தேர்தல் மூலம் மக்களாட்சியை நிறுவிவிட்டு

இந்நாடுகள் வெளியேறிவிட வேண்டும். ஆனால் வல்லரசுகளுக்கிடையே கருத்து வேற்றுமை உருவானதால் தேர்தல் நடத்துவதில் தாமதம் ஏற்பட்டது. இங்கிலாந்து, பிரான்ஸ், அமெரிக்க நாடுகள் தங்கள் பகுதிகளை ஒன்றாக இணைத்து 'ஜெர்மன் கூட்டாட்சி குடியரசு' என்று பெயரிட்டுக் கொண்டது. இது மேற்கு ஜெர்மனி ஆகும். ரஷ்யாவின் கட்டுப்பாட்டிலிருந்த பகுதி ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு என்ற பெயரில் தனிநாடு உருவாக்கப்பட்டது. இது கிழக்கு ஜெர்மனியாகும். மேற்கு ஜெர்மனியில் ஜனநாயக அரசும், கிழக்கு ஜெர்மனியில் கம்யூனிச அரசும் அமைக்கப்பட்டன.

### *பெர்லின் சிக்கல்*

பெர்லின் நகரும் இரண்டாகப் பிரிக்கப்பட்டது. கிழக்கு பெர்லினில் சோவியத் ரஸ்யாவின் ஆதிக்கமும், மேற்கு பெர்லினில் மேற்கத்திய நாடுகளின் ஆதிக்கமும் அமைக்கப்பட்டது. மேற்கு பெர்லினுக்கும் மேற்கு ஜெர்மனிக்கும் இடையிலான போக்குவரத்து தொடர்புகள் ரஷ்யாவின் கட்டுப்பாட்டில் இருந்தது. அதனால் மேற்கு பெர்லினிலுள்ள மேற்கத்திய வல்லரசுகளை வெளியேற்ற திட்டமிட்டது. 1948, ஜூன் மாதம் 23ஆம் தேதி நிலநீர் மார்க்கங்களை ரஷ்யா அடைத்துவிட்டது. பெர்லின் மக்கள் உணவின்றி தவித்தனர். இந்நிலைமையை மேற்கு பெர்லினிலிருந்த அமெரிக்க தளபதி லூகியஸ் டி. கிளே என்பவரின் தலைமையில் 'Operation vittles' என்ற பெயரில் ரஷ்யாவிற்கு எதிராக நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. தனது விமானப்படை மூலம் அனைத்துப் பொருட்களும் 1948 ஜூன் 26 முதல் 1949 மே 12ஆம் தேதி வரை மேற்கு பெர்லின் மக்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டன. பெர்லின் முற்றுகையை ரஷ்யா விலக்கிக் கொண்டது. ஆனால்

1961இல் மேற்கு, கிழக்கு பெர்லினைப் பிரிக்கும் 62 கி.மீ நீளமுள்ள சுவரை கட்டியது. 1989இல் இச்சுவர் இடிக்கப்பட்டது.

## *ரியோ உடன்படிக்கை*

1947 ஆகஸ்ட் 15இல் ரியோடி ஜெனிரோ நகரில், வட, தென் அமெரிக்க நாடுகள் பங்குகொண்ட மாநாடு நடத்தப்பட்டது. 'அனைத்து அமெரிக்க நாடுகளின் சங்கம்' உருவாக்கப்பட்டது. ரியோ உடன்படிக்கையில் கையெழுத்திட்டன. ஆக்கிரமிப்பு செய்யும் நாடுகள் மீது நடவடிக்கை எடுக்க திட்டமிடப்பட்டது.

## *வட அட்லாண்டிக் ஒப்பந்தம் 1949* (NATO)

மேற்கு ஐரோப்பிய நாடுகளில் கம்யூனிசம் பரவாமல் தடுக்க ஏற்பட்ட இராணுவ ஒப்பந்தமே வட அடலாண்டிக் ஒப்பந்தமாகும். பெல்ஜியம், கனடா, டென்மார்க், பிரான்ஸ், ஐஸ்லாந்து, இத்தாலி, லக்சம்பர்க், நெதர்லாந்து, நார்வே, போர்ச்சுக்கல், இங்கிலாந்து ஆகிய நாடுகள் அமெரிக்காவுடன் சேர்ந்து 1949 ஏப்ரல் 4ஆம் தேதி வாஷிங்டன் நகரில் ராணுவ ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டன. 1952இல் கிரீசும், துருக்கியும், 1955இல் மேற்கு ஜெர்மனியும் இவ்வமைப்பில் சேர்ந்தன. இதன் தலைமையிடம் பாரிஸ் ஆகும். நேட்டோ நாடுகளின் கூட்டுப்படை ஒன்று உருவாக்கப்பட்டது. 'நேட்டோ நாடுகளுள் ஏதேனும் ஒரு நாட்டின் மீது தாக்குதல் நடந்தால் அது அனைத்து நாடுகளின் மீதான தாக்குதலாகக் கருதப்படும்' என்பது முக்கியமான அம்சமாகும். அமெரிக்காவும், ரஷ்யாவும் படை பல பெருக்கத்தில் ஈடுபட்டன. தற்சமயம் 16 நாடுகள் அங்கம் வகிக்கின்றன.

## *ஆன்சுஸ் ஒப்பந்தம் 1951 (ANZUS PACT)*

ஆஸ்திரேலியா, நியுசிலாந்து, அமெரிக்கா ஆகிய மூன்று நாடுகள் 1951 செப்டம்பர் 1ஆம் தேதி பரஸ்பர பாதுகாப்பு ஒப்பந்தம் செய்து கொண்டது. சான்பிரான்சிஸ்கோ நகரில் இந்நாடுகள் கூடி ஒப்பந்தம் செய்து கொண்டன. ஏதேனும் ஒரு நாட்டின் மீது ராணுவ தாக்குதல் நடைபெற்றால் மற்ற நாடுகள் உதவிக்கு வரும் என தெரிவிக்கப்பட்டது.

## *தென்கிழக்கு ஆசிய நாடுகளின் உடன்படிக்கை (SEATO)*

1954 செப்டம்பர் 8 ஆம் தேதி இங்கிலாந்து, பிரான்சு, ஆஸ்திரேலியா, நியுசிலாந்து, பிலிப்பைன்ஸ், பாகிஸ்தான், தாய்லாந்து ஆகிய நாடுகள் இவ்வுடன்படிக்கையில் கையெழுத்திட்டன. மணிலா நகரில் இவ்வமைப்பு கூடியதால் மணிலா உடன்படிக்கை என்றும் அழைக்கப்படும். கம்யூனிசம் பரவாமல் இருக்கவே இந்த உடன்படிக்கை என அமெரிக்கா அறிவித்தது. இவ்வமைப்பு சரிவர செயல்படவில்லை எனலாம்.

## *அணு ஆயுத பரவல்*

ட்ரூமன், ஜப்பான் மீது அணுகுண்டுகளை வீசி பணிய வைத்தார். ஆனால் அந்த அணு ஆயுதம் பேரழிவை ஏற்படுத்தியது. "நிலக்கரி, எண்ணெய், நீர்வீழ்ச்சிகளிலிருந்து கிடைக்கப்பெறும் சக்திக்கு மாற்றாக அணுசக்தி பயன்படும் என்றும், உலக அமைதியை நிலைநிறுத்த அணுசக்தியை எப்படிப் பயன்படுத்துவது என்பதைப் பற்றி ஆராய அமெரிக்க காங்கிரசை கேட்டுக் கொள்கிறேன்," என்று ட்ரூமன் கூறினார்.

## அலகு 6.2

# டிவைட் ஐசன் ஹோவர் (1953-1961) (DEWIGHT EISN HOVER)

"உலகில் உள்ள சுதந்திரமான நாடுகளையெல்லாம் ஒன்றிணைத்து கம்யூனிசத்திற்கு எதிராக காக்க வேண்டிய கடமை அமெரிக்காவிற்கு இருக்கின்றது."

ஐசன் ஹோவர்.

இருபது ஆண்டு கால ஜனநாயகக் கட்சியின் ஆட்சி மாறி குடியரசு கட்சியின் சார்பாக முப்பத்தி நான்காவது ஜனாதிபதியாக டிவைட் ஐசன் ஹோவர் பதவியேற்றார். இரண்டாம் உலகப்போரில் ஐரோப்பாவில் தலைமை தளபதியாக இருந்து போரை நடத்தியவர். இவரது ஆட்சிக்காலத்தில் நாடு செழிப்புடன் விளங்கியது. கம்யூனிஸ்ட்களுக்கு எதிரான நடவடிக்கைகள் தொடர்ந்தன. 1953, மார்ச்சில் ரஷ்ய அதிபர் ஸ்டாலின் இறந்த பின் கெடுபிடி போர் குறைந்தது. மத்திய கிழக்கில் கம்யூனிசம் பரவாமல் இருக்க இவர் வகுத்த திட்டம் 'ஐசனோவர் கொள்கை' எனப்படும். உள்நாட்டில் சிவில் உரிமை போராட்டங்கள் நடைபெற்றன.

ஐசன் ஹோவர் டெக்ஸாஸ் மாநிலத்தில் ஒரு சாதாரண குடும்பத்தில் 1890 அக்டோபர் 14ஆம் தேதி பிறந்தார்.

வெஸ்ட் பாயிண்ட் என்ற இராணுவ பள்ளியில் 1911இல் சேர்ந்தார். ராணுவ அதிகாரியானார். 1933இல் மெக் ஆர்தரின் இராணுவ அலுவலகத்தில் பதவி பெற்றார். மெக் ஆர்தர் பிலிப்பைன்சுக்கு சென்ற போது தனது துணை இராணுவ ஆலோசகராக ஐசன் ஹோவரும் சென்றார். இரண்டாம் உலகப்போரின் போது வாஷிங்டனில் போர் திட்ட இலாகாவில் பணியாற்றினார். 1942, ஜுன் மாதம் ஐரோப்பாவில் உள்ள அமெரிக்க படைகளின் தளபதியானார். 1943, டிசம்பரில் ஜெர்மன் மீது தாக்குதல் தொடுக்கப்பட்டது. ஜெர்மனி வெற்றி கொள்ளப்பட்டது. ஜெர்மன் படைகள் ஐசர்ஹோவரிடம் 1945, மே 7இல் ரீம்ஸ் என்ற இடத்தில் சரணடைந்தன. அமெரிக்கா திரும்பிய அவருக்கு அமெரிக்க தலைமை ராணுவ தளபதி பதவி கிடைத்தது. 1948இல் கொலம்பியா பல்கலைக் கழகத் தலைவரானார். 1952இல் ஜனாதிபதி தேர்தலில் குடியரசு கட்சியின் சார்பாக போட்டியிட்டு வெற்றி பெற்றார்.

## *உள்நாட்டுக் கொள்கை*

1954ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டப்படி மேலும் பத்து மில்லியன் மக்கள் சமூகநலன் பாதுகாப்பு சலுகைகளை பெற்றனர். தொழிலாளர்களுக்கு குறைந்தபட்சம் ஒரு மணி நேரத்திற்கு ஒரு டாலர் ஊதியம் வழங்கப்பட்டது. 1956ஆம் ஆண்டு இயற்றிய சட்டப்படி 42000 மைல் நீளத்திற்கு சாலைகள் அமைக்க 130 மில்லியன் டாலர்கள் செலவிட முடிவு செய்யப்பட்டது. விவசாயிகள் விவசாயம் செய்யாமல் இருக்க மண்வள வங்கிகள் ஏற்படுத்தி இழப்பீடு வழங்கப்பட்டது. 1959இல் இயற்றப்பட்ட லாண்ட்ரம் கிரிபின் சட்டம் தொழிலாளர்களுக்கு பல கட்டுப்பாடுகளை விதித்தது.

கம்யூனிஸ்ட்கள் மீது மேலும் தீவிரமான கட்டுப்பாடுகள் கொண்டுவரப்பட்டன. புதிய மெக்கரான் வால்டர் சட்டப்படி கம்யூனிஸ்ட்களுக்கு குடியுரிமை வழங்குவது கடினமாக்கப்பட்டது. 2200 மைய அரசு ஊழியர்கள் பணிநீக்கம் செய்யப்பட்டனர். இவர்கள் அமெரிக்க பாதுகாப்பிற்கு அபாயகரமானவர்கள் என முத்திரை குத்தப்பட்டனர்.

கம்யூனிஸ்ட்களை வெறுக்கும் மெக்கார்த்தி, அரசாங்க நடவடிக்கைகள் பற்றிய செனட் கமிட்டியின் தலைவராக 1952இல் நியமிக்கப்பட்டார். அரசாங்க உயர் அதிகாரிகள், எழுத்தாளர்கள், கலைஞர்கள், விஞ்ஞானிகள் போன்ற பலர் விசாரணை செய்யப்பட்டு பாழ்படுத்தப்பட்டனர். ஆனால் இவர்மீது இராணுவத்துறை குற்றச்சாட்டுகளை சுமத்தியது. செனட் கமிட்டி விசாரித்த போது இவரது போலித்தனம் வெளிப்படுத்தப்பட்டது. இவருக்கு எதிராக செனட் மன்றம் தீர்ப்பளித்ததன் விளைவாக இவர் மதிப்பிழந்தார். 1957இல் இறந்தார்.

### *சிவில் உரிமைப் போராட்டங்கள்*

உள்நாட்டுப் போருக்குப்பின் அடிமைமுறை ஒழிக்கப்பட்டாலும், நீக்ரோக்களுக்கு சம உரிமை வழங்கப்படவில்லை. பள்ளிகள், பொது.இடங்கள், பேருந்துகளில் தனி இடங்கள் ஒதுக்கப்பட்டன. ஜிம்குரோ சட்டங்கள் ரத்து செய்யப்பட வேண்டும், சம உரிமைகள் வேண்டும் என நீக்ரோக்கள் போராடினர். மார்டின் லூதர் கிங், ரால் ஆபர் நாதி போன்ற தலைவர்கள் தலைமை தாங்கினர். பொது இடங்களில் இன வேறுபாடு காட்டக்கூடாது

என்று 1953இல் ஆணை பிறப்பித்தார். சிவில் உரிமைச் சட்டப்படி இனம், நிறம், சமயம் ஆகியவற்றின் அடிப்படையில் வாக்குரிமை மறுக்கப்படுவதை விசாரிக்க பொது உரிமைக்குழு அமைக்கப்பட்டது. வாக்குரிமை மறுக்கப்பட்டவர்களுக்கு மீண்டும் வாக்குரிமை வழங்கப்பட்டது.

## *இன ஒதுக்கலுக்கு எதிரான தலைமை நீதிமன்ற தீர்ப்பு*

1954இல் நீதிபதி ஏர்ல்வாரன், பிரவுன் Vs தொபேகா கல்வி வாரிய வழக்கில் கூறிய தீர்ப்பு வரலாற்று சிறப்புமிக்கதாக அமைந்தது. பொதுக்கல்விக் கூடங்களில் இன ஒதுக்கல் கொள்கை கடைப்பிடிக்கக் கூடாது என்று தீர்ப்பு வழங்கினார். இந்தத் தீர்ப்பின் காரணமாக அர்கான்சாஸ் மாநிலம் லிட்டில்ராக் என்ற ஊரில் கலவரம் தோன்றியது. பள்ளிகளில் நீக்ரோ மாணவர்கள் சேர்க்கப்பட்டால் கலவரம் வெடிக்கும் என மாநில கவர்னர் கூறினார். ஜனாதிபதி கூட்டாட்சி படைகளை அங்கு அனுப்பினார். கவர்னரின் கருத்துக்கு எதிராக நீக்ரோ மாணவர்கள் பள்ளியில் சேர்க்கப்பட்டனர். அவர்களுக்கு 1957-58ஆம் ஆண்டு முழுவதும் பாதுகாப்பு வழங்கப்பட்டது.

## *வெளிநாட்டுக் கொள்கை பிரச்சினை*

ஜான் பாஸ்டர் டல்லஸ் (John Foster Dulles) என்பவர் வெளியுறவுச் செயலராக இருந்தார். கம்யூனிசத்தை உலகளவில் ஒடுக்குவதற்கு நடவடிக்கைகள் மேற்கொண்டார். ட்ரூமன் காலத்தில் தொடங்கப்பட்ட கொரியப்போர்

முடிவிற்குக் கொண்டுவர ஜனாதிபதி 1952 டிசம்பரில் கொரியா சென்றார். 1953 ஜூலையில் பன்முன்ஜாம் என்ற இடத்தில் வட, தென் கொரியா நிர்வாகிகள் உடன்படிக்கையில் கையெழுத்திட்டனர். 38வது அட்சரேகை எல்லையாக நிர்ணயிக்கப்பட்டது.

## *வியட்நாம்*

பிரெஞ்சு குடியேற்ற நாடான இந்தோசீனாவில் கம்யூனிஸ்ட்கள் ஹோசிமின் தலைமையில் வியட்மின் என்ற படையை அமைத்து போரிட்டு வந்தனர். பிரான்சுக்கு அமெரிக்கா பண உதவி வழங்கியது. டல்லஸ் படைகளை உதவிக்கு அனுப்பத் திட்டமிட்டார். 1954 ஜூலை மாதம் நடைபெற்ற ஜெனிவா உடன்படிக்கையின்படி வியட்நாம் பிரிக்கப்பட்டது. வியட்நாம், லாவோஸ், கம்போடியா நாடுகளின் சுதந்திரம் அங்கீகரிக்கப்பட்டது. இதனை டல்லஸ் ஏற்றுக்கொள்ளவில்லை.

## *சியாட்டோ* (SEATO)

சியாட்டோ எனப்படும் தென்கிழக்கு ஆசிய நாடுகளின் உடன்படிக்கை அமெரிக்காவின் உதவியுடன் இங்கிலாந்து, பிரான்சு, ஆஸ்திரியா, நியுசிலாந்து, பிலிப்பைன்ஸ், பாகிஸ்தான், தாய்லாந்து ஆகிய நாட்டு பிரதிநிதிகள் 1954, செப்டம்பர் 8ஆம் தேதி மணிலா உடன்படிக்கையில் கையெழுத்திட்டனர். கம்யூனிசம் பரவுவதை தடுத்து நிறுத்தவே இந்த உடன்படிக்கை என அமெரிக்கா அறிவித்தது. உடன்படிக்கை நாடுகள் தங்கள் பகுதி நாடுகள் மீது ஆக்கிரமிப்பு நிகழ்ந்தால் அதனை முறியடிக்க ஒன்றுபட்டு செயல்படுவர் என முடிவு செய்யப்பட்டது. இங்கிலாந்து இந்த

உடன்படிக்கையில் அக்கறை காட்டவில்லை. பாகிஸ்தான் சீனாவுடன் தனியே உடன்படிக்கை செய்து கொண்டது. பின்னர் விலகிக் கொண்டது.

## CENTO (Central Treaty Organization) 1955

மத்திய கிழக்குப் பகுதியில் கம்யூனிசம் பரவாமல் தடுத்து நிறுத்த பாக்தாத் உடன்படிக்கை செய்யப்பட்டது. இது ரஷ்யாவிற்கு எதிரான நடவடிக்கையாகும். துருக்கி, ஈராக், ஈரான், இங்கிலாந்து, பாகிஸ்தான் ஆகிய நாடுகள் இந்த உடன்படிக்கையில் கையெழுத்திட்டன. பின்னர் அமெரிக்காவும் சேர்ந்து கொண்டது. ரஷ்யா இந்த பாக்தாத் உடன்படிக்கை நாடுகளுடன் நட்புறவை ஏற்படுத்திக் கொண்டதால் இவ்வுடன்படிக்கை முக்கியத்துவம் இல்லாமல் போய்விட்டது.

## *யு–2 நிகழ்ச்சி*

அமெரிக்க அதிபர் ஐசன் ஹோவரும், ரஷ்ய பிரதமர் குருச்சேவும் 1960, மே மாதம் பாரிசில் சந்திப்பதாக முடிவு செய்யப்பட்டது. இதற்கு சில நாட்களுக்கு முன்னர் லாஹீட் யு.2 என்ற அமெரிக்க வேவு விமானம் ரஷ்யா மீது பறந்த போது சுட்டு வீழ்த்தப்பட்டது. விமானி பிரான்சிஸ் பவர்ஸ் உயிருடன் பிடிக்கப்பட்டார். இதனால் மாநாட்டில் கலந்து கொள்ள குருச்சேவ் மறுத்துவிட்டார். வேவு விமானம் அனுப்பப்பட்டதை ஐசன்ஹோவர் ஒப்புக் கொண்டார். 1962 பிப்ரவரியில் யு2 விமானி விடுதலை செய்யப்பட்டார். பதிலுக்கு அமெரிக்காவில் கைதியாக இருந்த ரஷ்ய ஒற்றர் ரடால்ப் ஏபல் விடுதலை செய்யப்பட்டார்.

## *மத்திய கிழக்கு*

மத்திய கிழக்கில் அரபு நாடுகளின் நட்பைப் பெற அமெரிக்கா விரும்பியது. ஆனால் அரபு நாடுகள் இஸ்ரேலுக்கு எதிரியாக விளங்கின. இஸ்ரேலோ அமெரிக்கா உதவியுடன் 1947இல் தனி நாடாக உதயமானது மற்றும் அரபு நாடுகள் பிரிட்டன், பிரான்ஸிற்கு எதிராகவும் இருந்தன.

1955இல் பிரிட்டன் கூட்டிய மத்திய கிழக்கு பாதுகாப்பு கழகத்தில் ஈராக்கைத் தவிர பிற அரபு நாடுகள் கலந்துகொள்ளவில்லை. துருக்கி, ஈரான், பாகிஸ்தான் கலந்து கொண்டன. எகிப்தின் நாசர் ரஷ்யாவின் இராணுவ மற்றும் பொருளாதார உதவிகளை ஏற்றுக்கொள்ள தயாராக இருந்தார். டல்லஸ் இதனை விரும்பவில்லை. மேலும் நைல் நதியின் குறுக்கே கட்டப்படும் அஸ்வான் அணைக்கு உதவப்போவதில்லை என டல்லஸ் அறிவித்தார். இதற்குப் பதிலடியாக நாசர், சூயஸ் கால்வாய் பகுதியை கைப்பற்றினார். சூயஸ் கால்வாய் பிரிட்டிஷ், பிரெஞ்சு பங்குதாரர்களுக்குச் சொந்தமானது. நாசருக்கு பதிலடி கொடுக்க பிரிட்டன், பிரான்ஸின் முயற்சிகளுக்கு அமெரிக்கா ஒத்துழைக்கவில்லை. சூயஸ் கால்வாயைப் பயன்படுத்த இஸ்ரேலுக்கு அனுமதி மறுக்கப்பட்டது. எனவே இஸ்ரேல் எகிப்து மீது படையெடுத்தது. இச்சமயத்தில் பிரிட்டனும், பிரான்சும் படைகளை அனுப்பி கால்வாய் பகுதியை கைப்பற்ற நினைத்தது. இதற்கு அமெரிக்கா ஆதரவு தரவில்லை. ஐ.நா. சபையும் கண்டித்தது. பிரிட்டிஷ், பிரெஞ்சு, இஸ்ரேலியப் படைகள் விலக்கிக் கொள்ளப்பட்டன. பதிலுக்கு நாசர் எதுவுமே செய்யவில்லை.

1957 மார்ச் மாதம், மத்திய கிழக்கில் உள்ள மக்களை கம்யூனிசத்தின் ஆக்கிரமிப்பிலிருந்து காப்பாற்ற அமெரிக்கா படைபலத்தை பயன்படுத்தும் என காங்கிரஸின் மூலம் பிரகடனப்படுத்தினார். 200 மில்லியன் டாலர் உதவியை அரபு நாடுகள் ஏற்றுக்கொள்ள தயாராக இருந்தன. மத்திய கிழக்கில் கிடைபிடிக்கப்பட்ட இக்கொள்கை 'ஐசன்ஹோவர் கோட்பாடு' எனப்படும். நாசர் அனைத்து அரபு நாடுகளையும் இணைக்கும் முயற்சியில் ஈடுபட்டார். அரபு நாடுகளில் அரசர்களுக்கு எதிராக மக்கள் நடத்திய போராட்டங்களை நசுக்க அமெரிக்கப் படைகள் பயன்படுத்தப்பட்டன. 1957இல் ஜோர்டானில் ஏற்பட்ட மக்கள் கிளர்ச்சி அமெரிக்கப் படையுடன் நசுக்கப்பட்டது. 1958இல் சிரியாவில் இடதுசாரியினர் ஆட்சியை கைப்பற்றினர். சிரியாவின் அண்டை நாடுகளுக்கு அமெரிக்க படைகள் அனுப்பப்பட்டன.

1958, ஜூலை மாதம் ஈராக்கில் தேசியவாதிகள் ஆட்சியை கைப்பற்றினர். இதனை ஆதரித்து லெபனானிலும், ஜோர்டானிலும் நடந்த போராட்டத்தை அமெரிக்கப்படை அடக்கியது. அராபியர்களுக்கும், யூதர்களுக்குமிடையே போர் நடவடிக்கைகள் தொடர்ந்தன.

### *இலத்தீன் அமெரிக்கா*

அமெரிக்காவின் கட்டுப்பாட்டில் இருந்துவந்த பல இலத்தீன் அமெரிக்க நாடுகளில் இப்போது அமெரிக்க எதிர்ப்பு வளரலாயிற்று. கம்யூனிஸ்ட் கட்சி செல்வாக்கு பெறலாயிற்று. குவாடிமாலாவின் 1954இல் கம்யூனிச ஆதரவு பெற்ற அரசு பதவிக்கு வந்தவுடன் அமெரிக்க நிறுவனங்கள்

கைப்பற்றப்பட்டன. ரஷ்யா இந்நாட்டிற்கு ஆயுதங்கள் வழங்குவதை அறிந்த அமெரிக்கா படையெடுக்க திட்டமிட்டது. ஆனால் கம்யூனிச ஆதரவு அரசு வீழ்ந்ததினால் மீண்டும் அமெரிக்க ஆதிக்கம் ஏற்பட்டது.

துணை ஜனாதிபதி ரிச்சர்ட் ரிக்சன் வெனிசூலா, பெரு ஆகிய நாடுகளுக்கு சுற்றுப்பயணம் செய்த போது அவருக்கு எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது. கியூபாவில் அமெரிக்க ஆதரவு சர்வாதிகாரி பாட்டிஸ்டா விரட்டப்பட்டார். பிடல் காஸ்ட்ரோ புதிய அதிபர் ஆனார். சோவியத் யூனியனுடன் அரசியல் பொருளாதார உறவுகளை ஏற்படுத்திக் கொண்டார்.

குடியரசு கட்சியைச் சேர்ந்த ஐசன் ஹோவர் தனது நடவடிக்கைகளின் மூலம் அமெரிக்காவின் அரசியல் உறவுக் கொள்கையை நிலைநாட்ட முயன்றார். உலகம் முழுவதும் மக்களை, நாடுகளை கம்யூனிசத்திற்கு எதிராக காப்பது அமெரிக்காவின் கடமை என்று கருதினார். உள்நாட்டில் பிரச்சினைகளை தடுத்துநிறுத்த முடியவில்லை. வேலையின்மை, விவசாயிகள் பிரச்சினை தீர்க்கப்படவில்லை. உயர் அதிகாரிகள் ஊழல் மிக்கவர்களாக இருந்தனர். சோவியத் யூனியன் உலக அரங்கில் செல்வாக்குப் பெற்றது. இந்த அதிருப்தியின் காரணமாக அடுத்த ஜனாதிபதி தேர்தலில் ஜனநாயகக் கட்சியின் வேட்பாளர் ஜான். F. கென்னடி வெற்றி பெற்றார்.

# அலகு 6.3

# ஜான் F. கென்னடி

# 1961-1963

நாடு உனக்கு என்ன செய்தது என கேட்காதே
நாட்டிற்காக நீ என்ன செய்தாய்?

ஜான். F. கென்னடி.

அமெரிக்காவின் முப்பத்தைந்தாவது ஜனாதிபதி ஜான் F. கென்னடி ரோமன், கத்தோலிக்க மதப்பிரிவைச் சேர்ந்தவர் மற்றும் ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்தவர். 42 வயது இளைஞர், தாராள நோக்கும், சமூக சீர்திருத்தங்களில் ஆர்வம் உடையவர். நீக்ரோக்களின் சிவில் உரிமைப் போராட்டங்களுக்கு ஆதரவளித்ததன் காரணமாகவே சுட்டுக் கொல்லப்பட்டார். தியோடர் ரூஸ்வெல்ட், உட்ரோவில்சன், பிராங்களின் ரூஸ்வெல்ட் ஆகியோர் கடைப்பிடித்த கொள்கைகளை தானும் கடைப்பிடித்தார்.

கென்னடி ஒரு செல்வந்தக் குடும்பத்தில் 1917, மே 29ஆம் தேதி மசாசுசெட்ஸ் மாநிலம் புரூக்லின் நகரில் பிறந்தார். இவரது தந்தை ஜோசப் கென்னடி வங்கி தொழில் புரிந்தார். இங்கிலாந்தில் அமெரிக்க தூதுவராக பணிபுரிந்தார். கென்னடி ஹார்வர்ட் பல்கலைக்கழகத்தில் 1936-40 காலகட்டத்தில் கல்வி கற்றார். பின்னர் இரண்டாம்

உலகப்போரில் 1941-1945 வரை அமெரிக்க கடற்படையில் பணிபுரிந்தார். 1947-53 வரை மசாசுசெட்ஸ் மாநில சட்டமன்றத்தின் கீழ்சபைக்கு மூன்று முறை தேர்ந்தெடுக்கப்பட்டார். 1952இல் அமெரிக்க செனட்டர் ஆனார். 1956ஆம் ஆண்டு துணை ஜனாதிபதி தேர்தலில் தோல்வியடைந்தார். 1960ஆம் ஆண்டு ஜனாதிபதி தேர்தலில் குடியரசுக் கட்சி ரிச்சர்ட் நிக்சனை எதிர்த்து வெற்றி பெற்றார். லிண்டன் ஜான்சன் இவரது துணை ஜனாதிபதியாவார்.

## உள்நாட்டுக் கொள்கை

கென்னடி கடைப்பிடித்த கொள்கை புதிய எல்லை New Frontier எனப்படும். இவரது திட்டங்களுக்கு காங்கிரஸ் முட்டுக்கட்டை போட்டது.

பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த விரும்பி 1962இல் எஃகு தொழிலாளர்களின் கூலி உயர்வையும், எஃகு உற்பத்தியாளர்களின் விலை உயர்வையும் அனுமதிக்கவில்லை. தொழிற்சங்க தலைவர்களுக்கிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றலாயின. இயந்திரங்களைப் பயன்படுத்துவதால் வேலையிழந்த தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபடலாயினர். உள்துறையின் ஒரு பிரிவாக அமைதிப்படை ஒன்று சர்ஜண்ட் ஷிரிவர் தலைமையில் அமைக்கப்பட்டது. வேலையற்ற இளைஞர்கள் பிற நாடுகளுக்கு சமூகசேவை செய்யவும், கல்வி கற்பிக்கவும் அனுப்பப்பட்டனர். 80 ஆயிரம் இளைஞர்கள் 63 நாடுகளுக்கு அனுப்பப்பட்டனர். பல நாடுகள் இவர்கள் அமெரிக்க உளவாளிகளாக இருக்கலாம் என்று கருதி திருப்பி அனுப்பி விட்டனர்.

நீக்ரோக்களின் சிவில் உரிமைப் போராட்டங்களுக்கு அதிக முக்கியத்துவம் தரப்பட்டது. நீக்ரோக்களை தனிமைப்படுத்த (Segregation) நடத்துவதை கண்டித்தார். நீக்ரோக்கள் சம உரிமை வேண்டி போராட்டங்களில் ஈடுபட்டனர். 1962இல் வெள்ளையர்கள் பயிலும் மாசிசிபி பல்கலைக்கழகத்தில் ஜேம்ஸ்மெரிடித் என்ற மாணவரைச் சேர்க்க, மாநில கவர்னர் ரோஸ்பெர்னட் என்பவர் எதிர்த்தார். பின் 1962 ஏப்ரலில் அலபாமா பல்கலைக்கழகத்தில் நீக்ரோ மாணவர்கள் சேர்க்கப்படுவதை அந்த மாநில கவர்னர் ஜார்ஜ்வாலேஸ் எதிர்த்தார். நீக்ரோக்கள் வன்முறையில் ஈடுபட்டனர்.

ஆனால் இந்த உரிமைப் போராட்டங்களில் காந்தீய வழியில் தன் போராட்டத்தை வகுத்துக் கொண்டவர் மார்டின் லூதர் கிங் ஆவார். 1963, ஆகஸ்ட் மாதம் வாஷிங்டன் நகரில் சுதந்திர நடை பயணம் (Freedom March) ஒன்றை தலைமையேற்று நடத்தினார். லிங்கன் நினைச்சின்னம் அருகில் இவர் நிகழ்த்திய உரை உணர்ச்சிகரமானதாகும். "I have a dream எனத் தொடங்கும் தனது உரையில் அமெரிக்க மக்கள் ஏற்றத்தாழ்வு இன்றி இன்பமுடன் வாழ்வதாக தான் கனவு காண்பதாக அறிவித்தார். உயர்வும் தாழ்வும் ஒன்றாகி வெறுப்பும் சினமும் இல்லாமல் கருப்பு இனத்தவர் கண்ணியமாக வாழ்வதாக கனவு காண்கின்றேன்" என்ற இவரது உரை மக்களைக் கவர்ந்தது. நீக்ரோக்களுக்குச் சம உரிமை கிடைக்க வழி செய்யுமாறு அதிபர் கென்னடியை வேண்டினார். எல்லாருக்கும் பொது உரிமை அளிக்கும் சட்டம் ஒன்றை 1963ஆம் ஆண்டு காங்கிரசுக்கு அனுப்பினார். ஆனால் அவ்வாண்டின் இறுதியில் 1963, நவம்பர் 22ஆம்

தேதி வெள்ளை ஆதிக்கம் படைத்தவனால் சுட்டுக் கொல்லப்பட்டார். இச்செய்தி உலகத்தை உலுக்கிவிட்டது. லீ ஹார்வி ஆஸ்வால்ட் என்ற கொலைகாரன் உடனடியாக கைது செய்யப்பட்டான். ஆனால் இவனை வேறு சிறைக்குக் கொண்டு செல்லும்வழியில் ஜேக்ரூபி என்பவனால் சுட்டுக் கொல்லப்பட்டான். கென்னடி கொலையை 'வாரன் கமிசன்' விசாரித்தது. ஆனால் அது ஒரு முழுமையான அறிக்கையை அளிக்கவில்லை. கென்னடியின் கொலை மர்மம் விடுவிக்கப்படவில்லை.

## *வெளிநாட்டுக் கொள்கை*

ஜான் எப்.கென்னடி பதவிக்கு வந்தபோது 1945ஆம் ஆண்டு இருந்த உலக அரசியல் நிலைமை முற்றிலும் மாறியிருந்தது. பனிப்போர் கொள்கைகள் மாற்றியமைக்க வேண்டியிருந்தது. பிரிட்டிஷ், பிரெஞ்சு, டச்சு பேரரசுகள் மறைந்து விட்டன. இதனால் ஆசியா, தூரகிழக்கு, மத்யகிழக்கு, ஆப்பிரிக்கா ஆகிய நாடுகளிடையே அமெரிக்காவின் வெளியுறவுக் கொள்கை, சோவியத் யூனியனுக்கு எதிராக உருவாக்கப்பட வேண்டியிருந்தது. கென்னடிக்கு பெரும் சவால்கள் முன்னே நின்றன. இவர் பதவியேற்ற பொழுது ரஸ்யாவின் குருச்சேவ் மாஸ்கோவில் உரையாற்றிய போது கிழக்கே வியட்நாமிலிருந்து, மேற்கே கியூபா வரை சோவியத்தின் ஆதிக்கம் விரிவடைந்திருக்கிறது என்றும், சோசலிச பாதையை தடுத்து நிறுத்த எந்த ஒரு சக்தியாலும் முடியாது எனக் கூறினார். இந்தச் சவால்களை முறியடிக்க கென்னடிக்கு உறுதுணையாக, வெளியுறவுச் செயலர் டீன்ரஸ்க், படைத்துறை செயலர் ராபர்ட் மக்னமாரா மற்றும் திறமைமிக்க அதிகாரிகள் உறுதுணையாக இருந்தனர்.

1945இல் இலத்தீன் அமெரிக்கா, ஆசியா, ஆப்பிரிக்காவில் உள்ள நாற்பது நாடுகள் சுதந்திரமடைந்தன. இவற்றோடு அயலுறவுகளை வளர்ப்பதில் அமெரிக்கா கவனம் செலுத்த வேண்டியிருந்தது. மூன்றாம் உலக நாடுகளுடன் கடைப்பிடிக்க வேண்டிய அயலுறவுக் கொள்கை கென்னடியால் மாற்றியமைக்கப்பட்டது. இவரது வெற்றியை மூன்றாம் உலக நாடுகள் வரவேற்றன. அந்நாட்டுத் தலைவர்கள் வெள்ளை மாளிகை நோக்கிச் சென்றனர். கென்னடி அவர்கள் தங்கள் நாட்டுப் பிரச்சினைகளில் தீவிர அக்கறை கொண்டிருப்பதை உணர்ந்தனர். இந்நாடுகளுக்கு உதவ Peace Corps என்ற அமைதிப்படையில் பத்தாயிரம் இளைஞர்கள் சேர்க்கப்பட்டிருந்தனர்.

## *பிக்ஸ் வளைகுடா படையெடுப்பு*
## (Bay of Pigs Invasion 1961)

கியுபாவில் பிடல் காஸ்ட்ரோவின் ஆட்சியைக் கவிழ்க்க ஒரு சதித்திட்டம் தீட்டப்பட்டது. நாடு கடத்தப்பட்ட கியுபாக்காரர்களுக்கு குவாடிமாலாவில் பயிற்சி அளித்து கியுபாவில் கலவரத்தில் ஈடுபடுவதற்காக 1961, ஏப்ரல் 17ஆம் தேதி ஹவானாவிற்கு 90 மைலுக்கு தென்மேற்கில் உள்ள பிக்ஸ் வளைகுடாவில் இறக்கிவிடப்பட்டனர். ஆனால் இவர்களை காஸ்ட்ரோவின் படைகள் எளிதாக வென்றன. 1100 பேரைக் கைது செய்தனர். இவர்களை மீட்க அமெரிக்க அரசாங்கம் 53 மில்லியன் டாலர்கள் மதிப்புள்ள உணவு மற்றும் மருந்துப் பொருட்களை தர வேண்டியிருந்தது. இது கென்னடிக்கு ஒரு தோல்விதான்.

## முன்னேற திட்டத்திற்கான உடன்பாடு (Alliance For Progress)

பிராங்களின் ரூஸ்வெல்ட் கடைப்பிடித்த நல்ல அயலார் கொள்கையைப் பின்பற்றி அந்நாடுகளின் முன்னேற்றத்திற்கான திட்டம் 1961, ஆகஸ்ட் மாதம் உருகுவேயில் புந்தா டெல் எஸ்டி (Punta Del Este) என்ற இடத்தில் நடைபெற்ற மாநாட்டில் கையெழுத்திடப்பட்டது. இலத்தீன் அமெரிக்க நாடுகளுக்கு பொருளாதார உதவி செய்யப்பட்டது. இலத்தீன் அமெரிக்க நாடுகள் கியுபாவுடன் ராஜ்ஜிய உறவுகளை முறித்துக் கொள்ளவேண்டும். அமெரிக்க மூலதனங்களுக்கு உத்தரவாதம் தரப்பட வேண்டும். உதவித் தொகையில் 80 சதவீதம் அமெரிக்க பொருட்களை வாங்க செலவிட வேண்டும் என்ற கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன.

## இந்தோசீனா

இரண்டாவது ஜெனிவா மாநாடு 1963, ஜூலையில் கூடியது. அமெரிக்காவுடன் 13 நாடுகள் சேர்ந்து லாவோசின் சுதந்திரத்தை அங்கீகரித்தன. அமெரிக்க ஆதரவுடன் தென்வியட்நாமில் பதவிக்கு வந்த டையீம் என்பவரை எதிர்த்து வியட்காங் தேசியவாதிகள் கலவரத்தில் ஈடுபட்டனர். அவர்களை அடக்க அமெரிக்கப்படைகள் உதவி அனுப்பப்பட்டது. ஆனால் அமெரிக்கத் திட்டங்களுக்கு டையீம் ஒத்துவராததால் அவரை பதவி நீக்கம் செய்து டு வாங் வான்மின் அதிபராக்கப்பட்டார்.

வியட்நாமில் அமெரிக்கத் தலையீட்டிற்கு அமெரிக்காவில் எதிர்ப்பு வலுத்தது. அமெரிக்க

பாதுகாப்புத்துறை செயலர் மெக்நமாரா, வியட்நாமில் உள்ள அமெரிக்கப் படைகள் 1965க்குள் விலக்கிக் கொள்ளப்படும் என அறிவித்தார். ஆனால் கென்னடி சுட்டுக் கொல்லப்பட்டார்.

## இலத்தீன் அமெரிக்க பிரச்சனைகள்

அமெரிக்காவிற்கு அருகாமையில் இருந்த கியூபாவில் 1959இல் பிடல் காஸ்ட்ரோ அமெரிக்க எதிர்ப்பு கம்யூனிச ஆட்சியை நிறுவினார். அவர் சோவியத் யூனியனுடன் நெருக்கம் காட்டினார். 1962, அக்டோபரில் பனிப்போர் உச்சகட்ட நிலையை அடைந்தது. கியூபாவின் மீது பறந்த அமெரிக்க இராணுவ வேவு விமானங்கள், அங்கு சோவியத் யூனியன் நிறுவியிருந்த கண்டம் விட்டு கண்டம் தாவும் ஏவுகணைகள் நிறுவப்பட்டிருந்ததை கண்டறிந்தன. இதனை அறிந்த கென்னடி அதிர்ச்சியடைந்தார். மிகக்குறைந்த தூரத்தில் கியூபாவிலிருந்து புறப்பட்டு வரும் ஏவுகணைகளை தடுத்து நிறுத்த இயலாத நிலை. இந்தச் சூழ்நிலை கென்னடியின் நிர்வாகத்திற்கு ஒரு சோதனையான நேரமாக இருந்தது. ஏற்கனவே பிக்ஸ் வளைகுடா படையெடுப்பு தோல்வியில் முடிவடைந்தது ஒரு எச்சரிக்கையாகவும் அமைந்தது. எனவே இம்முறை மிகவும் திறமையுடன் வெற்றிகாண திட்டமிட்டார். வெள்ளை மாளிகை அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்தினார். இச்சமயம் ரஸ்யாவிலிருந்து ஒரு டஜனுக்கும் மேற்பட்ட படைக்கப்பல்கள் கியூபாவிற்கு வந்து கொண்டிருக்கும் செய்தியும் கிடைத்தது.

அக்டோபர் 22, 1962இல் கென்னடி தனது திட்டத்தை நாட்டு மக்களுக்கு அறிவித்துவிட்டு கியூபாவைச் சுற்றி கடல்

முற்றுகையிட ஆணையிட்டார். அறுபதாயிரம் படை வீரர்களை புளோரிடாவிற்கு அனுப்பி தயார் நிலையில் இருக்கச் செய்தார். உலக நாடுகள் அச்சத்தில் உறைந்தன. கென்னடியின் நடவடிக்கைகளுக்கு குருச்சேவின் பதில் என்னவாக இருக்கும் என எதிர்பார்த்தனர். அமெரிக்காவிற்கும் சோவியத் யூனியனுக்குமிடையே போர் நிகழுமா? என எதிர்பார்க்கப்பட்டது. அமெரிக்க நாடுகளின் கூட்டமைப்பு முழுமனதாக கென்னடியின் செயலை ஆதரித்தது. நிலைமையை உணர்ந்த குருச்சேவ் கியூபாவில் வைத்திருந்த ஆயுதங்களையும், ஏவுகணைகளையும் திரும்ப பெற்றுக் கொள்வதாக உறுதியளித்தார். பதிலுக்கு கியூபாவின் மீது படையெடுப்பதில்லை என்றும், துருக்கியில் உள்ள அமெரிக்க ஏவுகணை தளங்களை மூடிவிடுவதாகவும் கென்னடி உறுதியளித்தார். ஓர் உலகப்போர் தவிர்க்கப்பட்டது.

### அணு ஆயுதத் தடை ஒப்பந்தம் 1963

உலகில் அமைதியை நிலை நாட்டவும் அணுகுண்டு சோதனைகளைத் தடை செய்ய வேண்டும் என்ற இயக்கத்தை பெட்ரண்ட் ரசல் என்ற அறிஞர் தொடங்கினார். அமெரிக்கா, சோவியத் யூனியன், இங்கிலாந்து ஆகிய நாடுகளின் வெளியுறவு அமைச்சர்களுடன் பேச்சுவார்த்தை நடத்தினார். 'அணு ஆயுத சோதனை தடை' ஒப்பந்தம் செய்து கொண்டனர். ஆகாயத்திலும், நீருக்கடியிலும் அணு ஆயுத சோதனைகள் நடத்துவது தடை செய்யப்பட்டது. 105 நாடுகள் இவ்வொப்பந்தத்தில் கையெழுத்திட்டன. சீனாவும், பிரான்ஸும் கையெழுத்திட மறுத்துவிட்டன.

இவரது ஆட்சிக்காலத்தில் ரஷ்யா பெர்லின் நகரைப் பிரிக்க சுவர் ஒன்றை கட்டியது. இந்தியாவிற்கு PL480 திட்டத்தின் மூலம் பொருளாதார உதவி வழங்கப்பட்டது. 1962ஆம் ஆண்டு சீனா இந்தியாவின் மீது படையெடுத்தது. இக்கட்டான நிலையில் இருந்த இந்தியாவிற்கு கென்னடி உதவியளித்தார். சீனா போரை முடித்துக் கொண்டது. இதனால் இந்திய மக்களால் மிகவும் நேசிக்கப்பட்ட ஜனாதிபதியாக விளங்கினார். 1961இல் அமெரிக்க அரசியலமைப்பு 23வது திருத்தம் கொண்டுவரப்பட்டு கொலம்பியா மாவட்டத்தில் வசிப்பவர்களும் ஜனாதிபதி தேர்தலில் வாக்களிக்கும் உரிமை வழங்கப்பட்டது.

## அலகு 6.4

# லிண்டன் B. ஜான்சன்
# 1963-1969
# (Lindon Baines Johnson)

"செல்வமிகு சமுதாயத்தை மட்டுமல்லாமல் சீர்மிகு சமுதாயத்தை நோக்கி முன்னேறுவதற்கான வாய்ப்பு நமக்குக் கிடைத்துள்ளது."

ஜான்சன்.

ஜான் F.கென்னடி சுடப்பட்டதை அடுத்து அவரது துணைஜனாதிபதியாக இருந்த லிண்டன் B.ஜான்சன் ஜனாதிபதி பதவி ஏற்றார். (1963, நவம்பர் 22) பின்னர் 1964இல் நடைபெற்ற ஜனாதிபதி தேர்தலிலும் ஜனநாயகக் கட்சியின் வேட்பாளராகப் போட்டியிட்டு மீண்டும் ஜனாதிபதியாக பதவியேற்றார். தனது கொள்கையாகச் சீர்மிகு சமுதாயம் (Great Society) என்ற அமைப்பை உருவாக்கத் திட்டமிட்டார். நீக்ரோ சிவில் உரிமைப் போராட்டங்கள் தொடர்ந்தன. வியட்நாமில் அமெரிக்கா தீவரமாக தலையிட வேண்டியிருந்தது.

லிண்டன் ஜான்சன் டெக்ஸாஸ் மாநிலத்தை சேர்ந்தவர். தந்தை சாம் ஏலி ஜான்சன் டெக்ஸாஸ் மாநில பிரதிநிதிகள் சபையில் பத்து ஆண்டுகாலம் பதவியிலிருந்தார். ஜான்சன் ஆசிரியர் பயிற்சி கல்லூரியில் 1927இல் சேர்ந்து படிப்பை

முடித்தார். அரசியலில் 1932 முதல் ஈடுபட்டார். 1937-1949 வரை அமெரிக்க கூட்டாட்சி பிரதிநிதிகள் சபையில் டெக்காஸ் மாநிலத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டார். இரண்டாம் உலகப்போரில் அமெரிக்க கடற்படையில் பணியாற்றினார். 1949-1961 வரை அமெரிக்க செனட் மன்ற உறுப்பினராக பணிபுரிந்தார். ஜான் F.கென்னடியின் துணை ஜனாதிபதியாக 1960ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்டார். கென்னடியின் திடீர் மரணம் இவரை ஜனாதிபதியாக்கியது. இரண்டாம் முறையும் ஜனாதிபதியானர்.

### *சீர்மிகு சமுதாயம்*

செல்வமிகு சமுதாயத்தை மட்டுமல்லாமல் சீர்மிகு சமுதாயத்தை உருவாக்க வாய்ப்பு கிடைத்துள்ளதாக மிச்சிகன் பல்கலைக்கழகத்தில் உரையாற்றும்போது அறிவித்தார். இதன் மூலம் ஏழ்மை, வறுமையில் வாடும் அமெரிக்கர்களுக்கு குறைந்தபட்ச ஊதியம், மருத்துவம், இன்சூரன்ஸ் வசதி, வேலையில்லாதவர்கட்கு உதவி போன்றவை கிடைக்க ஏற்பாடுகள் செய்தார்.

பொருளாதார வாய்ப்பளிக்கும் சட்டம் ஒன்று 1964இல் இயற்றப்பட்டது. 16 முதல் 21 வயதிற்குட்பட்ட இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு பயிற்சியளிக்கப்பட்டது - VISTA. Volunteers in service to America - அமெரிக்க சேவையின் பணியாளர்கள் என்ற அமைப்பு உருவாக்கப்பட்டு சேவை புரியவர்களை ஈடுபடுத்தியது. மாணவர்கள் படிக்கும்போதே வேலைவாய்ப்பு அளிக்க வேலை-கல்வித்திட்டம் (Work - Study - Program) கொண்டுவரப்பட்டது. மற்றும் 'வேலை அனுபவத் திட்டம்',

'சமுதாய செயல் திட்டம்' போன்றவற்றினால் பயிற்சிகள் அளிக்கப்பட்டன. 65 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு மருத்துவ இன்சூரன்ஸ் திட்டம் கொண்டு வரப்பட்டது.

சுற்றுச்சூழலை பாதுகாக்கவும், தண்ணீர், காற்று இவற்றின் தூய்மையை பாதுகாக்கவும், தேவையான சட்டங்கள் இயற்றப்பட்டன. நுகர்வோர் நலன்களைப் பாதுகாக்க பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. பெட்டிகள் உள்ளே அடைத்து விற்கப்படும் பொருட்களின் விபரங்கள் அச்சிடப்பட வேண்டும் என கட்டாயப்படுத்தப்பட்டது. நெடுஞ்சாலை பாதுகாப்புச் சட்டம், இறைச்சி பாதுகாப்பு சட்டம் போன்ற பல சட்டங்கள் மக்கள் நலனை பேணுவதாக இருந்தன.

அரசியலமைப்புக்கு 1964ஆம் ஆண்டு 24வது திருத்தம் கொண்டு வரப்பட்டு தேர்தல்வரி ரத்து செய்யப்பட்டது. 25வது அரசியலமைப்பு திருத்தத்தின்படி துணை ஜனாதிபதி காலியாகும் போது, காங்கிரசின் ஒப்புதலின்படி நியமனம் செய்துகொள்ள ஜனாதிபதிக்கு அதிகாரம் வழங்கப்பட்டது.

நீக்ரோ மக்களுக்கு சம உரிமை அளிப்பது தொடர்பாக 1964இல் 'சிவில் உரிமைச் சட்டம்' கொண்டுவரப்பட்டது. "நீக்ரோக்களின் வாக்குரிமைகளைப் பாதுகாக்கவும், பள்ளிகள், பேருந்துகளில், பொதுஇடங்களில் இனப்பாகுபாட்டை அகற்றவும், சமவேலை வாய்ப்புகளை வழங்கவும்", கூட்டாட்சி அரசுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. மார்டின் லூதர்கிங் அலபாமா மாநிலத்தில் செல்மா என்ற நகரிலிருந்து தலைநகர் மாண்ட்கோமரிக்கு 1965, பிப்ரவரியில் பாதயாத்திரை தொடங்கியபோது கைது செய்யப்பட்டார். இதனால் கலவரங்கள் ஏற்பட்டன.

Black Panther – கருஞ்சிறுத்தைகள் என்ற தீவிரவாத அமைப்பு 1966இல் கலிபோர்னியாவில் தொடங்கப்பட்டது. 1967இல் நூறு நகரங்களில் வன்முறை கலவரங்கள் நடந்தன. டெட்ராய்ட் நகரில் நடந்த வன்முறை மிகவும் மோசமானதாகும். நீக்ரோக்கள் வாக்குரிமை பெற கல்வி சோதனை முறையை ஜான்சன் ரத்து செய்தார். 1968இல் நீக்ரோக்களுக்கு வீடுகள் விற்பது, வாடகைக்கு விடப்படுவது தொடர்பாக உள்ள சிரமங்கள் களையப்பட்டன. 1968 ஏப்ரல் 4ஆம் தேதி மெம்பஸ் என்ற நகரில் இனவெறி கொண்ட வெள்ளையன் ஒருவனால் மார்டின்லூதர் கிங் சுடப்பட்டார். இனவெறி அடங்குவதாக இல்லை. நீக்ரோக்களின் வாழ்வு எதிர்பார்த்த அளவு முன்னேறவில்லை.

## *வெளிநாட்டுக் கொள்கை*

ஜான்சனின் முதல் நடவடிக்கை டொமினிக்கன் குடியரசின் விவாரங்களில் தலையிட்டது தான். அங்கு ஜீவன்பாஷ் என்ற தலைவர் அதிபராக தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் எடுத்த சீர்திருத்த நடவடிக்கைகள் அமெரிக்க முதலீடுகளுக்கு ஆபத்தாக அமைந்தன. எனவே அதிபரை கவிழ்க்க அமெரிக்க உளவு நிறுவனம் சதி செய்தது. மீண்டும் ராணுவ சர்வாதிகாரி அமர்த்தப்பட்டார். அதற்கு எதிர்ப்பு தெரிவித்து கலகங்கள் தோன்றின. 1965இல் 20 ஆயிரம் அமெரிக்க துருப்புகள் அனுப்பப்பட்டனர். கிளர்ச்சி அடக்கப்பட்டது. இதே போல் குவாடிமாலாவிலும் ஆட்சி கவிழ்க்கப்பட்டது.

வடகொரியா பகுதியில் நின்று கொண்டிருந்த பியுப்ளோ என்ற உளவுக்கப்பல் வட கொரிய

ராணுவத்தினரால் பிடித்துச் செல்லப்பட்டது. அமெரிக்க மாலுமி ஒருவர் கொல்லப்பட்டார். கப்பல் சர்வதேச கடல் பகுதியில்தான் இருந்தது என அமெரிக்கா வாதிட்டது. ஆனாலும் அமெரிக்கா மன்னிப்பு கேட்ட பின்னரே கப்பல் விடுவிக்கப்பட்டது.

### *வியட்நாம் சிக்கல்*

வியட்நாமில் அமெரிக்கா தலையிட்டது தூரகிழக்கு மற்றும் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் மிகப்பெரும் அரசியல் சிக்கலை உருவாக்கியது. 1970இல் 38 இலட்சம் மக்களைக் கொண்ட வியட்நாம் வடக்கு, தெற்கு என இரு வியாட்நாம்களாகச் செயல்பட்டன. கி.பி.1615இல் வியட்நாமில் நுழைந்த பிரான்ஸ் அங்கு கத்தோலிக்க கிறித்தவ மதத்தையும், கல்வியையும் கொண்டுவந்தது. கி.பி.1885இல் வியாட்நாம் பிரான்சின் கட்டுப்பாட்டில் நிர்வகிக்கப்பட்டது. இரண்டாம் உலகப்போரில் ஜப்பான் வியட்நாமைக் கைப்பற்றியது. இருந்தபோதும் பிரான்சை நாட்டை ஆள்வதற்கு அனுமதித்தது.

கி.பி.1945இல் பேரரசர் பவோ டாய்-யிடம் அவரது நாடு சுதந்திரமடைந்து விட்டதாக ஜப்பான் கூறியது. பிரெஞ்சு ஆதிக்கம் முடிவுற்றது. ஆகஸ்ட் 1945இல் ஹோசிமின், முப்பது ஆண்டு காலமாக தனது நாடு விடுதலையடைய வேண்டும் எனப் போராடி வந்தவர். ஹனோயில் கம்யூனிச அரசாங்கத்தை நிறுவினார். இவரது ஆதிக்கத்தை ஏற்ற மன்னர் வடவியட்நாமில் ஜனநாயக குடியரசு ஏற்பட்டதை ஏற்றுக்கொண்டார்.

ஹோசிமின் ஒரு கிராமத்து பள்ளி ஆசிரியரின் மகனாக மே 19, 1890இல் பிறந்தார். பழைய தலைநகரான ஹியூ (Hue)வில் கல்லூரிக் கல்வியை 1905-1910இல் முடித்தார். ஒரு பிரெஞ்சுக் கப்பலின் சமையல்காரருக்கு உதவியாளராக பணிபுரிந்தார். உலகின் பல பகுதிகளுக்கும் சென்றவர் பிரான்சில் ஒரு புகைப்பட நிலையத்தில் பணியில் சேர்ந்தார். கி.பி.1918இல் பிரான்சின் சோசலிஸ்ட் கட்சியில் சேர்ந்தார். வியட்நாமின் விடுதலைக்குப் பாடுபட்டார். அந்நாட்டு மக்களின் கோரிக்கைகள் என்ன என்பதை 1919ஆம் ஆண்டு பாரிசில் நடந்த ஒரு சர்வதேச கருத்தரங்கில் தெரிவித்தார். இதுவே வியட்நாமின் முதலாவது விடுதலை பிரகடனம் எனலாம்.

லெனினின் கோட்பாடுகளைப் படித்த இவர் 1920இல் கம்யூனிஸ்ட் கட்சியில் இணைந்தார். வியட்நாமின் முதலாவது கம்யூனிஸ்ட்டும் இவர்தான். இந்தோ சீனாவின் பிரதிநிதியாக மாஸ்கோவில் நடைபெற்ற ஐந்தாவது உலக கருத்தரங்கில் 1924 ஜூன் மாதம் கலந்து கொண்டார். வியட்நாமிய இளைஞர்களின் புரட்சி அமைப்பை உருவாக்கினார். 1930இல் வியட்நாமிய கம்யூனிஸ்ட் கட்சிக்கு தலைமை தாங்கினார். முப்பதாண்டுகள் அங்கும் இங்கும் அலைந்த ஹோசிமின் 1941 பிப்ரவரியில் வியட்நாம் திரும்பினார். 'வியட்நாமிய மக்கள் படை' ஒன்றை 1924இல் உருவாக்கினார். தேசிய விடுதலைக் குழுவின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார். தென்கிழக்கு ஆசியாவில் முதலாவது தொழிலாளர்கள் மற்றும் விவசாயிகளுடைய அரசை நிறுவ வழிவகுத்தார். வியட்நாம் ஜனநாயகக் குடியரசின் பிரதமராக 1945 முதல் 1955 வரை பணியாற்றினார்.

பிரான்ஸ் தனது ஆதிக்கத்தை மீண்டும் கொண்டுவர நினைத்தது. கம்யூனிஸ்ட்கள் அல்லாத வியட்நாமியர்களைக் கொண்டு தென்வியட்நாம் அரசு ஒன்றை சைகோன் என்ற இடத்தில் நிறுவினர். கம்யூனிஸ்ட்களின் ஆதிக்கத்தை ஒழிக்க வேண்டும் என நினைத்த அமெரிக்கா பிரான்ஸிற்கு உதவியது. வடக்கு, தெற்கு வியட்நாம் மோதல்கள் தேவையில்லாமல், முடிவு தெரியாமல் நடந்து கொண்டிருந்தது. கி.பி.1954இல் ஹோசிமின் பிரெஞ்சுப் படைகளை எதிர்த்து வெற்றிபெற்றார். ஜெனிவா ஒப்பந்தத்தின்படி ஜூலை 1954இல் வியட்நாம் அதிகாரபூர்வமாக வடக்கு, தெற்கு என பிரிக்கப்பட்டது. பதினேழாவது அட்சரேகை எல்லையாக வகுக்கப்பட்டது.

### அமெரிக்க தலையீடு

தென்வியட்நாமின் பாதுகாவலராக அமெரிக்கா தன்னை 1954இல் அறிவித்துக்கொண்டது. கம்யூனிஸ்ட் வடவியட்நாமுடன் போரில் ஈடுபட்டது. தென்வியட்நாம் வீழ்ந்துவிட்டால், கம்போடியா, லாவோஸ், தாய்லாந்து, மலேயா, பிலிப்பைன்ஸ், இந்தோனேசியா, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகள் கம்யூனிஸ்ட்களின் வசமாகிவிடும் என அமெரிக்கா எண்ணியது. எனவே தென்வியட்நாமை காப்பாற்ற வேண்டியது கடமை எனக் கருதியது.

இரண்டு வியட்நாம்களில் வடவியட்நாம் மக்கள் நீண்டகாலமாக பிரெஞ்சு ஆதிக்கத்தை எதிர்த்து போரிட்டவர்கள். ஹோசிமின்னின் தலைமையில் வடவியட்நாம் திறமையுடன் ஆளப்பட்டு வந்தது. ஆனால் தென்வியட்நாமில் நிகோடிங்டையிம் (Ngo Dinh Diem) என்பவரின் தலைமையில் ஆட்சி நடைபெற்றது. "இவர்

அதிகார வெறி பிடித்தவர், வளைந்து கொடுக்காதவர்" என சி.ஐ.ஏ. அதிகாரிகள் அமெரிக்க அரசாங்கத்திற்கு தகவல் அனுப்பியிருந்தனர். இவர் கொண்டுவந்த நிலச் சீர்திருத்தங்கள் விவசாயிகளை வெறுப்பேற்றியது. அதனால் மக்கள் இவரை எதிர்த்து புரட்சியில் ஈடுபடலாயினர். சி.ஐ.ஏ.வின் எச்சரிக்கைகளை ஐஸன் ஹோவரின் வெளியுறவுச் செயலர் டல்லஸ் சட்டைசெய்யவில்லை. 1954 ஜூலையில் ஏற்பட்ட ஜெனிவா ஒப்பந்தத்தை டல்லஸ் ஏற்றுக்கொள்ளவில்லை.

வியட்நாம் மக்களின் கலாச்சாரம், வரலாறு தேசப்பற்று போன்றவற்றை வாஷிங்டனில் உள்ள வெளியுறவுத்துறை அதிகாரிகள் சரியாகப் புரிந்து கொள்ளாத காரணத்தால் தேவையில்லாமல், முடிவு தெரியாமல் வியட்நாம் விவகாரத்தில் அமெரிக்கா தலையிட்டு தோல்வியடைந்தது. இப்பிரச்சினை 1973 வரை நீடித்தது. வியட்நாமுடன் வெளியுறவுக் கொள்கை சிக்கல் நிறைந்ததாக இருந்தது.

வியட்நாம் விவகாரம் மேலும் சிக்கலாயிற்று. வெற்றிகிட்டும் வரை போரிடுவது என ஜான்சன் திட்டமிட்டார். இவரது திட்டத்திற்கு அமெரிக்க மக்கள் எதிர்ப்பு தெரிவித்தனர். ஐ.நா.சபை பேச்சு வார்த்தை நடத்த வேண்டும் என வேண்டுகோள் விடுத்தது. அமெரிக்க கப்பல்கள் உதவியுடன் தென்வியட்நாம் கப்பல்கள் வடவியட்நாமின் மீன்பிடிக் கப்பல்களைத் தாக்கின. டென்கின் வளைகுடாவில் அமெரிக்கக் கப்பல்கள் தாக்குதல் நடத்தின. வடவியட்நாமின் ஆயுத தாக்குதலை முறியடிக்க அதிகாரம் ஜான்சனுக்கு காங்கிரஸ் வழங்கியது. வடவியட்நாம் மீது வெளிப்படையாக அறிவிக்கப்படாத போர்

ஏற்பட்டது. 1965 பிப்ரவரியில் வடவியட்நாம் மீது தாக்குதல் ஆரம்பமானது. போர் எட்டு ஆண்டுகள் நீடித்தன. இரண்டு லட்சம் அமெரிக்க வீரர்கள் வியட்நாம் போரில் ஈடுபடுத்தப்பட்டனர். 1968இல் ஐந்து இலட்சம் வீரர்கள் அனுப்பப்பட்டனர். கடுமையான விஷவாயு குண்டுகள் வீசப்பட்டன. காடுகள், வயல்கள், தொழிற்சாலைகள் யாவும் நாசமாக்கப்பட்டன. அமெரிக்க படையினரால் வெற்றிகொள்ள முடியவில்லை. ஜான்சன் தாக்குதல்களை தீவிரப்படுத்தினார்.

தாக்குதல்களை நிறுத்தும் வரை பேச்சுவார்த்தைகளுக்கு சம்மதிப்பதில்லை என வடவியட்நாம் கூறியது. அமெரிக்காவில் போரை நிறுத்தும்படி ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன. 1967இல் நியுயார்க் நகரில் போர் எதிர்ப்பு பேரணியில் ஒரு இலட்சம் பேர் கலந்து கொண்டனர். 1968ஆம் ஆண்டு ஜனாதிபதி தேர்தலில் தாம் நிற்கப்போவதில்லை என்றும், நிபந்தனை இல்லாமல் இரு தரப்பினரும் குண்டு வீச்சுகளை நிறுத்த வேண்டும் என்று ஜான்சன் கூறினார். வடவியட்நாம் இதனை ஏற்றுக்கொண்டது. பேச்சு வார்த்தைகள் தொடர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

# அலகு 6.5

# ரிச்சர்ட் நிக்சன் 1969-1974 (RICHARD NIXON)

அரசியலில் முதலாவது கோட்பாடு நெகிழ்ந்து கொடுப்பதுதான்.

"Flexibility is the first Principle of Politics"

நிக்சன்.

வியட்நாம் பிரச்சினை காரணமாக ஜனநாயக கட்சியினர் செல்வாக்கு இழந்தனர். எனவே 1968-இல் நடைபெற்ற ஜனாதிபதி தேர்தலில் குடியரசு கட்சியைச் சேர்ந்த ரிச்சர்ட் நிக்சன் வெற்றி பெற்றார். அமெரிக்காவின் முப்பத்தேழாவது ஜனாதிபதியானார். வியட்நாம் போரை முடிவதற்குக் கொண்டுவந்தார். சீனாவுடன் நட்புறவை ஏற்படுத்தினார். ஆனால் இவர் வாட்டர்கேட் ஊழலில் சிக்கினார் அதனால் 1974 ஆகஸ்டில் பதவியை இராஜினாமா செய்தார். ஊழல் காரணமாக பதவியிலிருக்கும்போது இராஜினாமா செய்த முதல் அமெரிக்க ஜனாதிபதி இவரே.

நிக்சன் கலிபோர்னியா மாநிலத்தைச் சேர்ந்தவர் 1913ஆம் வருடம் ஜனவரியில் பிறந்தார். 1934 முதல் 1937 வரை டியூக் பல்கலைக்கழகத்தில் சட்டம் பயின்ற பின்னர் வழக்கறிஞராக பதிவு செய்து கொண்டார். இரண்டாம்

உலகப்போரின்போது கடற்படைத் தளபதியாக 1942 முதல் 1946 வரை பணிபுரிந்தார். 1947 முதல் 1950 வரை அமெரிக்க பிரதிநிதிகள் சபையின் உறுப்பினராக பதவி வகித்தார். 1951ஆம் ஆண்டு அமெரிக்க செனட்டராக கலிபோர்னியா மாநிலத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ஐசன் ஹோவர் ஆட்சியில் இருமுறை துணை ஜனாதிபதியாக பதவி வகித்தார். 1960ஆம் ஆண்டு ஜனாதிபதி தேர்தலில் ஜான்.F.கென்னடியிடம் தோல்வியடைந்தார். 1968இல் குடியரசு கட்சியின் சார்பாக ஜனாதிபதி தேர்தலில் வெற்றி பெற்றார்.

## வெளிநாட்டுக் கொள்கை (NIXON DOCTRINE)

இவரது வெளிநாட்டுக் கொள்கை இவரது நிக்சன் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்ததாகும். "தனது நட்பு நாடுகள் பாதுகாப்புக்காக அமெரிக்கா உதவும் என்றும், அதேசமயம் உலகின் சுதந்திர நாடுகளின் பாதுகாப்பிற்கான நடவடிக்கைகளையும் திட்டங்களையும் அமெரிக்கா மட்டுமே மேற்கொள்ள முடியாது" என்றும் குறிப்பிட்டார்.

வியட்நாமிலிருந்து அமெரிக்க படைகள் வெளியேற்றப்படும் என்றும், படைகள் வெளியேறுவதை மேற்பார்வையிட ஒரு மேற்பார்வைக் குழு அமைக்கப்படும் என்றும், போர்க் கைதிகளை இரு தரப்பினரும் விடுவிக்க வேண்டும் என்றும் நிக்சன் தனது கோட்பாட்டில் அறிவித்திருந்தார்.

அமெரிக்கப் படைகள் விலக்கிக் கொள்ளப்படுவதால் தென்வியட்நாமிய படைகளுக்குப் போர்ப்பயிற்சி

அளிக்கப்பட்டது. ஆனால் 1970 ஏப்ரலில் அமெரிக்க தென்வியட்நாம் கூட்டுப்படைகள் கம்போடியா மீது படை எடுத்தன. அங்குள்ள கம்யூனிச அரசுக்கு எதிராகவே இப்படையெடுப்பு என்றார் நிக்சன். ஆனால் இந்த படையெடுப்பை பொதுமக்கள் விரும்பவில்லை. கென்ட் மாநில பல்கலைக்கழக மாணவர்கள் கிளர்ச்சியை வன்முறை மூலம் அடக்கப்பட்டது. டொன்கின் வளைகுடா தீர்மானத்தின்படி ஜனாதிபதிக்கு வழங்கப்பட்ட அதிகாரங்கள் 1970 ஜூன் மாதம் செனட் மன்றம் ரத்து செய்தது. 1972ஆம் ஆண்டு அமெரிக்க தரைப்படையினர் விலக்கிக் கொள்ளப்பட்டனர். தேசிய பாதுகாப்பு ஆலோசகர் ஹென்றி கிஸ்ஸிங்கர், வடவியட்நாம் பிரதிநிதி விடுதோ என்பவருடன் பேச்சு வார்த்தை நடத்தினார். 1973 ஜனவரி 27ஆம் தேதி பாரிசில் ஏற்பட்ட ஒப்பந்தப்படி வியட்நாம் போரை முடிவிற்குக் கொண்டு வர முடிவு செய்யப்பட்டது. வியட்நாமின் இறைமையை அமெரிக்கா ஏற்றுக்கொண்டது. இந்த போரில் 110 மில்லியன் டாலர்கள் செலவு செய்யப்பட்டது. 58000 அமெரிக்க வீரர்கள் கொல்லப்பட்டனர். மூன்று இலட்சம் வீரர்கள் காயமடைந்தனர்.

### *புதிய சீனக் கொள்கை* (New China Policy)

கம்யூனிஸ்ட் தலைவர் மாசேதுங்கின் தலைமையில் இருந்த சீன அரசை அமெரிக்கா அங்கீகரிக்கவேயில்லை. மேலும் ஐக்கிய நாடுகள் சபையில் சீனா உறுப்பினராவதை அமெரிக்கா எதிர்த்துக் கொண்டே வந்தது.

இந்நிலையில் சீனா 1971 ஏப்ரலில் அமெரிக்க மேஜை பந்தாட்டக் குழுவை (Ping-Pong) சீனாவில் விளையாட

அழைத்தது. இதன் மூலம் சீன அமெரிக்க நட்புறவில் ஒரு திருப்பம் ஏற்படும் என்று நம்பிக்கை தெரிவிக்கப்பட்டது. இதற்கு 'பிங்பாங் இராஜதந்திரம்' (Ping-Pong Diplomacy) என்று பெயர்.

அமெரிக்க சீன உறவு வலுப்பெற ஆரம்பித்தது. சீனாவிற்குச் செல்ல அமெரிக்கர்களுக்கு இருந்த கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டன. தூதர்களின் பேச்சுவார்த்தைகள் தொடங்கப்பட்டது. 1971, ஏப்ரலில் சீனாவை ஐக்கிய சாட்டு சபையில் சேர்த்துக் கொள்ளுவதை அமெரிக்கா ஆதரிக்கும் என காங்கிரசுக்கு அறிக்கை அனுப்பினார். வெளியுறவுச் செயலர் ஹென்றி கிஸ்ஸிங்கர் பீகிங் பயணம் செய்தார். சீனாவிற்கும் மேலைநாடுகளுக்குமிடையே இருந்த 'மூங்கில் திரை' (Bamboo curtain) விலகுவதற்கான அறிகுறிகள் தோன்றின.

சீனா அமெரிக்க ஜனாதிபதி நிக்ஸனை தங்கள் நாட்டிற்கு வரும்படி அழைப்பு விடுத்தது. ஐ.நா சபையில் சீனாவை சேர்த்துக் கொண்டு தைவானை வெளியேற்றும் தீர்மானத்தை 1971 அக்டோபர் மாதம் ஆதரித்தது. 1972 பிப்ரவரியில் ஜனாதிபதி சீனப் பயணத்தை மேற்கொண்டார். சீனாவிற்கு விஜயம் செய்த முதலாவது அமெரிக்க ஜனாதிபதி நிக்ஸனேயாவார். பசிபிக் பெருங்கடலில் அமைதியைக் காக்கவும், சர்வதேச பிரச்சினைகளை போர் மூலம் தீர்ப்பதில்லை என்றும் இருநாடுகளும் ஒப்புக் கொண்டன.

### *சாலட் உடன்படிக்கை 1972*

சோவியத் யூனியனுடன் அமெரிக்க உறவுகளில் முன்னேற்றம் ஏற்பட்டன. 1969ஆம் ஆண்டு ஹெல் சிங்கில்

பேச்சு வார்த்தைகள் துவங்கப்பட்டு 1971 வரை நடைபெற்றது. 1972 மே மாதம் நிக்சன் மாஸ்கோவிற்கு விஜயம் செய்த முதலாவது அமெரிக்க ஜனாதிபதியும் நிக்சன்தான். படைக்கலன்கள் குறைப்பு ஒப்பந்தம் (SALT) 1972 மே, 26இல் நிக்சனும், பிரஸ்னேவும் கையெழுத்திட்டனர். கண்டம் விட்டு கண்டம் தாவும் ஏவுகணை கட்டுப்படுத்தப்பட்டது.

## *உள்நாட்டுக் கொள்கை*

நிக்சனின் ஆட்சிக்காலத்தில் பணப்புழக்கமும் விலைவாசிகளும் உயர்ந்தன. டாலரின் மதிப்பு குறைந்தது. பொதுநலத்திட்டங்கள் நிதி குறைக்கப்பட்டது. புதிய பொருளாதாரக் கொள்கை ஒன்றை 1971இல் அறிவித்தார். இறக்குமதி வரி பத்து சதம் அதிகரிக்கப்பட்டது. ஊதிய உயர்வுகள் கட்டுப்படுத்தப்பட்டன. வெளிநாடுகளுக்கு அதிக உதவி அளித்ததால் அமெரிக்க டாலர் நாட்டை விட்டு வெளியேறியது. இதனால் நிதி நெருக்கடி ஏற்பட்டது நிக்சன் சில நடவடிக்கைகளை மேற்கொண்டார். தற்காலிகமாக அமெரிக்க டாலருக்கு ஈடாக தங்கம் கேட்கக்கூடாது என்று அறிவித்தார். அரசின் செலவினங்களை பதினைந்து சதம் குறைத்தல், பத்து சதவீத கூடுதல் இறக்குமதி வரிகள், மோட்டார் கார்கள் மீதான தீர்வை வரி அகற்றப்படும் என அறிவித்தார்.

சட்டம் ஒழுங்கை நிலை நாட்ட மூன்று குற்றவியல் சட்டங்கள் இயற்றப்பட்டது. 1. குற்றகட்டுப்பாடு சட்டம் 2. போதை மருந்து கட்டுப்பாட்டுச் சட்டம். 3. கொலம்பியா மாவட்ட குற்றவியல் நீதிச்சட்டம் ஆகியன இயற்றப்பட்டன.

1969ஆம் ஆண்டு சுற்றுச்சூழல் தரக் கொள்கைச் சட்டம் இயற்றப்பட்டு மாசுபடுதல் கட்டுப்படுத்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. அரசியலமைப்புக்கு இருபத்தியாராவது திருத்தம் கொண்டுவரப்பட்டு 18 வயது நிரம்பிய அனைவருக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது. விண்வெளி ஆராய்ச்சியில் அமெரிக்கா ஒரு மகத்தான சாதனை செய்தது. 1969 ஜூலை 16ஆம் தேதி நிலவிற்கு அப்பலோ II என்ற விண்கலம் கேப் கென்னடி முனையிலிருந்து அனுப்பப்பட்டது. விண்வெளி வீரர்கள் நீல் ஆம்ஸ்ட்ராங், மற்றும் ஆல்டிரின் ஆகிய இருவரும் நிலவில் கால் பதித்தனர். அமெரிக்கக் கொடியை நாட்டினர். 1971இல் அப்பலோ 15 என்ற விண்கலத்தில் சென்ற டேவிட்ஸ்காட், ஜேம்ஸ் இர்வின் ஆகியோர் நிலவில் மோட்டார் கார் ஓட்டி சாதனை படைத்தனர்.

## *வாட்டர் கேட் ஊழல்*

விஞ்ஞான சாதனைகள் புரிந்தாலும் அரசியலில் ஊழல் புரிந்து அழியாத அவமானத்தை நிக்சன் தேடிக் கொண்டார். 1972ஆம் ஆண்டு ஜனாதிபதி தேர்தலில் மீண்டும் நிக்சன் போட்டியிட்டார். அபரிதமான வாக்கு வித்தியாசத்தில் வெற்றிபெற்றார். இந்த வெற்றி முறைகேடான வழியில் ஈட்டியதாகும். ஜனநாயகக் கட்சியினரின் தலைமை அலுவலகம் வாஷிங்டனில் உள்ள வாட்டார் கேட் என்ற இடத்தில் அமைந்திருந்தது. அக்கட்சியினர் தேர்தல் யுக்திகள் எப்படிச் செய்கிறார்கள் என்பதை உளவறிந்து அவர்களது செயல்திட்டங்களை முறியடித்தனர். இந்த உளவு பணியில் பார்க்கர், மெக்கார்ட், மார்டின்ஸ், பிராங்க, வர்ஜிலியோ என்ற ஐந்து பேர் ஈடுபட்ட போது பிடிபட்டனர். இவர்கள் மீது வழக்கு தொடுக்கப்பட்டு நிரூபிக்கப்பட்டது.

இந்த ஊழல் விவகாரத்தை வாஷிங்டன் போஸ்ட் என்ற பத்திரிகை முதலில் வெளிப்படுத்தியது. இந்த ஊழல் விவகாரத்தில் தமக்கு தொடர்பில்லை என நிக்சன் கூறினார். ஆனாலும் விசாரணைக் கமிசன் நியமிக்கப்பட்டு ஏழு பேர் கொண்ட செனட் குழு விசாரித்தது. வாஷிங்டன் போஸ்ட் பத்திரிக்கையாளர்களான பாப்வுட்வர்ட், கார்ர் பெர்னஸ்டின் தகுந்த ஆதாரங்களைச் சமர்ப்பித்தனர். அரசின் அதிகாரிகள் நிக்சனுக்கு ஆதரவாகச் செயல்பட்டது அம்பலமானது. புலன்விசாரணை நேராடியாக டெலிவிஷனில் ஒளி பரப்பப்பட்டது. உண்மை வெளிக்கொணரப்பட்டது. ஓட்டுக் கேட்கப்பட்ட ஒலிநாடக்கள் வெளிக்கொணரப்பட்டன. இவ்விசாரணையை மேற்கொண்டவர் நீதிபதி ஜான்சிரிக்கா என்பவராவார்.

நிக்சன் தனக்கு எதிராக வாதிடும் அரசு வழக்கறிஞர்களை நீக்க முயற்சி செய்தார். இதனால் மக்கள் அதிர்ச்சியடைந்தனர். நிக்சன் பதவி விலக வேண்டும் என்ற கோரிக்கை எழுந்தது. நிக்சனின் துணை ஜனாதிபதி அக்நியு மீதும் ஊழல் குற்றச்சாட்டு நிரூபிக்கப்படவே அவர் பதவி விலகினார். அவ்விடத்தில் ஜெரால்ட் போர்ட் என்பவர் நியமிக்கப்பட்டார்.

வாட்டர் கேட் ஊழல் தொடர்ந்து விசாரிக்கப்பட்டு நிக்சனின் அடாவடி நடவடிக்கைகள் வெளிப்படுத்தப்பட்டன. நிக்சன் மீது தேச துரோக வழக்கு ஒன்றினை நியு ஜெர்சியைச் சேர்ந்த பீட்டர் ரோடினோ என்பவர் கொண்டு வந்தார். இவ்விசாரணையில் தாம் பதவிநீக்கம் செய்யப்படலாம் என்று அஞ்சி 1974 ஆகஸ்ட் 9ஆம் தேதி பதவியை ராஜினாமா செய்தார். பதவியின் போது இராஜினாமா செய்த முதல்

அமெரிக்க ஜனாதிபதியும் நிக்சன் தான். துணை ஜனாதிபதி ஜெரால்ட் போர்ட் ஜனாதிபதியானார். தனது விசேச அதிகாரத்தின் மூலம் நிக்சனின் குற்றங்கள் மன்னிக்கப்பட்டன என அறிவித்தார். நிக்சன் மனநிலை குன்றி நோய்வாய்ப்பட்டார். குற்றவாளிகள் நான்குபேர் தண்டனை பெற்றனர். இது அமெரிக்க ஜனநாயக நெறிமுறைகளுக்கும், பத்திரிகை சுதந்திரத்திற்கும் கிடைத்த வெற்றி எனலாம்.

## அலகு 6.6

# ஜெரால்ட் போர்டு 1974-1977 (GERALD FORD)

நிக்சன் வாட்டர்கேட் ஊழல் தொடர்பாக ராஜினாமா செய்தபின் ஜெரால்டு போர்டு ஜனாதிபதி பதவியேற்றார். நிக்சனுக்கு தனக்கு இருந்த விசேச அதிகாரத்தின் மூலம் மன்னிப்பு வழங்கினார். நிக்சனின் வெளியுறவுக் கொள்கையைக் கடைப்பிடித்தார். இவர் நெட்ராஸ்கா மாநிலத்தில் ஒமகா என்ற ஊரைச் சேர்ந்தவர். 1914 ஜூலை 14இல் பிறந்தார். இவரின் பெற்றோர்கள் விவாகரத்து செய்து கொண்டனர். இவரது தாயாரின் இரண்டாவது கணவர் ஜெரால்ட்டின் பெயரை தன் பெயருடன் சேர்த்து ஜெரால்ட் போர்டு ஆனார். புகழ்பெற்ற யேல் பல்கலைக்கழகத்தில் சட்டம் பயின்றார். இரண்டாம் உலகப்போரில் கடற்படையில் பணிபுரிந்தார். 1949ஆம் ஆண்டு அமெரிக்க பிரதிநிதிகள் சபை உறுப்பினரானார். 1973இல் துணை ஜனாதிபதியானார். நிக்சன் பதவி விலகியதால் 1974 ஆகஸ்ட் 9ஆம் தேதி ஜனாதிபதியானார். மக்களால் தேர்ந்தெடுக்கப்படாமல் பதவியேற்றவர் இவர் ஒருவரே. நெல்சன் ராக்பெல்லர் என்பவரை துணை ஜனாதிபதியாக நியமித்தார். ஹென்றி கிஸ் லிங்கர் தொடர்ந்து வெளியுறவு செயலராக நீடித்தார்.

## உள்நாட்டு நிர்வாகம்
## நிக்சனுக்கு மன்னிப்பு

தான் பதவியேற்ற சில நாட்களில் நிக்சனுக்கு மன்னிப்பு வழங்கினார். வியட்நாம் போரின்போது இராணுவத்தை விட்டு ஓடிச்சென்றுவிட்ட ஆயிரக்கணக்கான போர் வீரர்களுக்கும் மன்னிப்பு வழங்கப்பட்டது. 1973ஆம் ஆண்டு நடைபெற்ற அரபு-இஸ்ரேல் போரின் விளைவாக ஏற்பட்ட எண்ணெய் தடையினால் பணவீக்கம் ஏற்பட்டது. எண்ணெய்க்கு மாற்றாக பிற வளங்களை கண்டறிதல், எண்ணெய்க்கு சேமிப்பு முறை கடைப்பிடிக்கப்பட்டது. நுகர்வோரின் நலனுக்காக நான்கு சட்டங்கள் இயற்றப்பட்டன. அரசியல் கட்சிகள் நன்கொடை வசூலிப்பது முறைப்படுத்தப்பட்டது. ஸ்பானிய மொழி பேசுபவர்கள், மொழி சிறுபான்மையோர் ஆகியோருக்கு வாக்குரிமை வழங்கப்பட்டது. இவரைக் கொலை செய்ய 1975இல் இரண்டுமுறை பெண்கள் ஈடுபட்டது அதிர்ச்சியான செயலாகும். பெரோம் மற்றும் சாராஜேன்மூர் என்ற பெண்களின் கொலை முயற்சி தோல்வியடைந்தது. இவர்கள் கைது செய்யப்பட்டு தண்டிக்கப்பட்டனர்.

## வெளிநாட்டுக் கொள்கை

தென்வியட்நாமிற்கு அதிக உதவி செய்ய விரும்பினார். இவரது கோரிக்கை காங்கிரஸினால் மறுக்கப்பட்டது. கம்போடியாவில் கம்யூனிச படைகள் 'கேமரெளஜ்' வெற்றி பெற்றன. கம்போடிய அதிபர் லான்நோல் நாட்டைவிட்டு ஓடினார். 1976இல் கம்யூனிஸ்ட்கள் தென்வியட்நாமில் மீண்டும் ஆட்சியை அமைத்தனர். அமெரிக்காவின் பங்கு முடிவு பெற்றது.

1975 மே மாதம் 'மயாகஸ்' என்ற அமெரிக்க போர்க்கப்பல் ஒன்றை கம்போடிய கப்பல்கள் கைப்பற்றிக் கொண்டன. இக்கப்பல் மீட்கப்பட்ட நடவடிக்கையில் 41 அமெரிக்கர்கள் கொல்லப்பட்டனர். ஐரோப்பாவில் ஹெல்சிங்கில் நடைபெற்ற மாநாட்டில் அமெரிக்காவும் சோவியத் யூனியனும் கலந்து கொண்டன. இரண்டாம் உலகப்போருக்குப்பின் கிழக்கு ஐரோப்பாவில் அமைக்கப்பட்ட எல்லையை மேற்கத்திய நாடுகள் ஒப்புக்கொண்டன. பதிலுக்கு கிழக்கு ஐரோப்பிய கம்யூனிச நாடுகளில் இருந்த பயணக்கட்டுப்பாடுகளை நீக்க கம்யூனிச நாடுகள் ஒப்புக்கொண்டன.

## அலகு 6.7

# ஜிம்மி கார்டர் 1977-1981 (Jimmy Carter)

ஜெரால்ட் போர்டு இரண்டாம்முறை குடியரசுக் கட்சியின் சார்பாக ஜனாதிபதி தேர்தலுக்கு போட்டியிட்ட போது ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த ஜிம்மிகார்டரிடம் தோல்வியடைந்தார். கார்டர் முப்பத்தி ஒன்பதாவது ஜனாதிபதியானார். இவர் ஜியார்ஜியா மாநிலத்தைச் சேர்ந்தவர். கல்லூரிப்படிப்பு முடிந்தவுடன் 1941இல் அமெரிக்க கடற்படையில் சேர்ந்து ஏழு ஆண்டுகள் பணிபுரிந்தார். தன் தந்தை இறந்தபிறகு பண்ணைக்குத் திரும்பினார். நிலக்கடலை சாகுபடியில் சாதனை படைத்தார். 1963இல் ஜியார்ஜியா மாநில செனட்டராக தேர்ந்தெடுக்கப்பட்டார். 1971ஆம் ஆண்டு ஜியார்ஜியா மாநில கவர்னராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1976 ஜனாதிபதி தேர்தலில் ஜனநாயக கட்சியின் சார்பாக போட்டியிட்டு வெற்றி பெற்றார். துணை ஜனாதிபதியாக வால்டர்மோண்டேலும், வெளியுறவுச் செயலராக சைரஸ்வான்ஸ்ஸீம் பதவி வகித்தனர்.

### *மனித உரிமைகளில் அக்கறை*

அமெரிக்க ஜனாதிபதிகளில் ஜிம்மிகார்டரே மனித உரிமைகள் பற்றி அதிக அக்கறை கொண்டவர் எனலாம். மனித உரிமைகள் பற்றி சோவியத் யூனியன் கருத்துக்களை

இவர் ஏற்றுக் கொள்ளவில்லை. மனித உரிமைகள் பற்றிய கார்டரின் கருத்துக்கள் கிழக்கு-மேற்கு போர்நிறுத்த ஒப்பந்தங்களில் பாதிப்பு ஏற்படலாம் என ஐரோப்பிய அரசியல் தலைவர்கள் கவலை கொண்டனர். அமெரிக்காவில் மனித உரிமைகள் சரிவர அமலாக்கப்படவில்லை என்பது அவர்கள் குற்றச்சாட்டாகும். மனித உரிமைகளை அமல்படுத்துவதில் உள்துறை அமைச்சக ஊழியர்கள் முடுக்கிவிடப்பட்டனர். ஐக்கிய நாடுகள் சபையில் ஜனவரி 1977இல் பேசியபொழுது, "எந்தவொரு நாடும் தங்கள் பிரஜைகளுக்கு இழைக்கப்படும் அநீதிகளை தங்களது சொந்தப் பிரச்சினை எனக் கூறக்கூடாது. மேலும் உலகில் எந்த ஒரு பகுதியிலும் நிகழும் மனித உரிமைமீறல்களை, சித்ரவதைகளை, காரணமின்றி மக்களின் உரிமைகளை தடைசெய்வது போன்றவற்றை பார்த்துக்கொண்டு தங்கள் பொறுப்புகளிலிருந்து விலகியிருக்கலாகாது" எனக் கூறினார்.

மனித உரிமைகளை நிலைநாட்டாத நாடுகளுக்கு இராணுவ மற்றும் பொருளாதார உதவிகள் மறுக்கப்படும் என எச்சரித்தார். அமெரிக்கா 130 நாடுகளுடன் இராஜதந்திர உறவு கொண்டிருந்தது. அந்நாடுகளிளெல்லாம் மனித உரிமைமீறல்கள் பற்றி உன்னிப்பாக கவனிக்கத் தொடங்கியது. 1977 இறுதியில் மனிதஉரிமைகள் மீறப்பட்டதாகக் கருதும் நாடுகளுக்கு 500 மில்லியன் டாலர்கள் அளவிற்கு உதவி நிறுத்தப்பட்டது. குறிப்பாக தென்ஆப்பிரிக்க நாடுகளுடன் அமெரிக்காவின் உறவு மோசமடைந்தது. காரணம் அந்நாட்டில் இனவெறியினால் கறுப்பர்கள் இன்னும் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்ததுதான்.

இராணுவ ஆட்சியில் இருந்த பிரேசில், அமெரிக்கா தொடர்ந்து மனிதஉரிமைகளை வலியுறுத்தி வந்ததால் மார்ச் 1977இல் அமெரிக்காவுடனான தனது இராணுவ ஒப்பந்தத்தை ரத்து செய்தது. அர்ஜென்டினாவில் மிகவும் மோசமான முறையில் நடத்தப்படும் மனித உரிமைமீறல்கள் பற்றி ஆராய கார்டர் ஒரு விசாரணைக் குழுவை அனுப்பி வைத்தார். 1979இல் நிகாருகுவாவிற்கு வழங்கிய ஆதரவை விலக்கிக் கொண்டார். மனித உரிமைகள் மீறப்படுவதை கண்காணிக்க ஏற்பாடு செய்தார்.

### *நிர்வாகம்*

ஜிம்மிகார்டர் தனது நிர்வாகம் மக்களுடன் நெருக்கமாக இருக்க விரும்பினார். மாதம் இரண்டு முறை பத்திரிகையாளர் கருத்தரங்கு கூட்டங்களை நடத்தினார். நகர மக்கள் கூட்டங்களில் கலந்து கொண்டனர். தேசியக் கொள்கைகளில் என்ன செய்யலாம் என்பதற்கு மக்கள் நேரடியாகத் தனக்கு தொலைபேசியில் தெரிவிக்கலாம் எனத் தெரிவித்தார். தனது அமைச்சரவையில் பெண்களுக்கும், கறுப்பினத்தவர்களுக்கும், இளைஞர்களுக்கும் வாய்ப்பு அளித்தார். அமெரிக்காவின் கீழ்நிலை நீதிமன்றங்களில் பெண்களுக்கும், சிறுபான்மையினருக்கும் அதிக இடங்கள் அளித்தார். அமெரிக்க வரலாற்றில் இதற்குமுன் இவ்வாறு யாரும் செய்ததில்லை.

தென்பகுதியைச் (ஜியார்ஜியா) சேர்ந்தவராதலால் இவரை வடக்கு மற்றும் மேற்கு பகுதியினரும், செய்தி ஊடகங்களும், அதிகாரவர்க்கமும் அவ்வளவாக விரும்பவில்லை. மதநம்பிக்கை உடையவர். எளிமையான

நடையுடை பாவனை உடையவர். நேரம் தவறாதவர். சுருக்கமாக, சரியாக தெளிவாக உரை நிகழ்த்தக்கூடியவர். ஜனாதிபதி உட்ரோவில்சனைப் போன்ற எண்ணம் கொண்டவர். மனித உரிமைகளிலும், சிறுபான்மை மக்கள் மீதும் அதிக நாட்டம் கொண்டவர். இவரை ட்ரூமனுடனும் ஒப்பிடுவார்கள்.

கல்விக்காக தனியாக ஒரு துறை 1979இல் உருவாக்கப்பட்டது. சுற்றுச்சூழல் வாதிகள் இவரின் நடவடிக்கைகளுக்கு ஆதரவு தந்தனர். அலாஸ்காவில் 100 மில்லியன் ஏக்கர் நிலப்பரப்பை பாதுகாக்கும் நடவடிக்கைகளை மேற்கொண்டார். இரண்டு ரூஸ்வெல்ட்களைப் போல இவர் சுற்றுச்சூழலைப் பாதுகாப்பதில் அக்கறை கொண்டவர். சுற்றுச்சூழல் பாதுகாப்பிற்காக 1977ஆம் ஆண்டு Strip Mining Control and Reclamation Act, Alaska Land Act என்ற இரு சட்டங்களை கொண்டுவந்தார். 1978இல் ஹம்ப்ரே ஹாக்கின்ஸ் முழு வேலைவாய்ப்பு சட்டம் ஒன்றும் இயற்றப்பட்டது. எரிபொருள் பிரச்சினைகளைச் சமாளிக்க பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இவரது ஆட்சிக்காலத்தில் பொருளாதார வீழ்ச்சி ஏற்பட்டது. அது ஒரு உலகளாவிய நிகழ்ச்சி. டாலரின் மதிப்பு குறைந்தது. பணப்புழக்கத்தைக் கட்டுப்படுத்த 6.4 சதவீதமாக இருந்த வட்டி விகிதங்கள் 16 சதவீதமாக உயர்த்தப்பட்டது. இவர் பதவிக்கு வந்ததும் வியட்நாம் போரின் போது போர்ப்பயிற்சியை ஏற்க மறுத்த பத்தாயிரம் பேருக்கு மன்னிப்பு வழங்கினார்.

## வெளியுறவுக் கொள்கை

ஜனாதிபதி ஜான்சன் காலத்தில் அமெரிக்காவுக்கும், பனாமா நாட்டிற்கும் இடையே நடந்த பேச்சுவார்த்தை பதிமூன்று ஆண்டுகளுக்குப் பிறகு கார்டர் காலத்தில் 1977 செப்டம்பரில் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன்படி பனாமா கால்வாய் மற்றும் பனாமாக் கால்வாய் பகுதியை 1999 டிசம்பர் 31ஆம் தேதி பனாமா நாட்டிடம் ஒப்படைக்க முடிவு செய்யப்பட்டது.

மத்தியக் கிழக்கில் சமாதானம் ஏற்பட இஸ்ரேலுக்கும் எகிப்துக்குமிடையே கேம்ப் டேவிட் ஒப்பந்தம் ஏற்பட கார்டர் முயற்சி வெற்றிகரமாக முடிந்தது. எகிப்து அதிபர் அன்வர் சாதத் இஸ்ரேலிய பிரதமர் மெனாசிம் பெகினையும், அமெரிக்காவிலுள்ள கேம்ப் டேவிட் என்ற இடத்தில் பேச்சுவார்த்தையில் ஈடுபடுத்தினார். இந்த ஒப்பந்தப்படி இஸ்ரேல் சினாய் பாலைவனத்தை எகிப்திடம் ஒப்படைத்தது. முப்பது ஆண்டுகளாக நிலவிவந்த எகிப்து இஸ்ரேலிய போர் முடிவிற்கு வந்தது.

1979ஆம் ஆண்டு சீனாவுடன் ராஜதந்திர உறவை அமெரிக்கா ஏற்படுத்திக் கொண்டது. தைவானிலிருந்து அமெரிக்கப்படைகள் விலக்கிக் கொள்ளப்பட்டன. சீனப் பிரதமர் டெங்சியோ பிங் அமெரிக்காவிற்கு நல்லெண்ண விஜயம் செய்தார்.

ஆப்கானிஸ்தானத்தில் இருந்த அமெரிக்கத் தூதர் அடால்ப் டப்ஸ் 1979இல் கொல்லப்பட்டார். அந்நாட்டுடன் எல்லாத் தொடர்புகளையும் அமெரிக்கா துண்டித்துக்

கொண்டது. ஆனால் ரஷ்யா ஆப்கானிஸ்தானத்தின் மீது படையெடுத்த போது அமெரிக்கா கண்டனம் செய்தது. 1980இல் சோவியத் யூனியனுக்கு தானியங்களையும், தொழில்நுட்ப சாதனங்களையும் அனுப்புவது நிறுத்தப்பட்டது. மாஸ்கோவில் நடைபெற்ற ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிகளை அமெரிக்கா புறக்கணித்தது. ஐ.நா. சபையில் சோவியத்யூனியனுக்கு எதிராக தீர்மானமும் இயற்றப்பட்டது.

ஈரானில் புரட்சியாளர்கள் டெஹ்ரானில் உள்ள அமெரிக்கத் தூதரகத்தைக் கைப்பற்றி தூதரக அதிகாரிகளை பிணைக்கைதிகளாகப் பிடித்து வைத்தனர். இவர்களை விடுவிக்க ஈரானிய அதிபர் ஷாரேசா பஹ்லவியை அமெரிக்காவிலிருந்து அனுப்ப வேண்டும் எனக் கோரினார். மதத்தலைவர் ஆயத்துல்லா கோமினியின் ஆணைப்படி பெண்கள், நோயாளிகள் விடுவிக்கப்பட்டனர். அமெரிக்காவிலுள்ள ஈரானிய சொத்துக்களை முடக்க கார்டர் ஆணையிட்டார். தூதரகம் மூடப்பட்டது. ஈரான் மீது பொருளாதார தடைகள் கொண்டுவரப்பட்டன. 1980 ஏப்ரலில் பிணைக்கைதிகளை மீட்க அனுப்பப்பட்ட மீட்புப் படையினர் முயற்சி தோல்வியில் முடிந்தது. 1980 ஜூன் மாதம் பஹ்லவி கெய்ரோவில் மரணமடையவே ஈரான் பிரச்சனை முடிவிற்கு வந்தது. 1980 நவம்பரில் புரட்சியாளர்கள் பிணைக்கைதிகளை விடுவிக்க சம்மதித்தனர். பதிலுக்கு ஈரானிய சொத்துக்களை விடுவிக்க அமெரிக்கா சம்மதித்தது. அமெரிக்கா ஈரானுக்கிடையே பேச்சுவார்த்தைகளை மேற்கொள்ள அல்ஜீரியா நாடு முயற்சி செய்தது. 1981 ஜனவரி 20ஆம் தேதி பிணையக்கைதிகள் அமெரிக்கா சேர்ந்தனர். 1980 நவம்பரில் நடைபெற்ற ஜனாதிபதி தேர்தலில் கார்டர் தோல்வியடைந்தார். பின்னர் தனது பண்ணைக்குத் திரும்பி விட்டார்.

## அலகு 6.8

# ரொனால்ட் ரீகன் (1981-1989)

"பெரும்பாலான அமெரிக்க அதிபர்களெல்லாம் ராணுவக் கல்லூரியில் படித்துவிட்டு கடற்படையிலும், விமானப்படையிலும் உத்தியோகம் பார்த்தவர்களாயிருக்க, ரீகன் ஒரு மாறுதலுக்கு வானொலி அறிவிப்பாளராகத் தன் வாழ்க்கையைத் தொடங்கியவர் ரீகன்."

1980 ஜனாதிபதி தேர்தலில் குடியரசுக் கட்சியின் சார்பாக போட்டியிட்ட ரொனால்ட் ரீகன் வெற்றி பெற்றார். மறுமுறையும் வெற்றி பெற்றார். சோவியத் யூனியனுடன் பேச்சுவார்த்தைகள் நடைபெற்றன. புதிய பொருளாதாரக் கொள்கை 'ரீகனோமிக்ஸ்' என்ற பெயரில் அமல்படுத்தப்பட்டன. இங்கிலாந்துடன் உறவு வலுப்பெற்றது.

ரீகன் இல்லினாய்ஸ் மாநிலத்தைச் சேர்ந்தவர். 1928இல் இல்லினாய்சில் கல்லூரிப் படிப்பை முடித்த பினனர் திரைப்படங்களில் நடிக்க முயற்சி செய்தார். வார்னர் பிரதர்ஸ் என்ற ஹாலிவுட் சினிமா நிறுவனத்தில் நடிகராக 1937ஆம் ஆண்டிலிருந்து ஏழு ஆண்டுகள் திரைப்படங்களில் நடித்தார். 1964ஆம் ஆண்டுத் தேர்தலில் குடியரசு கட்சிக்காக கலிபோர்னியாவில் பிரச்சாரம் செய்து புகழ்பெற்றார். 1967 முதல் 1975 வரை கலிபோர்னியா கவர்னராக பதவிபுரிந்தார். 1980ஆம் ஆண்டு ஜனாதிபதி தேர்தலில் குடியரசுக் கட்சியின் சார்பாக நிறுத்தப்பட்டு வெற்றியும் பெற்றார்.

அமெரிக்க வரலாற்றில் 70 வயதில் ஜனாதிபதியானவர் இவர் ஒருவரே எனலாம். மிகவும் தைரியமானவர்.

துணிச்சலானவர். மார்ச்சு 30, 1981இல் இவர் சுடப்பட்டார். சாவின் விளிம்பிற்குச் சென்ற இவர் மீண்டார். அப்போது 15 ஆயிரம் விமானப் போக்குவரத்து ஊழியர்கள் சட்டபூர்வமற்ற வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர். அவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்த மறுத்ததோடு அனைவரையும் பதவி நீக்கம் செய்தார். புதிய கட்டுப்பாட்டு அதிகாரிகளை நியமித்து அவர்களுக்கு பயிற்சியளிக்கப்பட்டது. இதனை மக்கள் வரவேற்றனர்.

## ரீகனொமிக்ஸ் (Reagonomics)

பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த இவர் எடுத்துக்கொண்ட பொருளாதார சீர்திருத்தங்கள் ரீகனொமிக்ஸ் என்ற பெயரில் அழைக்கப்படுகின்றது. பொருளாதாரத்தில் வரிகள் குறைக்கப்பட்டதால் முதலீடு அதிகரித்தது. இதன் மூலம் தொழிற்சாலைகள் நவீனப்படுத்தப்பட்டு உற்பத்தித்திறன் உயர்த்தப்பட்டது. அதன் மூலம் வேலைவாய்ப்புகள் பெருக வழி ஏற்படுத்துவதே ரீகனொமிக்ஸின் திட்டமாகும். 1982ஆம் வருட பட்ஜெட்டில் பற்றாக்குறை நூறு மில்லியன் டாலர்களாக இருந்தது. கிராம் ராட்மன் ஹாலிங் சட்டம் கொண்டுவரப்பட்டு வரி சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. வரி பளு பெரிய கம்பெனிகள் மீது சுமத்தப்பட்டது. சமுதாயத் திட்டப்பணி செலவு குறைக்கப்பட்டது. சமநிலை வரவு செலவு திட்டம் கொண்டு வர சிரமப்பட்டார்.

## வெளிநாட்டுக் கொள்கை

அமெரிக்கா-கனடாவுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின்படி தடையில்லா வாணிபம் ஏற்பட்டது. பெய்ரூட்டிலிருந்த அமெரிக்கத் தூதரகத்தில் 1983 ஏப்ரலில் குண்டு வெடிக்கப்பட்டது. 16 அமெரிக்கர்கள்

கொல்லப்பட்டனர். அக்டோபரில் அமெரிக்க கப்பற்படை தலைமையகமும் தகர்க்கப்பட்டு 241 அமெரிக்கர்கள் கொல்லப்பட்டனர். 1985ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் இத்தாலிய பயணக்கப்பல் பாலஸ்தீன விடுதலை இயக்கத்தினரால் கடத்தப்பட்டது. 1988இல் அமெரிக்க விமானம் ஸ்காட்லாந்து வானில் வெடிக்கப்பட்டது. இப்படிப்பட்ட பயங்கரவாதச் செயல்களுக்கு லிபியா அதிபர் முகமது கடாபிதான் காரணம் என ரீகன் குற்றம் சாட்டினார். லிபியாவுடன் அரசியல் உறவு துண்டிக்கப்பட்டது. லிபியா மீது அமெரிக்க விமானங்கள் தாக்குதலைத் தொடர்ந்தது. கடாபியின் மாளிகை தாக்கப்பட்டதில் அவரது பெண் குழந்தை இறந்தது. அமெரிக்கா மேலும் கடுமையாக தாக்குதல் நடத்தப்போவதாக அறிவித்தது. கடாபி தனது பயங்கரவாத தாக்குதல்களை நிறுத்தினார்.

ரீகன் ஈரானுக்கு ரகசியமாக ஆயுதம் விற்பனை செய்தார் எனவும், அதில் கிடைத்த லாபத்தின் ஒரு பகுதியை நிகாராகுவாவில் ஆட்சியாளருக்கு எதிராகக் கலவரத்தில் ஈடுபட்டு வந்த கோன்ட்ர குழுவினருக்கு வழங்கியதாக குற்றச்சாட்டு எழுப்பப்பட்டது. ஈரானிடமிருந்து பிணைக்கைதிகளை விடுவிக்க ஈரானுக்கு ஆயுதங்கள் விற்பனை செய்ததாக ரீகன் மீது எழுந்த குற்றச்சாட்டை விசாரிக்க ஜான்டவர் தலைமையில் விசாரணைக் கமிசன் அமைக்கப்பட்டது. ரகசிய பேரம் நடைபெற்றது உண்மைதான் என அக்கமிசன் தீர்ப்பு கூறியது. செனட்டர் டேனியல் சினோய் தலைமையில் விசாரணை செய்த காங்கிரஸ் கூட்டுக் கமிட்டி ரீகன் மீது எந்தத் தவறும் இல்லை என தீர்ப்பு வழங்கியது.

1987இல் பாரசீக வளைகுடாவைக் கடக்க குவைத் எண்ணெய் கப்பலுக்கு உதவி அமெரிக்கா முன்வந்தது. 1987,

மே மாதம் ஈராக்கிய விமானங்கள் தவறுதலாக அமெரிக்க கப்பல் மீது தாக்கியதில் 37 அமெரிக்கர்கள் கொல்லப்பட்டனர். 1988 ஏப்ரலில் அமெரிக்கா ஈரானின் இரண்டு எண்ணெய் வயல்களை அழித்தது. அதன்பின் பாரசீக வளைகுடாவிற்குள் வரும் எல்லா கப்பல்களுக்கும் பாதுகாப்பு அளிக்க அமெரிக்கா முன்வந்தது. 1988 ஜூலையில் அமெரிக்க விமானம் தவறுதலாக ஈரானிய பயணிகள் விமானத்தைச் சுட்டது. 290 பயணிகள் இறந்தனர்.

1983 அக்டோபரில் கிரானடாவில் இடதுசாரிகள் ஆட்சியைக் கைப்பற்றியதால் அங்குள்ள அமெரிக்கர்களை காப்பாற்ற அந்நாட்டின்மீது படையெடுத்தது. அங்குள்ள கம்யூனிஸ்ட்களையும் கியுபா ஆதரவாளர்களையும் ஒழித்த பின்னர் அமெரிக்க படை திரும்பியது.

1983ஆம் ஆண்டு அர்ஜன்டினா தனக்கு அருகில் இருந்த பிரிட்டனுக்குச் சொந்தமான பாக்லாந்து தீவுகளைத் கைப்பற்றியது. அதனால் அங்கிலாந்து அர்ஜன்டினா மீது போர்தொடுத்தது. இப்போரில் இங்கிலாந்திற்கு அமெரிக்கா உதவியது. ரீகன் மன்றோ கோட்பாட்டை மறந்து விட்டார் எனக் கூறப்பட்டது.

தென்ஆப்பிரிக்கா வெள்ளை சிறுபான்மையினரின் ஆட்சியை ரீகன் கண்டித்தார். 1986இல் தென்ஆப்பிரிக்காவில் முதலீடு செய்ய தடை விதிக்கப்பட்டது. இருநாடுகளிடையே வாணிப விமான போக்குவரத்து நிறுத்தப்பட்டது.

### *ரஸ்ய உறவு*

அமெரிக்காவும், ரஸ்யாவும் அணு ஆயுத குறைப்பு பற்றியும், வான்வெளியில் படைக்கலப் போட்டி ஏற்படுவதைத் தடுக்கவும் பேச்சுவார்த்தைகள் நடத்த முடிவு

செய்யப்பட்டன. ஆனால் ரீகன் தனது நட்சத்திரப்போர் (Star Wars) கொள்கையில் உறுதியாக இருந்தார்.

படைக்குறைப்பிற்கான முதலாவது உச்சிமாநாடு 1985 நவம்பர் மாதம் ஜெனிவாவில் நடைபெற்றது. ரஸ்ய அதிபர் கோர்பச்சேவுடன் பேச்சுவார்த்தை நடத்தியதில் நிலத்திலும் வானிலும் நடைபெறும் ஆயுதப்போரின் அழிவுகளை தடுக்க ஒத்துழைப்பதென்று இருவரும் ஒப்புக்கொண்டனர்.

இரண்டாவது உச்சிமாநாடு அக்டோபர் 1986இல் ரெய்ஜ்விக்கில் நடைபெற்றது. இம்மாநாடு தோல்வியில் முடிவடைந்தது. 1987ஆம் வருடம் கோர்பச்சேவ் தானாக முன்வந்து அணுஆயுத குறைப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டார்.

மூன்றாவது உச்சிமாநாடு டிசம்பர் 1987இல் வாஷிங்டனில் நடைபெற்றது. INF – Intermediate Range Nuclear Force Treaty ஒப்பந்தத்தின்படி இரு நாடுகளும் 2800 நடுநிலை அணு ஏவுகணைகளையும், 3100 அணு ஆயுதங்களையும் ஒழிக்க ஒப்புக் கொண்டன.

நான்காவது உச்சிமாநாடு மே, 1988இல் மாஸ்கோவில் நடைபெற்றது. பல படைக்குறைப்பு ஒப்பந்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. இதன்படி கண்டம் விட்டு கண்டம் தாவும் ஏவுகணைகளின் செயல்பாடுகள் பற்றி முன்அறிவிப்பு செய்யவும், அணுகுண்டு சோதனை பற்றி ஒருவருக்கொருவர் நிரூபணம் செய்து கொள்ளவும் ஒப்புக்கொள்ளப்பட்டது.

# அலகு 6.9

## ஜார்ஜ் புஷ் (1989-1993)

"அமெரிக்காவின் 41வது அதிபராகப் பதவி ஏற்றபோது அவரால் என்ன சாதிக்க முடியும் என்று அமெரிக்க மக்களுக்கு உண்மையிலேயே நிறைய சந்தேகம் இருந்தது."

ஜார்ஜ் புஷ் குடியரசுக் கட்சியைச் சேர்ந்தவர். நாற்பத்தியோராவது ஜனாதிபதியாவார். இவர் காலத்தில் சோவியத் யூனியனிலும், கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலும் கம்யூனிசம் வீழ்ச்சியடைந்தது. 1991இல் ஈராக் ஆக்கிரமித்த குவைத்தை மீட்டுக் கொடுத்தார். இவ்விரண்டு நிகழ்ச்சிகளினால் இவர் புகழ் பெற்றவரானார்.

மசாசுசெட்ஸ் மாநிலத்தில் மில்ட்டன் என்ற ஊரில் 1924 ஜூன் மாதம் 12ஆம் தேதி பிறந்தார். பள்ளிப்படிப்பை கிரின்விச் என்ற இடத்தில் முடித்தார். ஃபிலிப் அண்டோவர் அகாடமியில் கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு கப்பற்படையில் சேர்ந்தார். சிறந்த கூடைப்பந்து விளையாட்டு வீரர். 1942இல் கடற்படை வீரராக இரண்டாம் உலகப்போரில் பணிபுரிந்தார். விமாயாகவும் பயிற்சி பெற்றார். ஜப்பானுக்கு எதிரான போரில் குண்டு வீசும் விமானியாகப் பணியாற்றினார். 1945இல் போர் முடிந்த பிறகு யேல் பல்கலைக்கழகத்தில் சேர்ந்து பட்டதாரியானார். 1948 முதல் 1966 வரை ஒரு எண்ணெய் நிறுவனத்தில் பணிபுரிந்தார். 1952-1956 ஆண்டுகளில் ஐசன்ஹோவருக்கு ஆதரவாகப் பிரச்சாரம் செய்தார். 1967-1971ஆம் ஆண்டுகளில் அமெரிக்கப் பிரதிநிதிகள் சபையில் உறுப்பினராக இருந்தார். 1971-1973

வரை ஐக்கிய நாடுகள் சபையில் அமெரிக்க பிரதிநிதியாக பணியாற்றினார். 1974இல் சீனாவில் பணிபுரிந்தார். 1976இல் மைய உளவு நிறுவனத்தின் (CIA) தலைவராகப் பொறுப்பு வகித்தார். 1981-1989 வரை துணை ஜனாதிபதியாக செயல்பட்டார். 1988ஆம் ஆண்டு ஜனாதிபதியானார். டாக்குவேல் துணை ஜனாதிபதியாகவும், ஜேம்ஸ் பேக்சர் வெளியுறவுச் செயலராகவும் பணியாற்றினார்.

## உள்நாட்டுக் கொள்கை

பொருளாதாரம் பாதிக்கப்பட்டிருந்தது. பணவீக்கம் மூன்று சதவீதமாகக் குறைந்திருந்தது. வரவு செலவு திட்டத்தில் 350 மில்லியன் டாலர்கள் பற்றாக்குறை விழுந்தது. புதிய வரிகள் விதிப்பதில்லை என தேர்தல் வாக்குறுதி வழங்கினார். ஆனால் வரி விதிக்காமல் இருக்க முடியவில்லை. வங்கிகள் வழங்கும் கடன்கள் கட்டுப்படுத்தப்பட்டன. கூட்டாட்சி சேமிப்பு மற்றும் கடன் காப்புறுதி கழகம் கலைக்கப்பட்டன. வளரும் நாடுகளுக்கு வழங்கப்பட்ட 300 மில்லியன் டாலர் கடன் தொகையில் இருபது சதவீதம் தள்ளுபடி செய்ய பன்னாட்டு வங்கிகளுக்கு வேண்டுகோள் விடுக்கப்பட்டது.

1989 மார்ச் மாதம் அலாஸ்கா கடல் பகுதியில் ஒரு எண்ணெய் கப்பல் உடைந்து 10.8 மில்லியன் கச்சா எண்ணெய் கடலில் கலந்தது. இது ஒரு மிகப்பெரிய கடல் அழிவாகும். எண்ணெய் கப்பலுக்கு இராணுவ உதவி அளிக்கப்பட்டது. அக்கப்பல் நிறுவனத்திலிருந்து இழப்பீட்டுத் தொகை வசூலிக்கப்பட்டது. சுற்றுச்சூழலை காக்க 1990இல் 'தூய்மைக் காற்றுச் சட்டம்' இயற்றப்பட்டது.

## வெளிநாட்டுக் கொள்கை

நிகாராகுவாவில் சாண்டிநிஸ்டாவின் ஆட்சியைக் கவிழ்க்க அவரின் எதிர்ப்பாளர்களான கான்ட்ரா

எதிர்ப்பாளர்களுக்கு அமெரிக்கா உதவி செய்தது. 1990இல் நிகாராகுவாவில் தேர்தல் நடத்தப்பட்டது. பதினான்கு கட்சி கூட்டணித் தலைவர் திருமதி.சமோரு புதிய ஆட்சியாளர் ஆனார். புஷ் நிர்வாகம் பொருளாதாரத் தடையை நீக்கியது. கான்ட்ரா கலகக்காரர்கள் குழுவை கலைத்துவிடும்படி கூறப்பட்டது.

பனாமா கால்வாய் பகுதிகளில் அமெரிக்க நலன்களைப் பாதுகாக்க 1999 டிசம்பரில் அமெரிக்கா படையெடுத்தது. அதன் ஆட்சியாளர் மேனுவல் அண்டோனியோ நோரிகா சரணடைந்தார். அவர் போதைப்பொருள் கடத்திய குற்றத்திற்காக மியாமி சிறையில் அடைக்கப்பட்டார். குற்றவாளி என நிரூபிக்கப்பட்டார். நாற்பது ஆண்டுகள் சிறை தண்டனை விதிக்கப்பட்டது.

## கெடுபிடி போர் முடிவு

அமெரிக்காவின் கம்யூனிச எதிர்ப்புக் கொள்கை புஷ்ஷின் காலத்தில் முடிவிற்கு வந்தது எனலாம். ராணுவ பலத்தின் அடிப்படையில் கம்யூனிசத்தைப் பரப்ப ரஷ்ய அதிபர் மிகெய்ல் கோர்பசேவ் விரும்பவில்லை. அவரது தாராள கொள்கையின் விளைவாக கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் கம்யூனிச அரசுகள் வீழ்ச்சியடைந்தன.

1990 டிசம்பரில் போலந்தில் லேக் வலேசா என்பவர் தேர்தலில் போட்டியிட்டு அதிபரானார். இவர் சாலிடாரிடி என்ற தொழிலாளர் இயக்கத்தின் தலைவராக செயல்பட்டவர்.

போலந்து கலப்பு பொருளாதாரத்தைக் கடைப்பிடித்ததால் அமெரிக்காவின் ஆதரவு கிடைத்தது. அந்நாடு தரவேண்டிய கடன்கள் ரத்து செய்யப்பட்டது.

1990 அக்டோபரில் கிழக்கு, மேற்கு ஜெர்மனி இணைந்தது. ஜனநாயக முறையில் ஆட்சி அமைக்கப்பட்டது.

1989 நவம்பர் 9ஆம் தேதி பெர்லின் சுவர் இடிக்கப்பட்டது ஒரு வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்ச்சியாகும்.

1989இல் செக்கோஸ்லோவாக்கியாவில் கம்யூனிசம் வீழ்ச்சியடைந்தது. வெக்லவ் ஹேவல் என்பவர் தலைமையில் ஜனநாயக அரசு அமைக்கப்பட்டது.

1989இல் ஹங்கேரியில் கம்யூனிஸ்ட் ஆட்சி கலைக்கப்பட்டது.

1990 ஜனவரியில் யூகோஸ்லாவியாவில் எதிர்க் கட்சிகள் அங்கீகரிக்கப்பட்டது.

1989 கிறிஸ்துமஸ் அன்று ருமேனிய அதிபர் நிகோலே செசாங்கு கொல்லப்பட்டார். புதிய அரசு அமைக்கப்பட்டது.

1989 நவம்பரில் பல்கேரியா அதிபர் டோடர் ஷிவ்கோவ் (ToDer Zivkov) விரட்டப்பட்டு ஜனநாயக முறைப்படி தேர்தல் நடைபெற்றது.

அல்பேனியா 1991 மார்ச் முதல் அமெரிக்காவால் அங்கீகரிக்கப்பட்டது.

சோவியத்யூனியனிலும் பல மாற்றங்கள் நிகழ்ந்தன. அதிபர் கோர்பசேவ் கடைப்பிடித்த பெரஸ்த் ரோய்க்கா, கிளாஸ் நாஸ்ட் என்ற பொருளாதாரக் கொள்கைகள் பல விளைவுகளை உருவாக்கின. 1989 மார்ச் மாதம் நடைபெற்ற தேர்தலில் கம்யூனிசத் தலைவர்கள் தோல்வியடைந்தனர். 1990இல் பல கட்சிமுறை அறிமுகப்படுத்தப்பட்டது. 1991 ஆகஸ்டில் சோவியத் குடியரசுகளுக்கு சுய ஆட்சி வழங்க முடிவு செய்யப்பட்டது. 1991 செப்டம்பரில் லாட்வியா, லிதுவேனியா, எஸ்தோனியா ஆகியவை தங்களை சுதந்திர நாடுகளாக அறிவித்துக் கொண்டன. 1991 கிறிஸ்துமஸ் நாள் அன்று கோர்பசேவ் ராஜினாமா செய்தார். சோவியத் யூனியனை மூடியிருந்த இரும்புத்திரை விலக்கப்பட்டது.

மேலை நாடுகளுடன் கடைபிடிக்கப்பட்ட கெடுபிடி போர் முடிவிற்கு வந்தது.

1990 மார்ச் மாதம் பாரிசில் நடைபெற்ற மாநாட்டில் 20 நாட்டுத் தலைவர்கள் பங்கேற்றனர். எந்தவொரு நாடும் ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளை மேற்கொள்வதில்லை என முடிவு எடுக்கப்பட்டது. 1955இல் உருவான வார்சா ஒப்பந்தம் கலைக்கப்பட்டது. சோவியத் குடியரசுகளில் இருந்து வந்த இராணுவம் திரும்பப்பெறப்பட்டது. சோவியத்யூனியனுக்கு எதிராக இங்கிலாந்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த ஏவுகணைகளை அமெரிக்கா எடுத்துக் கொண்டது. அணுஆயுத உற்பத்தியை குறைப்பதற்கான Start என்ற ஒப்பந்தத்தில் அதிபர் புஷ்ஷிடம், அதிபர் கோர்பசேவும் 1992, ஜூலையில் கையெழுத்திட்டனர்.

ஈராக்கின் அதிபர் சதாம்உசேன் 1990 ஆகஸ்ட்டில் குவைத்தை ஆக்கிரமித்துக் கொண்டார். அமெரிக்கா இதற்கு எதிர்ப்பு தெரிவித்தது. அமெரிக்கத் தலைமையிலான பன்னாட்டுப்படை 1991 ஜனவரி 17ஆம் தேதி ஈராக் மீது படையடுத்தது. 'பாலைவனப்புயல்' (Operation Desert Storm) என்ற பெயரில் அமெரிக்க படைத்தளபதி நார்மன் ஸ்வார்ட்ஸ் கார்ப் தலைமையில் படையெடுப்பு நடந்தது. ஆறு வார தாக்குதலுக்குப் பிறகு குவைத் விடுவிக்கப்பட்டது.

1992 டிசம்பரில் சோமாலியா நாட்டின் பஞ்சத்தைப் போக்க புஷ் உணவு உதவியை வழங்கினார். உலக அரங்கில் அமெரிக்காவின் வலிமை நிரூபிக்கப்பட்டது. இரண்டாம் முறை 1992இல் ஜனாதிபதி தேர்தலில் நின்ற புஷ் தோல்வியடைந்தார்.

## அலகு 6.10

# பில் கிளிண்டன் (1993-2001) (Bill Clinton)

"அனைத்து அமெரிக்க அதிபர்களுக்கு இருந்த இராணுவ ஆர்வம் மட்டும் கிளிண்டனுக்கு இல்லை."

ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த பில் கிளிண்டன் நாற்பத்தி இரண்டாவது ஜனாதிபதியாக 1993இல் பதவியேற்றார். இரண்டுமுறை பதவி வகித்தார். அர்கான்சாஸ் மாநிலத்தைச் சேர்ந்தவர். இவரது ஆட்சிக்காலத்தில் பாலஸ்தீன பிரச்சனைகளுக்கு தீர்வு ஏற்பட்டது. அணுஆயுத தடை ஒப்பந்தம் செய்யப்பட்டது.

இவர் ஜார்ஜ் டவுன் பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்றபின் இங்கிலாந்து சென்று ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழகத்திலும் பயின்றார். 1973இல் யேல் பல்கலைக்கழகத்தில் சட்டம் பயின்றார். 1973-76 வரை சட்டப்பேராசிரியராக அர்கான்சாஸ் பல்கலைக்கழகத்தில் பணியாற்றினார். 1977இல் அர்கான்சாஸ் மாநில அட்டர்னி ஜெனரலாகப் பணிபுரிந்தார். பின்னர் 1983 முதல் 1992 வரை அம்மாநில கவர்னராகவும் பதவி வகித்தார். 1992 ஜனாதிபதி தேர்தலில் வெற்றி பெற்றார். இரண்டாம் முறையும் வெற்றி பெற்றார். துணை ஜனாதிபதியாக ஆல்பர்ட் கோர் என்பவரும், வாரன்கிறிஸ்டோபர் வெளியுறவுச் செயலராகவும் இருந்தனர்.

## *இஸ்ரேல் பாலஸ்தீன உடன்படிக்கை*

1993 செப்டம்பர் மாதம் இஸ்ரேலுக்கும், பாலஸ்தீனியர்களுக்குமிடையே சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டது. இஸ்ரேலிய பிரதமர் இட்சக்ராபினும், பாலஸ்தீன விடுதலை இயக்கத் தலைவர் யாசர் அராபத்தும் கையெழுத்திட்டனர். மேற்குக்கரையில் உள்ள எரிகோ நகரம் மற்றும் காசா பகுதியில் பாலஸ்தீன சுய ஆட்சி அரசு அமைக்கப்பட்டது. மேலும் பிரச்சினைகள் எழுந்தபோது இவ்விரு தலைவர்களையும் அமெரிக்காவிற்கு கிளிண்டன் அழைத்து சமாதான பேச்சு வார்த்தைகள் தொடர்ந்தன. 1999இல் மீண்டும் ஒரு ஒப்பந்தம் செய்யப்பட்டது.

சோமாலியா நாட்டிற்கு மனிதாபிமான அடிப்படையில் உணவுப் பொருட்கள் அனுப்பப்பட்டன. போஸ்னியாவில் செர்பிய இனப்பிரச்சினை தொடர்பாக அமெரிக்கா தலையிட்டு 1995 நவம்பரில் அமைதி ஒப்பந்தம் செய்யப்பட்டது. யூகோஸ்லாவியா நாட்டில் வாழும் செர்பியர்களுக்கும் கொசாவோ மக்களுக்கும் இடையே இனக்கலவரங்கள் நடைபெற்றன. யூகோஸ்லோவியா அதிபர் மென்ஸ்லோவித் சமாதாள முயற்சிகளை ஏற்றுக்கொள்ள மறுத்தார். இதனால் நேட்டோ படைகள் தாக்குதல் தொடுக்கவே அதிபர் பணிந்தார்.

கிளிண்டன் ஆட்சிக் காலத்தில் அமெரிக்க இந்திய நல்லுறவு வலுப்பெற்றது. பாகிஸ்தான் இந்திய கார்கில் பகுதியில் ஊடுருவியதால் கார்கில் போர் ஏற்பட்டது. பாகிஸ்தானின் ஆக்கிரமிப்பு செயல்களை கிளிண்டன் கண்டித்தார். இந்தியாவில் கிளிண்டனும் அவரது மகளும்,

நல்லெண்ணப் பயணம் மேற்கொண்டனர். கிளிண்டன் பதவியில் இல்லாதபோதும் ஜனவரி 2000ஆம் ஆண்டில் குஜராத்தில் ஏற்பட்ட பூகம்பம் நிவாரண உதவிகள் வழங்க ஏப்ரல் மாதம் இந்தியா விஜயம் செய்தார்.

கிளிண்டன் மீது அவரது அலுவலக பணிப்பெண் மோனிக்கா லெவின்ஸ்கியுடன் முறைகேடாக நடந்து கொண்டார் என்று குற்றம் சாட்டப்பட்டது. இவ்வழக்கில் கிளிண்டன் நீதிமன்றத்தில் பொய் கூறினார் என்றும், நீதிமன்ற நிர்வாகத்திற்கு தடை ஏற்படுத்தினார் என்றும் குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டு விசாரணை நடைபெற்றது.

பிரதிநிதிகள் சபையில் கண்டன தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பின்னர் செனட் சபையில் விசாரணை நடைபெற்றது. செனட் சபையில் கிளிண்டன் மீதான கண்டனத் தீர்மானத்திற்கு பெரும்பான்மை கிடைக்காததால் தோல்வியடைந்தது. கிளிண்டனின் பதவி காப்பாற்றப்பட்டது. செனட் சபையால் பதவி நீக்க விசாரணை 1868இல் ஆண்ட்ரூ ஜான்சன் மீது நடத்தப்பட்டது. அதன்பின் இரண்டாவது முறையாக கிளிண்டன் மீது நடைப்பெற்றது. இதனால் இவரது நற்பெயருக்கு களங்கம் ஏற்பட்டது. மக்களிடம் மன்னிப்பு கேட்டார்.

## அலகு 6.11

# ஜார்ஜ் வில்லியம் புஷ் (2001-2009) (George William Bush)

"அமெரிக்காவின் 43வது அதிபராக ஜார்ஜ் புஷ் தேர்ந்தெடுக்கப்பட்ட போது, அமெரிக்க மக்கள் அதனை ஒரே வார்த்தையில் குறிப்பிட்டார்கள் – அதிர்ஷ்டம்."

இவரது தந்தை ஜார்ஜ் புஷ் 1989-1993 ஆம் ஆண்டுகளில் அமெரிக்க ஜனாதிபதியாக இருந்தார். தற்போது அவரது மகன் ஜார்ஜ் வில்லியம் புஷ் நாற்பத்தி மூன்றாவது ஜனாதிபதியாக குடியரசு கட்சியின் சார்பாக தேர்ந்தெடுக்கப்பட்டார். இவருடைய தந்தை திட்டமிட்டு தன் மகனை அரசியலில் உயர்த்தினார். உலகத்தில் இஸ்லாமிய பயங்கரவாதிகள் தங்கள் கொடுரமான தாக்குதல் மூலமாக 2000 செப்டம்பர் 11 அன்று அமெரிக்காவின் வர்த்தக மையக்கட்டிடங்களை விமானம் மூலம் தாக்கியதில் அக்கட்டிடம் இடிந்து சுமார் ஆறாயிரம் பேர் உயிரிழந்தனர். அதே போல் வாஷிங்டனில் உள்ள பென்டகன் ராணுவத் தலைமையிடத்தின் மீது மோதி 200 பேர் உயிரிழக்கச் செய்தனர். இந்த பயங்கரவாதத் தாக்குதல். ஸ்க்ராம் ஜெட் ஆபரேசன் (Seram Jet Operation) என்ற பெயரில் எகிப்து நாட்டைச் சேர்ந்த முகமது அட்டா என்ற தீவரவாதியின் தலைமையில் நடைபெற்றது. அல்கய்தா தீவரவாத இயக்கத் தலைவன் ஒசாமா பின்லேடன் தலைமையில் இஸ்லாமிய

பயங்கரவாதம் இன்று உலக அமைதியை சீர்குலைத்து வருகின்றது.

இந்த ஒசாமா பின்லேடன் ஆப்கானிஸ்தானத்தில் தாலிபான்களின் ஆட்சித்தலைவர் முகம்மது முல்லா ஓமரிடம் அடைக்கலமாக உள்ளான். இவனை அமெரிக்காவிடம் ஒப்படைக்கக் கோரியதை ஏற்க மறுத்ததால் ஆப்கானிஸ்தானத்தின் மீது அமெரிக்கா தாக்குதல்களை தொடுத்தது. தாலிபான் பயங்கரவாதிகளை வளர்த்துவிட்ட பாகிஸ்தான் இப்போது அமெரிக்காவிற்கு ஆதரவாய் செயல்பட்டு வருகின்றது.

இந்திய பாராளுமன்றத்தின் மீது 2001, டிசம்பர் 13ஆம் தேதி இஸ்லாமிய பயங்கரவாதிகள் தாக்குதல் நடத்தியதில் இந்திய பாதுகாப்புப் படையினர் ஆறுபேர் கொல்லப் பட்டனர். இந்தச் சம்பவத்தை புஷ் வன்மையாகக் கண்டித்தார்.

பயங்கரவாதத்தை ஆதரிக்கும் நாடுகளின் பிரஜைகள் அமெரிக்காவிற்குள் நுழையத் தடை விதிக்கும் மசோதா 2000 ஏப்ரலில் நிறைவேற்றப்பட்டது.

### *இஸ்ரேல் பாலஸ்தீன பிரச்சினை 2002*

பாலஸ்தீனிய தீவிரவாதிகள் இஸ்ரேல் மீது தாக்குதல் தொடுத்ததில் இஸ்ரேலிய மக்கள் உயிரிழந்தனர். பதிலுக்கு இஸ்ரேல் பாலஸ்தீனப் பகுதிகள் மீது படையெடுத்தது. இரண்டு பகுதியினரும் உடனடியாகத் தங்கள் தாக்குதல்களை நிறுத்த வேண்டும் என புஷ் கேட்டுக் கொண்டார். ஈராக் அதிபர் சதா உசேன் ரசாயன ஆயுதங்களை உற்பத்தி செய்து

பதுக்கி வைத்திருப்பதாகக் குற்றம்சாட்டி ஈராக் மீது அமெரிக்கா ராணுவ நடவடிக்கைகளை மேற்கொண்டார். இங்கிலாந்தும் சேர்ந்து கொண்டன. 2003 மார்ச் மாதம் தாக்குதல் நடைபெற்றது. தாக்குதல்களில் சதாம் உசேனின் இரண்டு மகன்கள் கொல்லப்பட்டனர். சதாம் உசேனும் பிடிக்கப்பட்டு தூக்கிலிடப்பட்டார்.

அமெரிக்கப் படையெடுப்பை உலக நாடுகள் கண்டித்தன. புஷ்ஷிற்கும் எதிர்ப்பு வலுத்தது. இந்தியாவுடன் 'இந்திய அமெரிக்க சிவிலியன் அணு ஒப்பந்தம்' ஒன்று 2008ஆம் ஆண்டு கையெழுத்தானது.

அமெரிக்காவில் பொருளாதார வீழ்ச்சி தொடங்கியது. எனவே 2008 ஜனாதிபதி தேர்தலில் ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த பராக் ஹுசேன் ஒபாமா வெற்றி பெற்றார். முதலாவது கருப்பர் இன பிரஜை ஜனாதிபதியானார்.

# பின்னுரை

அமெரிக்காவும் இஸ்லாமிய தீவிரவாதக் குழுக்களும் 'வளைகுடா யுத்தத்தைத் தொடர்ந்து குவைத்துக்காக ஈராக் மீது நிகழ்த்தப்பட்ட தாக்குதல், மேற்கு எல்லையில் இஸ்ரேலுக்காகத் தொடர்ந்து செய்துகொண்டிருந்த பேச்சுவார்த்தைகள், சவுதி அரேபியாவுடன் ஏற்படுத்திக் கொண்ட ராஜதந்திரம், ராணுவ ரீதியான நெருக்கங்கள். ஈரானில் கோமேனியுடன் உண்டாக்கிக்கொண்ட பெரும்பகை உள்ளிட்ட பல்வேறு காரணங்களால் தொண்ணூறுகளின் தொடக்கத்தில் அமெரிக்காவின் மீது இஸ்லாமிய அடிப்படை வாத இயக்கங்கள் வெறுப்புக் கொண்டிருந்தன.'

## *ஆப்கான் பிரச்சனை*

இரண்டாம் உலகப்போருக்குப்பின் அமெரிக்காவும், சோவியத் யூனியனும் ஒரு பனிப்போரில் நாற்பது ஆண்டு காலம் ஈடுபட்டன. சோவியத் யூனியன் கோர்பசேவ் காலத்தில் கொண்டுவரப்பட்ட 'பெரித்ராய்ஸ்கா' கொள்கையினால் சிதைவுற்றது. எனவே தனக்கு எதிரே பெரிய வல்லரசு இனியில்லை எனக் கருதியிருந்த அமெரிக்காவிற்கு இஸ்லாமிய அடிப்படை வாத குழுக்கள் ஒரு சவாலாக இருந்தன. மத்தியக் கிழக்கு நாடுகளில் உள்ள எண்ணெய் வளத்தைக் கைக்கொள்ள ஆப்கானிஸ்தானத்தில் இடம்வேண்டும் என்ற நோக்கத்துடன் அமெரிக்கா ஆப்கான் விவகாரங்களில் தலையிட ஆரம்பித்தது. ஆப்கானிஸ்தானும் ரஷ்யாவும் நீண்டகால நட்பு நாடுகள்.

ரஷ்யாவின் கம்யூனிஸ்ட் அரசை முதலில் அங்கீகரித்தது ஆப்கானிஸ்தான் தான். எனவே நட்பு நிரந்தரமானது.

பிரிட்டனிடமிருந்து சுதந்திரம் பெற்றபின் ஆப்கானிஸ்தானத்தில் ஒருவர் மாறி ஒருவர் ஆட்சி அதிகாரத்திற்கு வந்தனர். 1919இல் அமீர் அமானுல்லாகான், 1933இல் முகம்மது ஜாகிர்ஷா, 1973இல் முகம்மது தாவூத் அதிகாரத்தைக் கைப்பற்றினார். ஆப்கான் பழமைவாதிகளுக்கு சோவியத்தின் நட்பு பிடிக்கவில்லை. ஏனெனில் கம்யூனிஸ்ட்கள் நாத்திகர்கள் என்பதால். இவர்கள் இறைநம்பிக்கையுடைய கிறிஸ்த்தவ அமெரிக்காவின் உதவியை எதிர்பார்த்தார்கள். "ஜிம்மிகார்டர் பதவிக் காலத்தில் இதற்குக் சந்தர்ப்பம் கிடைத்தது. சோவியத்யூனியனுக்கு எதிராக ஆப்கானிய மதவாதிகள் ஒன்றிணைக்கப்பட்டு இராணுவப்பயிற்சியை சி.ஐ.ஏ. வழங்கிக் கொண்டிருந்தது. 1978ஆம் ஆண்டு முகம்மது தாவூத்தை ஆப்கான் மக்கள் ஜனநாயகக்கட்சி தூக்கி எறிந்துவிட்டு நூர் முகம்மது தராக்கி ஆட்சியைக் கைப்பற்றினார். இந்த புதிய ஆட்சி விவசாயத்தை தானே ஏற்று நடத்தும் வகையில் ஒரு சட்டத்தைக் கொண்டு வந்தது. இலட்சக்கணக்கான ஆப்கானியர்கள் நிலமிழந்தனர். வாழ்வு பறி போனதைக்கண்டு கொதித்தெழுந்து புரட்சிவாதிகள் ஆயினர். இந்த புரட்சிவாதிகளுக்கு அமெரிக்கா உதவியது. ஆப்கான் ஜனநாயக அரசு சோவியத்யூனியனின் உதவியை நாடியது. ஆக மறுபடியும் அமெரிக்கா, சோவியத்யூனியன் ஆப்கான் விசயமாக எதிரெதிர் அணியில் இருந்தன.

கம்யூனிச நாத்திக ரஷ்யாவை எதிர்க்க அனைத்து இஸ்லாமிய தேசத்து இளைஞர்களை ஒன்று திரட்டினால்

ரஷ்யாவை எளிதாக வீழ்த்தலாம் என்பது ஜனாதிபதி ரொனால்ட் ரீகனின் திட்டம். இதற்காக சவுதிஅரேபியாவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர் ஒசாமா பின்லேடன்.

ஆப்கானிஸ்தான் ஒரு ஏழை நாடு. அங்கு எண்ணெய் வளம் இல்லை. கூட்டுப்பண்ணைத் திட்டம் மூலம் கஞ்சாவும், அபினும் பயிரிடப்பட்டு உலகெங்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன. இந்தப் பணியைப் பல தீவிரவாத குழுக்கள் செய்து வந்தன. இருந்தபோதும் அரபு நாடுகளுக்கும், தூரகிழக்கு நாடுகளுக்கும் நடுவில் இருந்த ஆப்கானிஸ்தான் தனது கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும் என அமெரிக்கா விரும்பியது. அப்போதுதான் அதனுடைய எண்ணெய் வாணிபம் சிறப்புடன் இயங்க முடியும் என்று கருதியது. இந்நிலையில் 1978ஆம் ஆண்டு பதவிக்கு வந்த நூர்முகம்மது தராக்கியை இராணுவத்தளபதி ஹபிகல்லா அமீன் என்பவர் கொலை செய்துவிட்டு ஆட்சியைக் கைப்பற்றினார். ஆப்கானில் அமைதியை நிலைநாட்ட சோவியத் யூனியனின் படை நுழைந்தது. இப்போது ஆப்கானில் ஒரே குழப்பம்.

1. ஹபிகல்லா அமீன் அரசுக்கு எதிராகத் சோவியத் படையெடுப்பு.

2. அமீனுக்கு எதிராக புரட்சிப்படை தாக்குதல்.

3. சோவியத்யூனியனுக்கு எதிரான அமெரிக்காவின் மறைமுகத்தாக்குதல்.

1979ஆம் ஆண்டு சோவியத்யூனியன் தனது படை விமானங்களை காபூலில் இறக்கின. அமீன் சுடப்பட்டார்.

தளபதிகள், அமைச்சர்கள், அரசியல் ஆலோசகர்கள் என அனைவரும் கொல்லப்பட்டனர். சோவியத்தின் கைப்பாவையான பாப்ரக் காமல் பிரதமராக நியமிக்கப்பட்டார். ஆப்கானின் வீழ்ச்சி அமெரிக்காவுக்கும், ஒசாமா பின்லேடனுக்கும் அதிர்ச்சியை அளித்தது. ஒசாமா சவுதியிலிருந்து ஆப்கான் பறந்தார். சவுதி கோடீஸ்வரரின் மகனான ஒசாமா மதப்பற்றும் இறையச்சமும் கொண்டவர். 'ஒன்றுபட்ட அகண்ட இஸ்லாமிய பூமியை' உருவாக்கக் கனவு கண்டார். காபூலுக்குள் ரஷ்யப்படை நுழைந்தபோது ஆப்கான் அடிப்படைவாதத் தலைவர்கள் அனைவரும் பத்திரமாக பாகிஸ்தான் அனுப்பப்பட்டனர். இதற்கு சி.ஐ.ஏ. ஏற்பாடு செய்தது. ஒசாமாவும் பாகிஸ்தான் சென்றார். அங்கு உள்ள தீவிரவாத இயக்கத் தலைவர்கள் ஷேர்ஹானுத்தீன் ரப்பானி மற்றும் ரப்ரசூல் சைஃப் ஆகியோரைச் சந்தித்து சோவியத்யூனியனை எப்படி நாட்டைவிட்டு விரட்டுவது எனத் திட்டமிட்டார். இவர்களுக்கு அமெரிக்க உளவுத்துறை, பிரிட்டன், சவுதி அரேபியா, பாகிஸ்தான் உதவி உண்டு.

இன்றைக்கு அமெரிக்காவின் முதல் எதிரியான ஒசாமா பின்லேடன் அன்றைக்கு அமெரிக்காவின் வளர்ப்பு மகன். அல்கொய்தா அமெரிக்கா வளர்த்த இயக்கம். பின்லேடனை வைத்து சோவியத் யூனியனை ஒழித்துவிட அமெரிக்கா திட்டமிட்டது. சோவியத்துக்கு எதிராகப் போராட இளைஞர்களை திரட்டவும், பயிற்சியளிக்கவும் பாலஸ்தீனத்து போராளி டாக்டர்.அப்துல்லா அசம் பின்லேடனுக்கு உதவினார். மேற்கே அமெரிக்கா தொடங்கி கிழக்கே பிலிப்பைன்ஸ் வரை ஒசாமா இரகசியப் பயணம் செய்தார். 1986இல் பாகிஸ்தானில் பெஷாவரில் தனது அலுவலகத்தைத் திறந்தார்.

டாக்டர்.அப்துல்லா அசமையும், பின்லேடனையும் அமெரிக்கா வரும்படி ரீகன் நிர்வாகம் அழைத்தது. அப்துல்லா மட்டும் அமெரிக்கா சென்றார். சோவியத்யூனியனுக்கு எதிரான முஜாகிதின்களின் போர் நடவடிக்கைகளுக்கு நிதி திரட்டினார். நியுயார்க்க ப்ரூக்களின் நகரில் அலுவலகம் திறந்தார். அமெரிக்கா முழுவதும் சுற்றுப்பயணம் செய்து முஸ்லீம் சமூகத்தினரிடையே 'இஸ்லாமிய சகோதரத்துவ' உணர்வை ஊட்டும் சொற்பொழிவுகள் நடத்தினார். ஒவ்வொரு அலுவலகத்திலும் யாரை நிர்வாகியாக நியமிப்பது என்ற விசயத்தில் அப்துல்லாவிற்கும் ஒசாமாவிற்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. இறுதியில் அப்துல்லா கொலை செய்யப்பட்டார். ஒசாமா நிகரற்ற தலைவர் ஆனார்.

ரஷ்யாவில் 1982இல் பிரஸ்னேவ் காலமானார். ஒசாமாவின் முஜாகிதீன் போராளிகளுக்கு அமெரிக்கா நல்ல பணஉதவி செய்து வந்தது. ரஷ்யாவில் யூரி ஆந்த்ரபோவ் பதவிக்கு வந்தார். அமெரிக்காவில் அப்துல்லா 'அல் ஜிகாத்' என்ற பத்திரிக்கை நடத்தினார். இதில் இஸ்லாத்திற்கு எதிராக மேற்கத்திய நாடுகளில் இழைக்கப்படும் அநீதிகள் விவரிக்கப்பட்டிருந்தன. இதனை ரீகன் கவனிக்கத் தவறிவிட்டார்.

ஹமாஸ் என்ற ரகசிய இயக்கம் பாலஸ்தீனத்தில் உள்ள தலைமையகத்திற்கு ஆயுதங்கள் அனுப்பி வந்ததையும் அமெரிக்க நிர்வாகம் கண்டுகொள்ளவில்லை. இதுதவிர அமெரிக்க மண்ணில் எட்டு இஸ்லாமிய தீவிரவாத இயக்கங்கள் இருந்தன. இந்த இயக்கங்கள் ஆள்சேர்ப்பது, நிதி திரட்டுவது, ஆயுதம் கடத்துவது ஆகிய பணிகளில் ஈடுபட்டன. இதையும் அமெரிக்க அரசு கவனிக்கத்

தவறிவிட்டது. எண்பதுகளின் மத்தியில் புரூக்களின் நகரில் உள்ள ஒரு மசூதியில் ஆயுதங்கள் இருந்ததுகண்டு அமெரிக்க நிர்வாகம் அதிர்ச்சி அடைந்தது. எப்.பி.ஐ. என்ற உளவு நிறுவனம் இந்த இஸ்லாமிய அமைப்புகளைத் கண்காணிக்கத் தொடங்கியது.

இது ஒருபுறமிருக்க அமெரிக்கா, ஈரான் ஈராக் பிரச்சனையில் தலையிட வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. ஈரானில் அமெரிக்க ஆதரவுடன் ஆட்சிபுரிந்து வந்த மன்னர் ஷாவை அப்துல்லா கோமேனி விரட்டிவிட்டு தானே ஆட்சிப் பொறுப்புக்கு வந்தார். இதே சமயம் சதாம் உசேன் ஈராக்கின் அதிபராக இருந்தார். கோமேனி அமெரிக்காவை வெறுத்தார். அமெரிக்க எண்ணெய் நிறுவனங்களுக்கு நெருக்குதல் தரப்பட்டன. வளைகுடா நாடுகளின் தலைவர் என கோமேனி நினைத்துக் கொண்டார். சதாம்உசேனும் அவ்வாறே நினைத்தார். ஈரான் மீதான அமெரிக்கக் கோபத்தை தனக்குச் சாதகமாகப் பயன்படுத்த சதாம் உசேன் திட்டமிட்டார். 1980 செப்டம்பரில் ஈரான் மீது படையெடுத்தார். இவருக்கு ஷா மன்னரின் அதிகாரிகள் உதவினார்கள். கோமேனி கள்ள ஆயுத வியாபாரிகளிடமிருந்து ஆயுதங்கள் பெற்று போர்புரிந்தார். இந்த யுத்தகம் ஷியா-சன்னி பிரிவுகளின் அடிப்படையில் நடந்தன. 1987இல் ஐ.நா. சபையின் தலையீட்டால் சண்டை நிறுத்தத்திற்கு சதாம் உசேன் ஒத்துக் கொண்டார்.

அமெரிக்காவில் இரண்டாம்முறை ரீகன் ஆட்சிக்கு வந்தார். ரஷ்யாவில் கோர்பச்சேவ் பதவிக்கு வந்தார். இருநாட்டுத் தலைவர்களும் சந்தித்துப் பேசினார்கள். 1989இல் கோர்பச்சேவ் ஆப்கான் போரை முடிவிற்குக் கொண்டுவந்தார். சோவியத்யூனியன் சிதறுண்டது.

அமெரிக்கா உலகத் தலைமையின் முதலிடத்தைப் பெற்றது. இனி எதிரி இல்லை என நினைத்த போது சதாம் உசேன் எழுச்சி பெற்றார்.

1990 ஆகஸ்டில் சதாம் குவைத்தின் மீது படையெடுத்தார். எண்ணெய் விலை குறைந்ததற்கு குவைத்தின் நடவடிக்கைகள்தான் காரணம் எனக் கருதினார். அமெரிக்காவில் சீனியர் ஜார்ஜ் புஷ் ஆட்சிக்கு வந்தார். குவைத் அமெரிக்காவின் விசுவாச தேசம். எனவே குவைத்தைக் காப்பாற்ற அமெரிக்கா ஈராக்கின் மீது போர் தொடுத்தது. அமெரிக்கா தனது நட்பு நாடான சவுதி அரேபியாவை குவைத்திற்கு உதவ இராணுவத்தை அனுப்பச் சொன்னது. அதற்குப் பின்னால் அமெரிக்கா, பிரிட்டன், பிரான்சு மற்றும் ஐ.நா. படைகள் அணிவகுத்தன. சதாம் உசேன் இரசாயன உயிர்க்கொல்லி ஆயுதங்களை வைத்திருப்பதாகக் கூறி அவற்றைத் தேடிக் கண்டுபிடித்து அழிக்க அமெரிக்க கூட்டுப்படை முயற்சிகள் மேற்கொண்டன. குவைத்தை விட்டு வெளியேற ஈராக்கிற்கு கெடு விதிக்கப்பட்டது. தாக்குப்பிடிக்க முடியாத சூழ்நிலையில் சதாம் உசேன் போர் நிறுத்தத்திற்கு ஒப்புக்கொண்டார்.

### *அல்கொய்தா நடவடிக்கைகள்*

சதாம் உசேன் போல் ஒசாமா பின்லேடனும் அமெரிக்காவின் இஸ்லாமிய விரோத நடவடிக்கைகள் கண்டு எரிச்சலடைந்தார். அமெரிக்காவில் அல்கொய்தா இயக்கத்தை குருட்டு ஷேஷக் என்றழைக்கப்பட்ட ஷேக் உமர் அப்துல் ரஹ்மான் தலைமையேற்று நடத்தினார். குருடரான இவர் பிரெய்லி முறையில் குர்ஆன் முழுவதும் ஓதிப்பயின்று சிறந்த இஸ்லாமிய மார்க்க அறிஞர் எனப் பெயர் பெற்றவர். தீவிரவாதத்தில் பற்றுடையவர். மக்கள்

மத்தியில் கலகத்தை விதைத்தார் எனக்கூறி எகிப்து இவரை சிறையில் அடைத்தது. எகிப்திலிருந்து சூடானுக்கு தப்பினார். சூடானிலிருந்து அமெரிக்கா சென்றார். இந்த குருட்டுஷேக் மூலம் சில நாச வேலைகளை நடத்த ஒசாமா திட்டமிட்டார்.

1. உலக வர்த்தக கட்டிடம் மீது தாக்குதல்.

2. ஐக்கிய நாடுகள் சபை கட்டிடம் தாக்குதல்.

3. நியுயார்க் நகர சுரங்கச் சாலையில் குண்டு வீசுதல்.

4. அமெரிக்க அயலுறவு அமைச்சகம் தாக்குதல்

ஆகிய திட்டங்கள் தயாரிக்கப்பட்டன.

1993 பிப்ரவரி 26ஆம் தேதி அமெரிக்க வர்த்தக மைய இரட்டைக கோபுரங்களின் அடித்தளத்தில் குண்டு வெடிக்கப்பட்டது. இந்தக் குண்டு வெடிப்பிற்கு காரணமானவர்களை கைது செய்த போது உலகளாவிய இஸ்லாமிய தீவிரவாத இயக்கத்தின் தன்மை வெளிப்பட்டது.

இனி தீவிரவாத இயக்கங்களை அழிக்காவிட்டால் யாருமே நிம்மதியாக வாழ முடியாது என்பதை அமெரிக்க அரசு உணர்ந்தது. தான் அந்த நாள் வரை ஒரு பாம்புக்கு அல்ல ஒரு பாம்பு படைக்கே பால் வார்த்திருப்பதை எண்ணி வருந்தியது. அல்கொய்தா அமெரிக்காவின் அடையாளச் சின்னங்களை குறி வைத்தது. மற்றொரு அமைப்பு ஹமாஸ் இயக்கம் அரசின் முக்கிய அதகாரிகளை குறி வைத்தது. மற்றொரு அமைப்பு MAYA – Muslim Arab Youth Association, அமெரிக்காவில் உள்ள அனைத்து இஸ்லாமிய தீவிரவாத இயக்கங்களை ஒருங்கிணைக்கப் பாடுபட்டது.

ஒசாமா தன்னிருப்பிடத்தை பாகிஸ்தானிலிருந்து சூடானுக்கு மாற்றினார். அமெரிக்காவின் நெருக்குதலினால் சூடானை விட்டு வெளியேறும்படி அதிபர் ஒசாமை கேட்டுக்கொண்டார். மீண்டும் ஆப்கான் சென்றார். அங்கு பரம்பரையாக ஆண்டுவந்த பஷ்ரூன்கள் தங்கள் ஆட்சியை நிறுவ புரட்சியில் ஈடுபட்டனர். இவர்களே தாலிபன்கள். ஒசாமாவிற்கு அடைக்கலம் தந்தனர். கோபம் கொண்ட அமெரிக்கா ஆப்கான் மீது தாக்குதலைத் தொடங்கியது.

அமெரிக்காவில் புஷ்ஷிற்கு அடுத்து பில் கிளிண்டன் பதவிக்கு வந்தார். ஆப்கான் வழியே எண்ணெய் எடுத்துச் செல்ல பைப் லைன் அமைக்கும் முயற்சி தாலிபன்களால் தடைபட்டது. எனவே தனக்குச் சாதகமான அரசை அங்கு நிறுவ முயற்சி செய்தது. கிளிண்டன் இரண்டாம் முறை பதவிக்கு வந்தவுடன் ஒரு பயங்கரவாத தடுப்பு நடவடிக்கைச் சட்டம் கொண்டு வந்தார். அமெரிக்காவில் வாழும் வெளிநாட்டவர்கள் மீது ஏதேனும் கிரிமினல் வழக்கு இருந்தால் உடனடியாக நாட்டைவிட்டு வெளியேற்றப்பட்டனர். இதில் ஏராளமான இஸ்லாமியர்கள் சிக்கினார்கள். 1996-1997இல் அமெரிக்க விசா பெறுவதில் சிக்கல் ஏற்பட்டது. எப்போதும் எல்லாருக்கும் திறந்து வைத்து பழக்கப்பட்ட அமெரிக்கக் கதவுகள் மூடத்தொடங்கின. இஸ்லாமிய தீவரவாதிகளால் அமெரிக்காவிற்கு பெரிய ஆபத்து வரும் என கிளிண்டன் எதிர்பார்த்தார். அமெரிக்காவில் கிளிண்டனின் நடவடிக்கையால் தீவிரவாத அமைப்புகள் தமது திட்டங்களை ஒத்தி வைத்தன. ஆனால் 1998ஆம் ஆண்டு கென்யா மற்றும் தான்சானியாவில் உள்ள அமெரிக்கத் தூதரகங்கள் குண்டு வைத்து தகர்க்கப்பட்டன. ஆத்திரமடைந்த கிளிண்டன் சூடான் மீது குண்டு வீச்சு நடத்தினார்.

ஒசாமா அமெரிக்காவிற்கு எதிராக இஸ்லாமிய நாடுகளின் கூட்டமைப்பைத் திரட்டினார். அமெரிக்காவிற்கு எதிரான புனிதப்போரை அறிவித்தார். 1998 ஆகஸ்ட் 20ம் தேதி அல்கொய்தா முகாம்கள் மீது அமெரிக்கா தாக்குதல் நடத்தியது. இதற்கு பதிலடியாக ஏடன் துறைமுகத்திலிருந்து அமெரிக்கக் கப்பல் அல்கொய்தாவினால் குண்டு வீசி தாக்கப்பட்டது. 17 அமெரிக்க மாலுமிகள் கொல்லப்பட்டனர். அடுத்ததாக பாமியானில் உள்ள புத்தர் சிலைகள் உடைக்கப்பட்டன. ஆப்கான் வடக்கு கூட்டணிப் படை கமாண்டர் அஹமத்ஷா மசூதுக்கு மரணதண்டனை விதித்தார் ஒசாமா.

அமெரிக்காவில் 2000ஆம் ஆண்டில் ஜார்ஜ்புஷ் பதவிக்கு வந்தார். அமெரிக்க ஆதரவாளரான அஹமத் ஷா மசூத் குண்டு வைத்துக் கொல்லப்பட்டார். செப்டம்பர் 11, 2001ல் அல்கொய்தா தீவிரவாதிகளால் உலக வர்த்தக மைய இரட்டை கோபுரங்கள் தகர்க்கப்பட்டன. இராணுவத் தலைமையகம் பென்டகன் தாக்கப்பட்டது. புஷ் புளோரிடாவில் இருந்தார். செய்தியைக் கேள்விப்பட்டதும் "அவர்கள் யுத்தம் தொடங்கிவிட்டார்கள். நாமும் தயாராக வேண்டியதுதான்" எனக் கூறினார். உள்துறைச்செயலர் காலின் பாவெல் பெருநாட்டின் லீமா நகரிலிருந்து விரைந்து வந்தார். "இது அல்கொய்தாவிற்கு எதிரானப் போராக மட்டும் இருக்கக்கூடாது. தீவிரவாத இயக்கங்கள் அனைத்தையும் வேரோடு அழிக்கும் முறையான யுத்தத்தை தொடங்க வேண்டும்" என்றார். செப்டம்பர் 16ஆம் தேதி ஆப்கான் மீது யுத்தப் பிரகடனம் செய்யத் திட்டமிடப்பட்டது.

ஒசாமாவை ஒப்படைக்க வேண்டும் எனத் தாலிபான்களுக்கு கெடு விதிக்கப்பட்டது. முல்லா ஓமர் மறுத்து விட்டார். அக்டோபர் 9ஆம் தேதி காபூல் மற்றும் கந்தஹார் மீது குண்டுகள் வீசப்பட்டன. தாலிபன்கள் மறைவிடங்களைத் தேடி ஓடினார்கள். ஒசாமா தோராபோரா மலைக்குகைகளில் ஒளிந்து கொண்டார். தாலிபன்களின் ஆட்சி முறியடிக்கப்பட்டது. மக்கள் வீட்டைவிட்டு வெளியே வந்து மகிழ்ச்சியடைந்தனர். ஹமீர் கர்சாய் என்பவர் புது ஆட்சியாளராக அறிவிக்கப்பட்டார்.

ஜார்ஜ் புஷ் தனது அடுத்த நடவடிக்கையாக ஈராக்கின் சதாம் உசேனை ஒழிக்க நடவடிக்கை எடுத்தார். சதாம் உசேன் பிடிபட்டு தூக்கிலிடப்பட்டார். சதாமின் கொடுங்கோல் ஆட்சி ஒழிந்தது கண்டு மக்கள் மகிழ்ச்சியடைந்தனர். சதாம் வேட்டையில் குர்தீஸ் இனப் பழங்குடி மக்கள் உதவினார்கள்.

அரபு தேசங்கள் தம் பகையை மறந்து ஒன்று சேர்ந்து தம் எண்ணெய் வளத்தைப் பங்கிட்டுக் காசாக்குமானால் ஒரே இரவில் அமெரிக்காவின் பொருளாதார பலத்தைக் காட்டிலும் அரபு தேசங்களின் பலம் பெருகிவிடும். இந்த அபாயத்தைத் தவிர்க்கத்தான் தொடர்ந்து மத்தியக்கிழக்கு நாடுகள் மீது ஏதாவது காரணம்கொண்டு விடாமல் போர் தொடுத்துக் கொண்டே இருக்கிறது என்று சிலர் கருதுகின்றனர்.

## துணை புரிந்த நூல்கள்


*Allan Nevins and Henry Steele Commager*, A short history of the United States, The Modern Library, New York, 1956.

C.P.Hill, A History of the United States. Arnold. Heinemann, Delhi, 1976.

Dr.Wood Gray & Dr.Richard Hofstadter, An outline of American History, U.S. Information Service, New Delhi.

Henry Banford Parkes, The United States of America A History. Scientific Book Agency, Calcutta, 1964.

Luther S.Luedtke, Making America, The Society and Culture of the United States, Forum Services United States Information Agency, Washington, D.C.1987.

N.Mitteeman, An outline of American Geography, International Communication Agency, Embassy of the United States of America.

Robert Kelley, The Shaping of the American Past, Prentice, Hall International (UK) Limited, London, 1975.

நாகேஸ்வரி அண்ணாமலை, அமெரிக்காவின் மறுபக்கம், அடையாளம், திருச்சி 2009.

பா.ராகவன், டாலர் தேசம், கிழக்குப்பதிப்பகம், சென்னை 2004.

## பிற்சேர்க்கை

# அமெரிக்க வரலாற்றில் சில முக்கிய நிகழ்வுகள்

| | | |
|---|---|---|
| 25000BC | - | வடக்கு ஆசியாவில் உள்ள மக்கள் மூன்றுமுறை அமெரிக்க கண்டத்தினுள் குடிபெயர்தல். |
| 1000AD | - | லெய்ப் எரிக்சன் வடஅமெரிக்க கடல்பிராந்தியத்தில் பயணம் செய்தல். |
| 1300 | - | மெக்ஸிகோ பள்ளத்தாக்கில் நஹுவா (NAHUA) மொழி பேசும் மக்கள் குடியேறுதல். |
| 1430 | - | போர்த்துகீசிய மாலுமிகள் கடல் பிரயாணங்களை மேற்கொண்டு ஆப்பிரிக்க கடற்கரையை அடைதல். |
| 1492-1504 | - | 1492, அக்டோபர் 12 கிறிஸ்டோபர் கொலம்பஸ் பஹாமா தீவுகளில் உள்ள சான் சால்வடார் தீவுகளில் கரையிறங்குதல், ஸ்பெயினின் ஆதிக்கம் பரவுதல். |
| 1493-94 | - | போப்பாண்டவர் ஆணை டோர்டிசில்லாஸ் (Tordesillas) ஒப்பந்தம். |

| | | |
|---|---|---|
| 1497-98 | - | காபாட் (CABOT) வடஅமெரிக்க கடற்கரையை கண்டறிதல். |
| 1499-1501 | - | அமெரிக்கோ வெஸ்புச்சி புதிய உலகில் நிலங்களைக் கண்டறிதல். |
| 1509-47 | - | ஏழாம் ஹென்றியின் ஆட்சிக்காலத்தில் புரோடெஸ்டண்ட் சீர்திருத்தங்கள் ஏற்படுதல். |
| 1534 | - | ஜாக்குயிஸ் கார்டியர் வட அமெரிக்காவில் பிரெஞ்சு நாட்டு உரிமையை நிலை நாட்டுதல். |
| 1558-1603 | - | முதலாம் எலிஸபெத்தின் ஆட்சிக்காலம். |
| 1584 | - | விர்ஜீனியாவில் முதலாவது ஆங்கிலக்குடியேற்றம் ஏற்படல். |
| 1603-49 | - | ஜேம்ஸ் I, சார்லஸ் I ஆட்சிக்காலம், பியூரிட்டன்கள் போராட்டம். |
| 1607 | - | ஜேம்ஸ் டவுணில் ஆங்கிலக் குடியேற்றம் நிறுவுதல். |
| 1619 | - | ஜூலை 30, அமெரிக்காவின் முதலாவது சட்டமன்றம் (House of Burgesses) உருவாதல். |
| 1620 | - | மே பிளவர் ஒப்பந்தம் மசாசூசெட்ஸ் குடியேற்றம் நிறுவப்படல். |
| 1636 | - | அக்டோபர் 28 மசாசூசெட்ஸ், கேம்பிரிட்ஜ் நகரில் அமெரிக்காவின் முதலாவது கல்லூரி ஹார்வர்டு நிறுவப்படல். |

1642 - இங்கிலாந்தில் உள்நாட்டுப்போர்.

1643 - அடிமைகளை ஏற்றிக்கொண்டு முதலாவது கப்பல் அமெரிக்கா அடைதல்.

1644 - ரோடுஐலண்டு சாசனம் பெறுதல்.

1647 - மசாசூசெட்ஸ் பள்ளிக்கூடச் சட்டம் மூலம் இலவசப் பொதுக்கல்வி வழங்க ஏற்பாடு.

1680 - நியுஹாம்ஷயர் சாசனம் பெறுதல்.

1681 - பென்சில்வேனியா குவாக்கர்களால் நிறுவப்படல்.

1688 - இங்கிலாந்தில் புகழ்பெற்ற புரட்சி ஏற்படல்.

1700 - 2,50,000 மக்கள் தொகை ஆங்கிலக் குடியேற்றங்களில் இருந்தனர்.

1749 - ஒஹையோ நதி தீரத்தில் பிரெஞ்சுக் கோட்டைகள் எழுப்புதல்.

1756 - பிரெஞ்சு சிவப்பிந்தியர் போர்கள் தொடக்கம்.

1763 - பாரீஸ் சமாதான ஒப்பந்தம் எல்லைக்கோடு நிர்ணயம்.

1764 - சக்கரை சட்டம் - முத்திரைச் சட்டம்.

1770 - பாஸ்டன் படுகொலை நிகழ்வு

1774 - முதலாவது கண்ட மாநாடு கூட்டப்படல்.

1775 - ஏப்ரல் 19 - லெக்ஸிங்டனில் முதலாவது துப்பாக்கிச் சூடு மூலம் அமெரிக்கச் சுதந்திரப் போர் தொடக்கம்.

| | | |
|---|---|---|
| 1776, | - | ஜூலை 4 - 13 குடியேற்ற நாடுகள் விடுதலைப் பிரகடனம் அறிவித்தல். |
| 1778 | - | பிரெஞ்சுக்காரர்கள் இங்கிலாந்திற்கு எதிராகப் போரில் இறங்குதல். |
| 1781 | - | அக்டோபர் 17, யார்க்டவுணில் (விர்ஜீனியா) ஜெனரல் காரன்வாலிஸ் பிரிட்டிஷ் படைகளுடன் சரணடைதல். |
| 1783 | - | பாரீஸ் அமைதி ஒப்பந்தம் ஏற்படல். |
| 1789 | - | பிப்ரவரி 4, ஜார்ஜ் வாஷிங்டன் முதலாவது ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்படல். |
| 1791 | - | முதல் 10 திருத்தங்கள் - உரிமைகள் மசோதா என்ற பெயரில் நிறைவேற்றப்படல். |
| 1793 | - | பருத்தியிலிருந்து விதை நீக்கும் கருவியை எலிவிட்னே கண்டறிதல். |
| 1794 | - | அஞ்சல் சேவை தொடக்கம். |
| 1800 | - | தாமஸ் ஜெபர்சன் மூன்றாவது ஜனாதிபதியாதல். |
| 1801 | - | டிசம்பர் - புதிய தலைநகர் வாஷிங்டன் (D.C) செயல்பட ஆரம்பித்தல். |
| 1803 | - | லூயிசியானா பகுதி பிரான்சிடமிருந்து விலைக்கு வாங்கப்படல். |
| 1812 | - | பிரிட்டனுடன் போர். |

| | | |
|---|---|---|
| 1813 | - | சிவப்பிந்தியத் தலைவன் டெக்கும்சி கொல்லப்படல். |
| 1814 | - | வாஷிங்டன் நகர் தீயிடப்படல். |
| 1819 | - | ஸ்பெயினிடமிருந்து புளோரிடா விலைக்கு வாங்கப்படல். |
| 1820 | - | மிசெளரி ஒப்பந்தம். |
| 1823 | - | மன்றோ கோட்பாடு வெளியிடப்படல். |
| 1828 | - | ஆண்ட்ரு ஜாக்சன் ஏழாவது ஜனாதிபதியாதல். |
| 1833 | - | ஹஸ்ஸோ அறுவடை இயந்திரம் மக்கார்மிக் அறுவடை இயந்திரம் அறிமுகம். |
| 1839 | - | சார்லஸ் குட்இயர் - ரப்பரை மேம்படுத்தும் முறையை கண்டறிதல். |
| 1844 | - | சாமுவேல் மோர்ஸ் - தந்தி முறையை அறிமுகப்படுத்துதல். வாஷிங்டன் D.C. யிலிருந்து பால்டிமோர் வரை தந்தி அனுப்புதல். |
| 1845 | - | டெக்ஸாஸ் இணைக்கப்படல். |
| 1846 | - | 49-வது அட்சரேகை எல்லைக்கோடு நிர்ணயிக்கப்படல். |
| 1849 | - | தங்கவேட்டைக்காக கலிபோர்ணியா நோக்கி மக்கள் விரைந்து செல்லல். |
| 1853 | - | கட்ஸ்டன் பகுதி விலைக்கு வாங்கப்படல். |
| 1854 | - | கான்சாஸ் - நெப்ராஸ்கா சட்டம். ரிபப்ளிகன் கட்சி உருவாதல். |

| | | |
|---|---|---|
| 1860 | - | ஆப்ரகாம்லிங்கன் 16வது ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்படல். |
| 1863 | - | ஆப்ரகாம்லிங்கன் அடிமை ஒழிப்பு பிரகடனம் செய்தல். தென்மாநிலங்களில் அடிமைகள் விடுதலை. |
| 1865 | - | ஏப்ரல் 9 உள்நாட்டு போர் முடிவு. |
| 1865 | - | ஏப்ரல் 14 ஜனாதிபதி ஆப்ரகாம் லிங்கன் தலைநகரில் சுடப்படுதல். 13வது அரசியல் அமைப்பு திருத்தம் - அடிமை முறையை தடை செய்தல். |
| 1867 | - | ரஸ்யாவிடமிருந்து அலாஸ்கா விலைக்கு வாங்கப்படல். |
| 1868 | - | 14-வது அரசியல் அமைப்பு திருத்தம் மூலம் அமெரிக்காவில் பிறந்த அனைவருக்கும் குடியுரிமை வழங்கப்படல். |
| 1878 | - | முதலாவது டெலிபோன் எக்சேஞ்ச் நிறுவப்படல். |
| 1879 | - | தாமஸ் ஆல்வா எடிசன் மின்சார விளக்குகளை கண்டறிந்தார். |
| 1889 | - | 21 அமெரிக்கக் குடியரசுகள் கலந்து கொண்ட பரந்த அமெரிக்க கூட்டமைப்பு Pan-American Union உருவாதல். |

| | | |
|---|---|---|
| 1898 | - | ஸ்பெயினுடன் போர் தொடக்கம். |
| 1901 | - | செப்டம்பர் 14 ஜனாதிபதி வில்லியம் மக்கென்லி சுடப்படல். |
| 1902 | - | அமெரிக்காவின் முதலாவது திரையரங்கு லாஸ்ஏஞ்சல்ஸ் நகரில் தொடங்கப்படல். |
| 1903 | - | டிசம்பர் 17, ரைட் சகோதரர்கள் விமானம் மூலம் பறக்கும் நிகழ்ச்சி - வட கரோலினா 'கிட்டிஹாக்' என்ற இடம். |
| 1909 | - | ஏப்ரல் 6, கடற்படைத்தளபதி ராபர்ட் E.பெர்ரி வடதுருவம் அடைதல். |
| 1912 | - | அரிஸோனா பிரதேசம் 48வது மாநிலமாதல். |
| 1912 | - | உட்ரோவில்சன் 28வது ஜனாதிபதியாதல். |
| 1914 | - | பனாமா கால்வாய் கப்பல் போக்குவரத்திற்கு திறந்து விடப்படல். |
| 1917 | - | ஏப்ரல் 6, அமெரிக்கா முதல் உலகப்போரில் கலந்து கொள்ளுதல். |
| 1918 | - | நவம்பர் 11, உலகப்போர் நிறுத்தம். |
| 1919 | - | மதுவிலக்கு அமலாக்கம். 18வது அரசியல் அமைப்பு திருத்தம். |
| 1920 | - | 19-வது அரசியல் அமைப்புத் திருத்தம். பெண்களுக்கு வாக்குரிமை வழங்கியது. |
| 1927 | - | ஜனவரி 1 - வானொலி சேவை மூலம் அமெரிக்கா முழுவதும் இணைக்கப்படல் சார்லஸ் A.லிண்ட்யர்க் நியுயார்க்கிலிருந்து பாரீஸ் வரை அட்லாண்டிக் கடல்பரப்பின் மீது பறந்து சாதனை புரிந்தார். |

| | | |
|---|---|---|
| 1928 | - | வார்னர் சகோதரர்களால், ஜாஸ் பாடகர் (The Jazz Singer) என்ற திரைப்படம் ஒலி வசதியுடன் திரையிடப்பட்டது. |
| 1929 | - | அக்டோபர் 29, பங்குச் சந்தை வீழ்ச்சி - பொருளாதாரம் பாதிப்பு. |
| 1932 | - | பிராங்களின்-டி-ரூஸ்வெல்ட் 32வது ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்படல். |
| 1933 | - | 'நியுடியல்' - கொள்கை அமலாக்கம் மதுவிலக்கு ரத்து செய்யப்படல். |
| 1935 | - | சமூகப்பாதுகாப்புச் சட்டம் (Social Security Act) மூலம் முதியோர், வேலையற்றோருக்கு நிவாரணம். |
| 1936 | - | மூன்றாவது முறையாக பிராங்களின்-டி ரூஸ்வெல்ட் தேர்ந்தெடுக்கப்படல். |
| 1939 | - | இரண்டாம் உலகப்போரில் அமெரிக்கா நடுநிலை பிரகடனம். |
| 1941 | - | டிசம்பர் 7, ஹவாயில் உள்ள பெர்ல் துறைமுகம் ஜப்பானிய விமானங்களால் தாக்கப்படல். அமெரிக்கா போரில் கலந்து கொள்ளல். |
| 1942 | - | நவம்பர் 4, அமெரிக்கப் படைகள் வடஆப்பிரிக்காவில் நுழைதல். |
| 1943 | - | ஜுலை 9, நேசப்படையினர் இத்தாலியின் சிசிலியை கைப்பற்றுதல். |

| | | |
|---|---|---|
| 1944 | - | ஜுன் 4, ரோம் நகரம் மீட்கப்படல். ஆகஸ்ட் 24, பாரீஸ் மீட்கப்படல், அக்டோபர் 20, பிலிப்பைன்ஸில் அமெரிக்கப் படைகள் நுழைதல். |
| 1945 | - | ஏப்ரல் 12 F.D.ரூஸ்வெல்ட் மரணம், ஹாரிட்ரூமன் ஜனாதிபதியாதல். மே 7, நாஜி படைகள் சரணடைதல், ஜுன் 26, ஐக்கிய நாடுகள் சாசனம் - சான் பிரான்ஸிஸ்கோ நகரில் 49 நாடுகள் கையொப்பமிடல். |
| 1945 | - | ஆகஸ்ட் 6 - ஹிரோஷிமா மீது அணுகுண்டு வீசப்படல். |
| 1946 | - | ஜுலை 4, பிலிப்பைன்ஸ் சுதந்திர நாடானது. |
| 1946 | - | ஸ்டாலின் - முதலாளித்துவ நாடுகளுக்கு எதிராக குரல் எழுப்புதல். ரஸ்ய - அமெரிக்க பனிப்போர் துவக்கம். |
| 1947 | - | ட்ரூமன் கோட்பாடு - மார்□ல் திட்டம் அறிவிக்கப்படல். 6 ஆயிரம் கோடி டாலர்கள் நிதி உதவி திட்டம், |
| 1948-49 | - | பெர்லின் மீட்கப்படல் - நாட்டோ (NATO) ஒப்பந்தம் ஏற்படல். |
| 1950-53 | - | கொரியாப் போர். |
| 1952 | - | டிவைட் ஐஸன் ஹோவர் 34வது ஜனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்படல். |
| 1954 | - | சியாட்டோ (SEATO) ஒப்பந்தம் ஏற்படல். |

1957 - ரஸ்ஸா, ஸ்புட்னிக் I என்ற விண்கலம் ஏவியது.

1958 - லெபனான் அமெரிக்காவால் கைப்பற்றப்பட்டது.

1959 - அமெரிக்காவில் ஐஸனோவரும், குருச்சேவ்வும் சந்திப்பு.

1960 - ஜான் எப் கென்னடி 35வது அதிபராதல்.

1961 - கென்னடியின் உத்தரவால் சந்திரனில் மனிதன் இறங்கும் திட்டம் செயல்பட ஆரம்பித்தல், அமைதிபடை தொண்டர்கள் அமைப்பு.

1962 - கியூபாவிலிருந்து ரஸ்ய படைக்கலன்கள் விலக்கிக் கொள்ளப்படல்.

1963 - கறுப்பின மக்கள் இயக்க வாதிகள் மீது போலீஸ் தாக்குதல்.நவம்பர் 22 - ஜனாதிபதி கென்னடி சுடப்படல்.

லிண்டன் ஜான்சன் 36வது ஜனாதிபதியாதல்.

1964 - ஜனாதிபதி ஜான்சன் சிவில் உரிமைகள் சட்டத்திற்கு கையெழுத்திட்டார்.

1965 - ஜெமினி விண்வெளிக் கலங்கள் 6 முறை விண்வெளி பயணம் செய்தது.

மரினா - 4 என்ற ஆளில்லா ராக்கெட் செவ்வாய் கிரகத்தை நோக்கி 8 மாதம் பயணம் செய்து 240 மில்லியன் கிலோ

மீட்டர்களுக்கு அப்பாலிலிருந்து புகைப்படங்களை அனுப்பியது மிகப்பெரிய விண்வெளிச் சாதனையாகும்.

1966 - ஆளில்லா சர்வேயர் I என்ற விண்கலம் சந்திரனில் இறங்கியது.

1967 - அப்பல்லோ விண்கல விபத்தில் 3 வானியல் மாலுமிகள் கொல்லப்பட்டனர்.

1968 - ஏப்ரல் 4 மார்டின் லூதர் கிங் அமைதிக்கான நோபல் பரிசு பெற்றார். சுட்டும் கொல்லப்பட்டார்.

1969 - ஜுலை 20 அப்பல்லோ II விண்வெளி மாலுமிகள் நெய்ல் ஆர்ம்ஸ்ட்ராங், எட்வின் அல்ட்ரின், சந்திரனின் மேற்பரப்பில் காலூன்றினர். 4 லட்சம் கிலோ மீட்டர் தொலைவில் நடந்த இந்நிகழ்ச்சியை பூமியில் உள்ளவர்கள் டெலிவிஷன் மூலம் காண முடிந்தது.

1970 - அமெரிக்கா மிகப்பெரும் பொருளாதார வளர்ச்சி பெற்றது

- நாட்டு மக்கள் தொகை 203235298 என கூறப்பட்டது.

1971 - 26வது அரசியல் அமைப்பு திருத்தம் வாக்களிக்கும் குறைந்தபட்ச வயது 18 என நிர்ணயித்தது.

1972 - ஜனாதிபதி நிக்ஸன் சீன விஜயம் மற்றும் ரஸ்யாவுக்கும் விஜயம் செய்தார்.

